# கடற்கரைப் பரதவர் கலைச்சொல் அகராதி

ச. முருகானந்தம்

எம்.ஏ., எம்.எட்., (பிஎச்.டி.) டிப்ளமோ - காந்தியம்

தேன்மழைப் பதிப்பகம்

34, கொத்தவால் தெரு, ஆலந்தூர்,

சென்னை - 600 016

# நூல் விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | கடற்கரைப் பரதவர் கலைச்சொல் அகராதி |
| ஆசிரியர் | : | ச. முருகானந்தம் |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | டிசம்பர் 1999 |
| உரிமை | : | © ஆசிரியருக்கு |
| பக்கம் | : | viii + 388 = 396 |
| அச்சிட்டோர் | : | ஸ்ரீ வெங்கடேஸ்வரா அச்சகம்<br>சென்னை - 16. |
| வெளியீட்டாளர் | : | தேன்மழைப் பதிப்பகம்<br>34, கொத்தவால் தெரு,<br>ஆலந்தூர், சென்னை-16. |
| விலை | : | ரூ. 75.00 |

# பொருளடக்கம்


I 1. தமிழ்நாடும் அதன் பூர்வீக மக்களான பரதவர்களும் 1

2. இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்கள் பற்றிய பொதுச் செய்திகள் 8

3. இரு மாவட்டங்களில் வாழும் கடற்கரைப் பரதவர் 10

4. கடற்கரைப் பரதவர் தொழில்கள் 14

5. அகராதிக்கலை : விளக்கம், வரலாறு, வகைமை 21

6. தொழிற்கலைச் சொல்லகராதி 32

7. தொழிற்கலைச் சொற்கள்—ஓர் ஆய்வு 173

8. முடிவுரை 176

II பின்னிணைப்பு

1. செங்கற்பட்டு, சென்னை மாவட்டக் கடற்கரைப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள் 181

2. கன்னியாகுமரி மாவட்டக் கடற்கரைப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள் 193

3. யாழ்ப்பாணக் கரையோரப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள் 198

4. மட்டக்களப்பு மாவட்டப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள் 223

5. தூத்துக்குடி கிருத்துவப் பரதவர் வழக்குச் சொற்கள் 265

6. கப்பல் சாத்திரம், கப்பல் சிந்து நூற்கலைச் சொற்கள் 286

III 1. பண்டைத் தமிழர் கடல்துறைத் தொடர்புடைய சொல்லாட்சிகள் 291

அறிக்கைகள் :

திருநெல்வேலி மாவட்டம் - கடற்கரைப் பரதவர்கள் :

உறைவிடம், தொகை பற்றிய விவரங்கள் 312

தொகை, சமயம், சிறுவர், வளர்ந்தவர்,
கூட்டுறவுச் சங்க உறுப்பினர் பற்றிய விவரங்கள் 314
தொகை (வயதுவாரி) 316
தொழில் பற்றிய விவர அட்டவணை 318
கடற்கரைப் பரதவர்-இவரைச் சார்ந்தவர்
பற்றிய விவரங்கள் 320
மாத சராசரி வருமானமும் கடற்கலங்கள்
பற்றிய விவரமும் 322
கருவிகள் பற்றிய பட்டியல் 324

இராமநாதபுரம் மாவட்டம்—கடற்கரைப் பரதவர்கள் :

உறைவிடம், தொகை பற்றிய விவரங்கள் 326
தொகை, சமயம், சிறுவர், வளர்ந்தவர், கூட்டுறவுச்
சங்க உறுப்பினர் பற்றிய விவரங்கள் 331
தொகை (வயது வாரி) 336
தொழில்பற்றிய விவர அட்டவணை 341
கடற்கரைப் பரதவர்—இவரைச் சார்ந்தவர் பற்றிய
விவரங்கள் 346
மாத சராசரி வருமானமும், கடற்கலங்கள் பற்றிய
விவரமும் 351
கருவிகள் பற்றிய பட்டியல் 356
வலைகளின் விவரம் 361
தமிழ்நாட்டின் மாவட்டப் பிரிவுகள் 366
இலங்கையின் மாவட்டப் பிரிவுகள் 367

2. பரதவர் தொடர்புடைய தாளிகைகள் 369
3. பரதவர் ஆய்வுக்குத் துணையாகும் கருவி நூல்கள்
(செயல் துணை ஆய்வடங்கல்) 371

# 1

# தமிழ்நாடும் அதன் பூர்வீக மக்களான பரதவர்களும்

தமிழ்நாடு புவியியலாளராலும் மானுடவியலாளராலும் மிகவும் புராதனமானது எனப் பேசப்படுகிறது. தமிழகத்தின் படுகைத் தளங்கள் பனி உறை காலத்தவை என்றும் திருநெல்வேலி மாவட்ட மண்படுகைகள் கி.மு 4000-க்கு முற்பட்டவை என்றும் வரலாற்றறிஞர்கள் கூறுகின்றனர்.[1] இம்மண்ணின் மைந்தர்கள் தொல்குடியினர் என்பதற்கும் வீரயுகக்காலத்தினர் என்பதற்கும் போதுமான சான்றாதாரங்களைக் கொண்டன வாகச் சான்றோர் செய்யுட்களும் இவைகுறித்த ஆராய்ச்சி நூல் களும் விளங்குகின்றன.[2]

தமிழகத்தின் தொல்குடியினர் எவ்வின மக்கள் என்பது குறித்து அறிஞர்கள் தமது கருத்துக்களைத் தெரிவித்திருக்கின்றனர். சீனிவாச ஐயங்கார் ஆரியர், திராவிடர், நாகர் எனும் இனப்பெயர் கள் எவ்வெவரைக் குறிப்பிடுகின்றன என்பதை ஆயுமிடத்து, ஆரியர் எனும் சொல் பிராமணரைக் குறிப்பதாகவும் திராவிடர் எனும் சொல் வேளாளரைக் குறிப்பிடுவதாகவும் நாகர் எனும் சொல் கள்ளிறக்குவோர், வலை வீசுவோர், வேட்டையாடு வோர், பறையடிப்போர் எனும் தொடக்கத்தினரானவர்களைக் குறிப்பிடுவதாகவும் கருதுகிறார்.[3] இந்நாகர் இனத்தினர் அத் துணைப்பேரும் நிலத்துடன் நேரடித்தொடர்பு இல்லாத இடங்கைப்பிரிவினர் என்பதும் இங்குக் கருதத்தக்கது.[4]

இவருன், பரதர், பரதவர், பரவர், பரவா, வலையர் எனும் சொற்கள் நாகர் இனத்தவரான மீனவர்களைக் குறிக்கும் சொற்

களாகும் என்பது ஜேம்ஸ் ஆர்னலின் முடிவு.[5] இவர்கள் மிகவும் தொன்மையான மக்களாவர். வலைவீசி மீன்பிடிக்கும் இம்மக்கள் பாண்டியர்களோடு தொடர்புபடுத்தப் பட்டிருத்தல் கவனத்திற்குரியதாகும்.

பாண்டியரின் இலச்சினை மீன்.[6] செல்வம் முத்து. முத்தே தமிழ் நாட்டின் அரசியல், சமூக வரலாறுகளுக்கு வித்தாக இருந்திருக்கின்றது.[7] முத்துக் குளிக்கும் உரிமைக்காகவே பாண்டியர்களுடன் சிங்களவர்களும் போரிட்டிருக்கின்றனர். உள்நாட்டு அரசியல் சிக்கலுக்கு மட்டும் இது காரணமாய் இல்லாமல் வெளி நாட்டார் பொருளாதாரச் சீரழிவுக்கும்[8] இதுவே காரணமாய் இருந்தமையை வரலாற்றாசிரியர்கள் ஒப்புகின்றனர். பரதவரின் உழைப்பால் கிடைக்கும் மீனும் முத்தும் பாண்டியர் வாழ்வுடன் இணைந்தவை. இதுவே இவ்விருவர் தொடர்புமாகும். இது காரணம் பற்றியே மாங்குடி மருதனார் தமது மதுரைக்காஞ்சியில் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைக் 'கொற்கைக் காவலன்', பரதவர் தலைவன் எனக் குறிப்பிடுகிறார்.[9] பெருவாரியான மக்களைக் கொண்ட பரதவ சமூகத்திற்கும் அரசுக்கும் நல்லுறவு நிலவியதையும் பரதவ சமூகத்தால் அரசுக்கு வருவாய் பெருகியதையும் மேற்கண்ட சொற்றொடர்கள் எடுத்துக்காட்டுகின்றன.

ஓரிரு சமயங்களில் பரதவர் சமூகத்தினர் பாண்டியருடன் பகைமை கொண்டு மோதியிருப்பதாகத் தெரிகிறது. கி. பி. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த அரிகேசரி மாறவர்மன் பரதவருடன் உண்டான போரில் வெற்றி பெற்று அவர்களை அடக்கினான் என்று டாக்டர் கே.வி. இராமன் கூறுகிறார்.[10] பாண்டியர் செப்பேடு ஒன்றில் 'பரவரைப் பாழ்படுத்தும்' எனும் சொற்றொடர் காணக்கிடக்கிறது.[11] இத்தொடருக்குப் 'பாழ்படுத்துகிற', 'பாழ்படுத்தியும்' எனும் பொருள்கள் கொள்ளலாம். இதனால் பரதவர்க்குப் பகைவர்களான குறுகாட்டவர்களைப் பாழ்படுத்தியது பாண்டியரின் அருஞ்செயல் என ஒரு செய்தியும் பரதவரைப் பாழ்படுத்தியது பாண்டியரின் அருஞ்செயல் என இன்னொரு செய்தியும் கிடைக்கின்றன. முதல் செய்தி பரதவர்-பாண்டியர் நல்லுறவைச் சுட்டுகிறது. இதற்கு மாங்குடி மருதனார் கருத்து வலிவு தருவதாக அமைந்துள்ளது. இரண்டாம் செய்தி பரதவர்-பாண்டியர்

பகைமையைச் சொல்கிறது. இதற்கு கே.வி. இராமன் கருத்து வலியூட்டுகிறது. இது எங்ஙனமாயினும் பரதவர் பாண்டியருடன் பகைமையோ நல்லுறவோ கொள்ளுமளவுக்குத் தொன்மையும் வன்மையும் பெற்றிருந்தனர் எனும் முடிவுக்கு வரலாம்.

இங்ஙனம் இருந்த உறவுநிலை பின்னர்ச் சீர்குலைகிறது. 'நிலம்-உழைப்பு-உற்பத்தி-உபரிலாபம்-சேமிப்பு-நிலம்' எனும் சுழற்சிக்கு மனித சிந்தனை தாவிப் பெருவளர்ச்சி பெற்ற காலகட்டத்தில் தவிர்க்கவியலாத சமூக நிகழ்ச்சியாக உழைக்கும் மக்கள் பின்னுக்குத் தள்ளப்படுதலும் அறிவு வர்க்கத்தினர் முன்னுக்கு வருதலும் நிகழ்கின்றன. இவ்வரலாற்று ரீதிகளான சமூகநிகழ்ச்சியின் விளைவாக வேட்டுவர் முதலான உழைக்கும் இனக் குடிமக்களைப் போலவே சமூக மதிப்பில் பரதவர்களும் கீழ் இறங்குகின்றனர். மேல்தட்டு மக்களான உடைமை வர்க்கத்தினரின் சமூக மதிப்போடு இவர்களை ஒப்பிடுமிடத்து இவர்தம் நிலைமை மிகவும் கீழிறங்கியதாகலாம் எனக் கருத இடமுள்ளது.[12] திருவாங்கூர் மகாராஜா தமது கட்டளையொன்றில்[13] பரதவரைக் கள்ளிறக்கும் தொழில் செய்வாருடன் ஒருங்கிணைத்து ஒப்பிட்டுக் காட்டுவதானது பரதவரின் சமூக மதிப்பு பற்றிய கருத்தை வலிமைப்படுத்துவதாகும். சமூகவிடுதலை இல்லாமல் முடங்கிக்கிடக்கும் மக்களுக்கு விடுதலை வேண்டும் என மகாகவி பாரதி விடுதலைக்கீதம் இசைக்குமிடத்து பரதவரை அவரன்ன மக்களோடு ஓரணிப்படுத்தியமையும்[14] ஈண்டு கவனத்திற்குரியதாகி மேற்கண்ட கருத்தினை மேலும் உறுதிப்படுத்தல் காணலாம்.

இடைக்காலத்தில் தண்டனை அடைந்த குற்றவாளிகளை முத்துக்குளிக்கும் தொழிலில் அரசு ஈடுபடுத்தியமையும் பரதவரின் சமூக மதிப்புடன் ஒருங்கெண்ணத்தக்கதாகும்.[15] இந்தச் சமூக அமைப்பில் வலையரே கடைசித்தட்டு மக்களாக இருந்திருக்கின்றனர் என்று நீலகண்ட சாஸ்திரி தெரிவிக்கின்றார்.[16]

மேல்நாட்டாரின் வருகைக்குப் பின்னர், இப்படிப்பட்டச் சமூக மதிப்பிலிருந்து விடுபட்டு மேனிலை எய்த வேண்டும் எனும் எண்ணம் இச்சமூகத்தார்க்கு உண்டானதன் விளைவாக இவரன்ன பிற மக்களைப் போலவே இவர்களும் பெருவாரி

யாகக் கிருத்துவச் சமயத்தைத் தழுவினர். சுமார் 450 ஆண்டு களுக்கு முன்பாகத் திருநெல்வேலி மாவட்டத்தில் ஒரே நாளில் 20,000 பரதவர்கள் ரோமன் கத்தோலிக்கராக மாறிய நிகழ்ச்சி ஒரு பெரிய சமய வரலாற்று நிகழ்ச்சியாக மட்டுமல்லாமல் சமூக நிகழ்ச்சியாகவும் கருதப்படுகிறது.[17] இராமநாதபுரம் மாவட்டக் கடற்கரைப் பரதவர் சமூகக் குளியர்களில் பெரும்பாலோர் முகமதிய மதத்தைத் தழுவினர். இங்ஙனமாக முகமதியர், போர்த்துகீசியர், டச்சுக்காரர், ஆங்கிலேயர் வருகை யின் பயனாகவும் தொடர்பின் விளைவாகவும் இம்மக்களின் சமய, சமூக, பண்பாட்டு நிலைகளில் குறிப்பிடத்தகுந்த மாற்றங்கள் உண்டாகியிருக்கின்றன. இம்மாற்றங்கள் இவர்தம் தொழிற்கலைச் சொற்களில்[18] கூடப் பிரதிபலிப்பதைக் காண லாம்.

## சான்றாதாரம்


1. இராமன், டாக்டர் கே. வி., பாண்டியர் வரலாறு, தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனம், முதல் பதிப்பு, டிசம்பர், 1977, பக். 19—20, 22

   Bruce Foote, R., Indian Pre—historic and Proto historic Antiquities, Notes on their Ages and Distri- bution. Krishnaswamy, V.D., Progress in Pre-history, Ancient India, P. 9

2. Kailasapathy, K., Tamil Heroic Poetry, Oxford, 1968 Subramanian, N., Sangam Polity, Ennes Publications, Madurai, 1980, pp. 259—267

3. Srinivasa Iyengar, M., Tamil Studies, 1962

4. வானமாமலை, நா., தமிழர் வரலாறும் பண்பாடும், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1966, பக். 121

5. James Hornell, The Outrigger Canoes of Indonesia Madras Fisheries Bulletin No. 12, Madras, 1920

6. அருட்தந்தை ஹீராஸ் மொகஞ்சதாரோ, ஹரப்பா அகழ்வாராய்ச்சியில் கண்டெடுக்கப்பட்ட மீன் சின்னம்

களைப் பாண்டியருடன் தொடர்புபடுத்திக் காட்டுகிறார்.

—Heras, Journal of Oriental Research, Madras, Vol. X, *1936*, p. *287*

7. இராமன், டாக்டர் கே. வி., மு. நூ., பக். 127, 181

8. மேல்நாட்டு வரலாற்றாசிரியர் தமது நாட்டுத் தங்க நாணயத் தட்டுப்பாட்டுக்கும் மிதமிஞ்சியப் பொருளாதாரச் சீரழிவுக்கும் பாண்டியருடன் தம்நாடு செய்துவரும் முத்து வணிகமே காரணம் என்று கூறி முத்தின் மேல் மக்கள் கொண்டிருக்கும் கண்மூடித்தனமான ஆசையைக் கண்டிக்கிறார்.

9. இராமன், டாக்டர் கே.வி., மு.நூ., பக். 46

10. இராமன், டாக்டர் கே.வி., மு.நூ., பக். 190—191

11. "விரவி வந்தடையாத பரவரைப் பாழ்படுத்தும்
அறுகாலினம் புடைதிளைக்கும் குறுநாட்டவர்
குலங்கெடுத்தும்"

—நெடுஞ்சடையன் பராந்தகனின் வேள்விக்குடிச் செப்பேடுகள்.

12. "இவளே,
கானல் நண்ணிய காமர் சிறுகுடி
நீல்நிறப் பெருங்கடல் கலங்க உள்புக்கு
மீனெறி பரதவர் மகளே, நீயே,
நெடுங்கொடி நுடங்கும் நியம மூதூர்க்
கடுந்தேர்ச் செல்வன் காதல் மகனே!
திணைச்சுறா அறுத்த உணக்கல் வேண்டி
இனப்புள் ஓப்பும் எமக்குநலன் எவனோ?
புலவு நாறுதும், செலநின் றீமோ;
பெருநீர் விளையுள்எம் சிறுநல் வாழ்க்கை
நும்மொடு புரைவதோ அன்றே;
எம்ம னோரில் செம்மலும் உடைத்தே"—நற். 45

இந்நற்றிணைப் பாடலின் கருத்துக்கு இயைய, அக்கால கட்டத்தையொட்டி இந்தியாவுக்கு வந்த சீனப் பயணி பாஹியான் இந்திய நாட்டில் மீனவரைச் சண்டாளர் எனவும் மீன்பிடி தொழிலைச் சண்டாளத் தொழில் எனவும் கருதியதாகக் குறிப்பிட்டுள்ளார். கதிர்வேல், கால்டுவெல் முதலான வரலாற்றாசிரியர்களும் சிங்காரவேலு முதலியார்

முதலான கலைக் களஞ்சிய நூலாசிரியர்களும் ஜேம்ஸ் ஆர்னெல் முதலான ஆங்கிலேய அரசாட்சி யின் உயர் அதிகாரிகளும் பரதவரைத் தாழ்ந்த சாதி யினராகக் கொள்கின்றனர். எஸ். கதிர்வேல் ''மறவர் வரலாறு' எனும் தமது பிஎச்.டி. பட்ட ஆய்வில் இங்ஙனமே குறித்துள்ளார் (S. Kadhirvel, A History of the Maravas *1700—1802*, Madurai Publishing House, Madurai, First edition, *1977*, p.*39*). ஆனால் தூத்துக்குடிப் பரதவர் வெளியிட்ட அநேக வெளியீட்டு மலர்களில் தம்மை அரச வம்சத்தைச் சேர்ந்த மக்களாகக் குறிப்பிட்டுள்ளனர். துஷ்யந்த னின் மகனான பரதனின் வம்சத்தவர் என்றும் கௌரவர், பாண்டவர் தோன்றிய குடியில் தோன்றி யவர் என்றும் மதுரை பாண்டிய மன்னனது வழியில் வந்தவர் என்றும் கூறி இவற்றுக்கு ஆதாரமாகக் குடை, சின்னம், கொடி, விருது ஆகியனவற்றைக் காட்டுகின்றனர். பரதவர் பாடும் 'அம்பா' எனும் பெயரிய நாட்டுப்புறத் தொழிற் பாடல்களும் இவர் களை அரச வம்சத்தினராகவே காட்டுகின்றன. ஆக, பரதவர் சமூக நிலை மேலும் ஆய்வுக்குரியதா, கிறது.

13. சிங்காரவேலு முதலியார், ஆ., அபிதான சிந்தாமணி, ஏஷியன் எஜுகேஷனல் சர்வீஸஸ், புதுடெல்லி, *1983*, பக். *614*

14. ''விடுதலை விடுதலை விடுதலை!...
பறையருக்கும் இங்கு தீயர் புலையருக்கும் விடுதலை
பரவரோடு குறவருக்கும் மறவருக்கும் விடுதலை''
—பாரதியார் கவிதைகள், பூம்புகார் பிரசுரம், *1976*, பக். *56*

15. இராமன், டாக்டர் கே.வி., மு.நூ., பக். *56—57*

16. ''The lowest class in the social ladder were the Valayars and Pulayars belonging to the class of fishermen and Scavengers. Their social system undoubtedly proves the fact that the Tamils had their own class divisions. The dress of the people varied according to their social status, their race and blood''
—Nilakanta Sastri, K.A., A History of South India, Oxford University Press, *1976*, p. *84*

17. Bishop R. Caldwell, A History of Tirunelveli, Asian Educational Services, New Delhi, P. 68

18. முருகானந்தம், ச., இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டக் கடற்கரைப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள்—ஓர் ஆய்வு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1983

# 2

# இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்கள் பற்றிய பொதுச் செய்திகள்

தமிழ்நாட்டில் கடற்கரையைத் தொட்டு நிற்கும் மாவட்டங்கள் எட்டு. செங்கற்பட்டு, சென்னை, தென்னார்க்காடு, தஞ்சாவூர், புதுக்கோட்டை, இராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமரி என்பன அவை. மொழி, சமயம், தொழில் ஆகிய அம்சங்களின் அடிப்படையில் இராமநாதபுரம் மாவட்டமும், திருநெல்வேலி மாவட்டமும் தமிழ்நாட்டின் பிற கடற்கரை மாவட்டங்களிலிருந்து வேறுபட்டு நிற்கின்றன. மொழி உச்சரிப்பும் அந்நியச் சமயங்களான கிருத்துவம், முகமதியம் ஆகியனவற்றின் ஆளுமையும் சங்கு, முத்துக்குளித்தல் ஆகிய தொழிலும் இவ்விரு மாவட்டங்களையும் இணைக்கின்றன.

தமிழகத்தின் பரப்பில் பன்னிரண்டில் ஒருபகுதிக்கு மேல் சற்றுக் கூடுதலான பரப்பினைக் கொண்டது இராமநாதபுரம் மாவட்டமாகும். இதன் பரப்பு 13,000 ச.கி.மீ. வடக்கிலிருந்து தெற்குமுகமாகத் தமிழகத்தின் ஆறாவது கடற்கரை மாவட்டம் இது. வடக்கில் திருச்சி மாவட்டமும் வடகிழக்கில் திருச்சி, தஞ்சாவூர் மாவட்டங்களும் கிழக்கு, தென்கிழக்கில் கடலும் தெற்கில் நெல்லை மாவட்டமும் மேற்கில் மேற்குத் தொடர்ச்சி மலையும் மாவட்ட எல்லைகளாக அமைந்துள்ளன. இம்மாவட்டம் குறுக்கே 9° 5' க்கும் 10° 25'க்கும் நெடுக்கே 77° 20' க்கும் 79° 28'க்கும் இடைப்பட்டது.[1]

திருநெல்வேலி மாவட்டம், ராமநாதபுரம் மாவட்டத்தை விடப் பரப்பளவில் சிறிது குறைந்தது. இதன்பரப்பு 11,281 ச.கி.மீ. இம்மாவட்டம் வடக்கிலிருந்து தெற்குமுகமாகத் தமிழ் நாட்டின் ஏழாவது கடற்கரை மாவட்டமாகத் திகழ்கிறது.

இதன் வடக்கில் இராமநாதபுரம் மாவட்டமும் கிழக்கில் மன்னார்க்குடாக்கடலும் தெற்கில் கன்னியாகுமரி மாவட்டமும் மேற்கில் மேற்குத் தொடர்ச்சி மலையும் எல்லைகளாக அமைந்துள்ளன. இம்மாவட்டம் குறுக்கே 8°க்கும் 9° 30'க்கும் நெடுக்கே 77° 10'க்கும் 78° 25'க்கும் இடைப்பட்டது.[2]

மேற்கண்ட இருமாவட்டங்களும் தமிழகத்தின் தென்பகுதியில் அமைந்தவையாகும். தென்தமிழ்நாடு பாண்டியநாடு எனப் பொதுவாக அழைக்கப்பட்ட போதிலும் இதனைப் பாண்டியர் அன்றிப் பல்லவரும் சோழரும் சிங்களரும் முகமதியரும் நாயக்கரும் சேதுபதியரும் ஆங்கிலேயரும் ஆண்டிருக்கின்றனர். தனித்தன்மைகள் மிகுந்த இத்துணை ஆட்சியாளர்கள் நடத்திய ஆட்சியின் முத்திரைகளை இம்மாவட்டங்களில் இன்றும் காணலாம்.

அந்நியச் சமயங்களான இஸ்லாமியமும் கிருத்துவமும் தமிழ் நாட்டிலேயே இம்மாவட்டங்களில்தான் முதன்முதலில் ஆழ வேரூன்றின. இஸ்லாமிய, கிருத்துவச் சமய வரலாறு இம் மாவட்டங்களின் வரலாற்றுடன் பின்னிப்பிணைந்துள்ளது.[3] இம் மாவட்டங்களில் வசிக்கும் பரதவர் முதலான அடித்தட்டு மக்களின் சமூக, சமய, பண்பாட்டு வரலாற்றுக்கும் கிருத்துவ மிஷனரிகளின் வரலாற்றுக்கும் முகமதிய படையெடுப்புக்கும் இஸ்லாமியச் சமயப் பரவலுக்கும் நேரடித் தொடர்பிருந்தமைக்கு வரலாற்று நூல்கள்வழித் தகுந்த சான்றாதாரங்கள் உண்டு.[4]

## சான்றாதாரம்


1. சோமலெ., இராமநாதபுரம் மாவட்டம், பாரி நிலையம், சென்னை, 1972, பக். 17
2. சோமலெ., திருநெல்வேலி மாவட்டம், பாரி நிலையம் சென்னை, 1963, பக். 15
3. Bishop R. Caldwell, A History ot Tinnevelly, Asian Educational Services, New Delhi, 1982.
4. Sauliere, A., Red Sand, Madurai, 1947.

# 3

# இரு மாவட்டங்களில் வாழும் கடற்கரைப் பரதவர்

இராமநாதபுரம் மாவட்டத்தின் கடற்கரை 260.71 கி.மீ. நீளமுடையது. வடக்கே சுந்தரபாண்டியன் பட்டினம் முதல் தெற்கே ரோச்மாநகர் வரை இம்மாவட்டத்தின் கடற்கரை அமைந்துள்ளது. இதில் 67 பரதவர்க் குடியிருப்புகள் உள்ளன என்று ஓர் அறிக்கை குறிப்பிடுகிறது. ஆனால் மீன்வளத்துறை இயக்ககம் குடியிருப்பின் எண்ணிக்கையை 87 எனக் குறிக்கிறது. அவையாவன :

அக்காள்மடம்
அந்தோணியார்புரம்
அழகாத்தாவலசை
ஆத்தங்கரை
ஆரியங்குண்டு
ஆலங்குளம்
இரண்யன்வலசை
இராமகிருஷ்ணபுரம்
இராமேஸ்வரம்
இராமேஸ்வரம்ரோடு
இருமேனி
ஓடப்பு
ஓப்பிலான்
ஓலைக்குடா
கரையூர்
களிமாங்குண்டு
காங்கோலன்பட்டினம்
காதர்ஷாபாடு
காரங்காடு
குண்டுக்கல்
கீழக்கரை
கீழமுண்டல்
சங்குமால்
சவேரியார்நகர்
சின்னபாலம்
சின்னீர்வாடி
சீனியப்பன்தர்க்கா
சுடுகாட்டான்பட்டி
சுந்தரபாண்டியன்பட்டினம்
சூசையப்பர்பட்டினம்
சேதுகரை
சொக்கலிங்கபுரம்
தங்கச்சிமடம்
தர்க்காவலசை
தனுஷ்கோடி
தாமோதரப்பட்டினம்

தாழைத்தோப்பு
திருப்பழை தெற்கு
திருப்பழை வடக்கு
தீட்டை
தீர்த்தாண்டதானம்
தெற்குவாடி
தேவிபட்டினம்
தொண்டி
தோணித்துறை
தோப்புக்காடு
தோப்புவலசை
நடராஜபுரம்
நம்புதாழை
நரிகுழி
நரிப்பையூர்
நரேந்தல்
நாலுபனை
பழனிவலசை
பனைக்குளம்
பாசிப்பட்டினம்
பாம்பன்
பிள்ளைகுளம்
பிள்ளைமடம்
பிள்ளைமடு
பிள்ளைமரத்தடி
புதுக்குடி
புதுப்பட்டினம்
புதுமடம்
புதுவலசை
பெரியபட்டினம்
மண்டபம்
மரக்காயர்பட்டினம்
மரியூர்
மாங்காடு
மாயகுளம்
மூடிவீரன் பட்டினம்
முதுவடுகநாதப்பட்டினம்
முத்துப்பேட்டை
முள்ளிமுனை
முனைக்காடு
மூக்கையூர்
மோர்பண்ணை
ரோச்மாநகர்
லைட்அவுஸ்
வடகாடு
வலசப்பட்டினம்
வள்ளத்தடி
வாலிநோக்கம்
விழுந்தி
வெடலை
வேர்க்கோடு

இக்குடியிருப்புகளில் ஓடப்பு, காதர்ஷாபாடு, தனுஷ்கோடி, தீட்டை, பிள்ளைமடு, பிள்ளைமரத்தடி, பூங்குடி, விழுந்தி எனும் இடங்களில் மக்கள் வசிப்பதில்லை. மற்ற குடியிருப்புகளுக்காக 62 துறைகள் உள்ளன. இம்மாவட்ட பரதவர்களின் மொத்த எண்ணிக்கை 56,043. இதில் கடற்கரைப் பரதவர் எண்ணிக்கை 40,152. கடற்கரைப்பரதவருள் இந்து சமயத்தினர் 19,565—கிருத்துவ சமயத்தினர் 8,325—இசுலாமிய சமயத்தினர் 12,262, இவர்களில் கடல் தொழில் புரிவோர் 19,100 பேர் என்பர். இம்மாவட்ட மக்கள் பயன்படுத்தும் மரபு வழிப் பட்ட மரக்கலங்கள் 3,485. இவற்றுள் வள்ளங்கள் 3,257,

கட்டுமரங்கள் 228. நவீன இயந்திரப்படகு (லாஞ்சு)கள் 339 புழக்கத்தில் உள்ளன.[1]

திருநெல்வேலி மாவட்டத்தின் கடற்கரை 165.76 கி. மீ. நீளம் உடையது. இம்மாவட்டக் கடற்கரைக்கு வேம்பாறு வட வெல்லையாகவும் கூட்டப்புளி தென்னெல்லையாகவும் அமைந்துள்ளன. இக்கடற்கரையில் அமைந்திருக்கும் பரதவர் குடியிருப்புகள் 25. அவையாவன :

அமலிநகர்
அலங்காரத்தட்டு
ஆலந்தலை
இடிந்தகரை
இரட்சண்யபுரம்
உவரி
காயல்பட்டினம்
கீழவைப்பார்
கூடுதாழை
கூட்டப்பனை
கூட்டப்புளி
கூத்தங்குழி
சிப்பிகுளம்
தருவைகுளம்
தூத்துக்குடி தெற்கு
தூத்துக்குடி வடக்கு
தோமையார்புரம்
பட்டினமருதூர்
பழையகாயல்
புன்னைக்காயல்
பெரியதாழை
பெருமணல்
மணப்பாடு
வீரபாண்டியன்பட்டினம்
வேம்பார்

இந்த 25 குடியிருப்புகளுக்காக 25 கடல்துறைகள் உள்ளன. இம்மாவட்டக் கடற்கரைப் பரதவர் எண்ணிக்கை 37,373. இதில் இந்து சமயத்தினர் 978. கிருத்துவ சமயத்தினர் 36,039. இசுலாமிய சமயத்தினர் 356. இத்தொகையில் கடல்தொழில் புரிவோர் 10,500 மீனவர்களாவர். இக்கடற்கரை மீனவர் பயன்படுத்தும் மீன்பிடி கலங்களுள் மரபு வழிப்பட்ட வள்ளங்கள் 781. கட்டுமரங்கள் 4240. நவீன இயந்திரப்படகு (லாஞ்சி)கள் 159.[2]

மேற்கண்ட தகவல்களிலிருந்து சில மெய்ம்மைகள் வெளிப்படுகின்றன. இராமநாதபுரம் மாவட்டத்துப் பரதவர்கள் வள்ளங்களைப் பெருவாரியாகத் தொழிலுக்குப் பயன்படுத்துகின்றனர். ஆனால் திருநெல்வேலி மாவட்டப் பரதவர்கள் கட்டுமரங்களையே தொழிலுக்கு மிகுதியும் பயன்படுத்துகின்றனர். இராமநாதபுரம் மாவட்டத்துக் கடற்கரைப் பரதவருள்

கிறுத்துவ சமயத்தினர் குறைவாகவும் இந்து சமயத்தவர், இசுலாமிய சமயத்தவர் மிகுதியாகவும் உள்ளனர். திருநெல்வேலி மாவட்டக் கடற்கரைப் பரதவருள் இந்து சமயத்தவரும் இசுலாமிய சமயத்தவரும் அருகி இருக்கக் கிறுத்துவ சமயத்தினர் பெருகி இருக்கின்றனர். இம்மாவட்டங்களின் மொத்த பரதவர் தொகை 77,525. இதில் இந்துக்கள் 20,543. கிறுத்துவர்கள் 44,364. இசுலாமியர்கள் 12,618. எனவே இம்மூன்று சமயங்களில் முதலிடம் வகிப்பது கிறுத்துவம். இரண்டாமிடம் பெறுவது இந்து சமயம். மூன்றாமிடம் பெறுவது முகமதியம். தென்தமிழ்க்கடற்கரைக்கு வரலாற்று ரீதியில் இசுலாமியம் முதலாவதாக அறிமுகம் ஆனபோதிலும்[3] கிறுத்துவமே மக்கள் விருப்பத்தைப் பெரிதும் கவர்ந்தது எனலாம். இன்று கடற்கரைப் பரதவர்களில் பெரும்பான்மையினோர் ரோமன் கத்தோலிக்கராக இருக்கின்றனர். மொத்த மக்கள் தொகையில் இவர்களே செம்பாதியினர் என்பது வெளிப்படை. இந்நிலை தொழிற்கலைச் சொற்களிலும் தன் இலச்சினையைப் பதித்துள்ளதைக் காணலாம்.

## சான்றாதாரம்


1. 2. Report of the Committee for organized Development of Marine Fisheries with small machanised Fishing Boats in Tamil Nadu, 28th Feb. 1978, p. 193.

3. Bishop R. Caldwell, A History of Tinnevelly, Asian Educational Services, New Delhi, p. 68.

# 4

# கடற்கரைப் பரதவர் தொழில்கள்

புராதன மக்களின் பூர்வீகத் தொழில் வேட்டையாடுதலும் மீன் பிடித்தலுமாகும். வேட்டையாடுதல் தொழிலுக்கு நேர் இணையான தொன்மையினை உடையது மீன்பிடித்தல்தொழில்[1] என்பர். மீன்வேட்டம், திமில்வேட்டுவர் எனும் சங்கச் சொல் லாட்சிகள்[2] ஈண்டு ஒத்துநோக்கி நினையத்தக்கனவாகும். மீன் ஓர் இயற்கையான உணவுப்பொருள். சான்றோர் இலக்கியங் களில் மீன் எனும் சொல்லாட்சி அளவிறந்திருத்தல் காணலாம்.[3] கடற்கரை மக்களின் வாழ்க்கையோடு மீன்பிடி தொழில் இரண்டறக் கலந்ததாகும்.

இராமநாதபுரம் மாவட்டம் மீன்தொழிலுக்கு மிகவும் பிரசித்தி பெற்றது. போட்மெயில் வழியாக இம்மாவட்டத்து மீன் வெளி யிடங்களுக்கெல்லாம் செல்கிறது.[4] இம்மாவட்டத்தில் தயாரிக்கப் படும் உலர்மீன் வணிகத்தில் முகமதியர்கள் பெரும்பங்கு வகிக் கின்றனர்.

திருநெல்வேலி மாவட்டத்தின் கடலோரம் எங்கும் பரதவர்கள் பெருமளவில் மீன் பிடித்துத்தென்னிந்தியாவிலும் இலங்கையிலும் பண்டு விற்று வந்தனர். தற்போது இலங்கையுடன் இருந்த மீன் வணிகம் நின்றுவிட்டது. மீனைக் குளிர்ப்பதன சாதனம் மூலம் பாதுகாத்து விற்பனை செய்கின்றனர். தூத்துக்குடியில் இத் தொழிலுக்கு ஒரு பயிற்சி நிலையம் உள்ளது.[5] இம்மாவட்டத்தில் தயாராகும் அடைசரக்குக் கேரளமாநில அசைவ உணவருந்து வோர் இல்லத்திருமணத்தில் முக்கியமான பதார்த்தமாகும்.

தமிழ்நாடு முத்துக்குப் பெயர் பெற்றது.[6] மேல்நாட்டார் குறிப்புகள் பண்டைத்தமிழரின் முத்து வணிகத்தைப் பலபடப் புகழ்ந்து பாராட்டுகின்றன.[7] பாண்டியர் ஆட்சியில் முத்துக்

குளிக்கும் தொழிலைச் செய்தவர்கள் தண்டனை அடைந்த குற்றவாளிகள் என்பர் வரலாற்றாசிரியர்.[8] தற்காலத்தில் பரதவ சமூகத்தினர் இத்தொழிலில் ஈடுபட்டு வருகின்றனர். அபாயகரமான தொழில் இதுவாதலின் முற்காலத்தில் குற்ற வாளிகள் ஈடுபடுத்தப்பட்டிருக்கலாம். ஆண்டுதோறும் இத்தொழிலில் ஈடுபடுவோர் ஓரிருவராவது விபத்தில் சிக்கி உயிரிழப்பதாக முத்துக்குளியர்கள் கூறுகின்றனர்.[9]

இராமநாதபுரம் மாவட்டக் கடற்கரைப்பகுதி முத்துக்குளிப்பில் பிரசித்தி பெற்றது. சேதுபதிகள் காலத்தில் முகமதியர்கள் முத்துக்குளிப்புத் தொழிலில் ஏகபோக உரிமை பெற்றிருந் தனர்.[10] பின்னர் ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் தனி அதிகாரி யின் மேற்பார்வையின் கீழ் இத்தொழில் சிறப்புற வளர்ந்தது. தற்போது மீன்வளத்துறையில் ஓர் உதவி இயக்குநர் முத்துக் குளிப்புக்குப் பொறுப்பேற்று முத்து உற்பத்தியில் இம் மாவட்டத்தின் பங்கைப் பண்டுபோல் உயர்த்தி வருகிறார். இம்மாவட்டக் கடற்கரைப் பரதவர் 3000பேர் முத்துக்குளிக்கும் தொழிலில் ஈடுபட்டு வருகின்றனர்.

திருநெல்வேலி மாவட்டத்தில் 2000 பரதவர்கள் முத்துக்குளிப் பில் ஈடுபட்டிருக்கின்றனர். 1955-க்குப்பிறகு தூத்துக்குடியில் முன்னர் நிறுத்தப்பட்ட முத்துக் குளிப்புத் தொடர்ந்து நடத்தப் படுகிறது. இத்தொழில் மூலம் அரசுக்குப் பல லட்சம் ரூபாய் வருமானம் உண்டாகிறது. செப்டம்பர் முதல் மே மாதம் வரை இம்மாவட்டத்தில் முத்துக்குளிப்புக்குரிய பருவ காலமாகும். பிறமாதங்களில் முத்துக் குளித்தால் குளியர் உடலில் சொரி உண்டாகிறது என்கின்றனர்.[11]

முத்துக்குளித்தல் தொழில் செய்வோரே சங்கு குளிக்கும் தொழிலும் செய்கின்றனர். சங்கு வளையல் பழந்தமிழர் பயன் படுத்திய கையணியாகும். சங்கு பற்றிய சொல்லாட்சி கள் சங்கவிலக்கியத்தில் நிறைய உள்ளன.[12] பாண்டியர் வெள்வளை தரித்ததாகச் சின்னமனூர்ச் செப்பேடு கள் கூறுகின்றன.[13] இராமநாதபுரம் மாவட்டத்தில் மண்டபம் பகுதியும் இந்தியப்பெருநிலத்தில் வங்கமாநிலப்பகுதி யும் சங்கு தொழிலுக்குச் சிறப்பிடம் பெற்றவையாகும். கொற் கையின் அகழ்வாராய்ச்சியில் அறுக்கப்பட்ட சங்குகள் பல

கிடைத்துள்ளன.[14] சங்கிலிருந்து உயர்ரகச் சுண்ணாம்பும், எனாமல், பெயிண்ட் முதலான பொருட்களும் செய்கின்றனர்.

இராமநாதபுரம் மாவட்டத்தில் இத்தொழிலில் ஈடுபட்டோர் முத்துக் குளியர்களான மூவாயிரவரே. கீழக்கரை, பெரியபட்டினம், திருப்பாலக்குடி, மண்டபம், வெடலை ஆகிய பகுதிகளில் சங்கு குளிப்பு நடைபெறுகிறது. இம்மாவட்டச் சங்குகுளியர்களில் பெரும்பாலோர் முஸ்லீம்கள். ஜனவரி முதல் மார்ச் வரை இராமேஸ்வரத்தில் சங்குகுளிப்பு நடைபெறுகிறது. முத்துக் குளிக்கும் உரிமை சேதுபதிகளிடமே இருந்தது. ஆங்கிலேயரிடம் சென்ற பிறகும்கூட சங்குகுளிக்கும் உரிமை சேதுபதிகளிடமே இருந்தது. ஜமீன் ஒழிப்பிற்குப் பின்னரே இவ்வுரிமை அரசுக்குச் சொந்தமானது. பட்டி, இருபிறவி, இராமேஸ்வரம் எனும் சங்கு வகைகள் இம்மாவட்டத்திற்கே உரிய சிறப்பினச் சங்கு வகைகளாகும்.[15]

திருநெல்வேலி மாவட்டத்தில் முத்துக்குளிப்பு நடைபெறாத மாதங்களில் சங்கு குளிப்பு நடைபெறுகிறது. கடலுள் 70 அடி ஆழம் வரை சென்று சங்கெடுக்கும் தொழிலைப் பரதவர் செய்து வருகின்றனர். இடிந்தகரை, உவரி, புன்னக்காயல் ஆகிய இடங்களில் சங்குகுளியல் சிறப்புற நடைபெறுவதை 'சோமலெ' கூறுகிறார்.[16]

இராமநாதபுரம் மாவட்டத்தில் நெய்தல் நில மக்களுக்குரிய தொழிலாக முத்துக் குளித்தல், சங்கெடுத்தல், மீன் பிடித்தல், உப்புக் காய்ச்சுதல் என்பன செய்யப்படுகின்றன என்று சோமலே குறிக்கிறார்.[17] இவ்வாறே திருநெல்வேலி மாவட்ட நெய்தல் நில மக்களின் தொழில்களில் உப்புக்காய்ச்சலும் ஒன்றாக அவரால் குறிக்கப்பட்டுள்ளது.[18] வானமாமலையும் உப்புக் காய்ச்சல் தொழில் கடற்கரை மக்களின் தொழில் என்றே குறித்துள்ளார்.[19] உப்புக்காய்ச்சும் தொழில் சங்க காலத்தில் பரதவர் வசமாகவே இருந்தது என்பதற்குத் தகுந்த சான்றாதாரங்கள் உண்டு.[20] அறிவியல் வளர்ச்சியின் காரணமாகப் பல இரசாயனப்பொருள் உற்பத்திக்கு மூலப்பொருளாக உப்புத்தேவை உண்டானபிறகு இது பெருந்தொழிலாக வளர்ந்துள்ளது. முதலாளர் பலர் தமது பெருந்தொகையினை இதில் முதலீடு செய்து தொழில் செய்து வருகின்றனர். முதலாளர்

யாராயிருப்பினும் தொழிலாளர்களில் ஒரு குறிப்பிட்ட சதவிகி தத்தினர் பரதவராய் இருத்தல் கவனிப்புக்குரியது. மீன்பாடு வருடத்தின் சில மாதங்களில் குறையும் காலகட்டத்திலும் சங்கு, முத்துக்குளிப்பு இல்லாத சமயங்களிலும் சில பரதவர் உப்பளங்களில் தொழில் பார்ப்பதாகத் தெரியவருகிறது.[21] இங்ஙனமே கடல்தொழில் செய்யவியலாத வயதுமுதிர்ந்த பரதவர் சிலரும் இத்தொழிலில் ஈடுபடுகின்றனர்.

இராமநாதபுரம் மாவட்டத்தில் திருவாடானை, தீர்த்தாண்ட தானம், தொண்டி, பாசிப்பட்டினம், வட்டாணம் எனும் இடங் களில் உப்பு காய்ச்சப்படுகிறது. மேற்கண்ட இடங்களில் உப்பளம் மிகவும் முக்கியமான தொழிலாகும்.[22]

திருநெல்வேலி மாவட்டத்தில் தூத்துக்குடி, ஆறுமுகனேரி பகுதிகளில் ஏறக்குறைய 1500 ஏக்கர் பரப்பில் உப்பளத் தொழில் நடப்பதாகச் சோமலெ குறித்துள்ளார்.[23] தற்காலத் தில் உப்பளப் பரப்பு பன்மடங்கு மிகுதியாகி விட்டது. வேப்பலோடை உப்பு வடஇந்தியா முழுமையும் புகழ்பெற்றது. பெருந்தொழில் உப்பு, தன்பாடு உப்பு இரண்டுமாகச் சேர்ந்து இம்மாவட்ட உப்பு உற்பத்தி இந்தியாவின் மொத்த உற்பத்தி யில் எட்டில் ஒரு பங்காகும்.

இராமநாதபுரம் மாவட்டத்தைப் பொறுத்தவரை 532 பேர் களும் திருநெல்வேலி மாவட்டத்தைப் பொறுத்தமட்டில் 564 பேர்களும் இத்தொழிலில் ஈடுபட்டுள்ளதாகத் தெரிய வருகிறது.[24]

மீன்பிடித்தல், உலர்மீன் தயாரித்தல், மீன், உலர்மீன் விற்றல், சங்கு, முத்துக்குளித்தல், உப்புக்காய்ச்சல் தொழிலுக்குப் பின்னர் இடம்பெறுவது கடல் தொழிலுக்குத் தேவையான உபகரணங்கள் செய்யும் துணைத்தொழிலாகும். பழுதுபட்ட துணைக்கருவிகளைச் சீர்செய்தல் பகுதிநேர வேலை எனலாம். வள்ளம், மரம் போன்றவற்றில் உண்டாகும் சிறுசிறு பழுது களைச் செப்பனிட்டுக் கொள்ளுதல், மீன்பாடு முடிந்த பின்னர் கிழிபட்ட வலைகளைத் தைத்தல் இன்னபிற இவர்தம் துணைத் தொழிலாகக் கருதத்தக்கன. தினசரி பிற்பகல் நேரங்களில் மீனவர்கள் நிழல்தரும் மரங்களின்

கீழும் பிறவிடங்களிலும் கிழிந்த வலைகளைச் சீர் செய்தலும் வலைமால் இணைத்தலும் அன்றாடம் காண்கிற காட்சியாகும்.

இராமநாதபுரம் மாவட்டத்தில் வலை முடிப்பது பரதவரின் முக்கியத்தொழிலாக விளங்குகிறது.[25] தொண்டி, பாசிப் பட்டினம், வட்டாணம் ஆகிய இடங்கள் வலை உற்பத்தியில் சிறப்பிடம் வகிக்கின்றன. தொண்டி படகுக்கட்டுமானத்தில் சிறப்பிடம் பெற்றிருத்தல் அனைவரும் அறிந்ததே.

திருநெல்வேலி மாவட்டத்தில் திருச்செந்தூர் முதல் மணப்பாடு வரை கட்டுமரங்கள் செய்யப்படுகின்றன. தூத்துக்குடித் துறை யில் பெருந்தோணிகளும் வள்ளங்களும் செய்யப்பட்டு வருகின்றன. திருநெல்வேலி மாவட்டத் தென்கோடிக் கடற்கரைப்பகுதி வள்ளங்கள் செப்பனிடலுக்காகத் தூத்துக் குடித் துறைக்கு வந்து போகின்றன. பரதவர் இத்தொழிலில் உதவியாளராகவும் ஏற்றுமதி, இறக்குமதிகளில் தினக்கூலி பெறும் தொழிலாளராகவும், ஒரு குறிப்பிட்ட சதவிகிதத்தினர் ஈடுபட்டுள்ளனர் என்பதும் கருதத்தக்கது.

இவண் குறிப்பிடப்பட்ட தொழில்களில் இவர்கள் பயன் படுத்தும் சொற்களும், சொற்றொடர்களுமே 'தொழிற்கலைச் சொற்கள்' எனும் தலைப்பின் கீழ் அகராதியாக நிரல்படுத்தப் பட்டு அடுத்த இயலில் இடம் பெற்றுள்ளன.

## சான்றாதாரம்


1. Asha Suri, The Illustrated Weekly of India, First Week, January, 1983.
2. குறுந். 123
3. அகம். - 26, 30, 60, 80, 106, 120, 142, 153, 210, 216, 220, 303, 316, 340, 360. ஐங்.—1, 10. கலி. - 103,121, 123, 131. குறுந்.—123, 171, 320. நற்.—319, 331, பதிற்.—29, 42. புறம். 7, 13, 21, 24, 25, 29, 52, 109, 122, 129, 138, 160, 229, 270, 277, 343, 348, 391, 392, 395, 396, 399.

4. சோமலெ., இராமநாதபுரம் மாவட்டம், பாரி நிலையம், சென்னை, 1972, பக். 62-65.

5. சோமலெ., திருநெல்வேலி மாவட்டம், பாரி நிலையம், சென்னை, 1963, பக். 64.

6. அகம். — 13, 27, 73, 108, 126, 130, 173, 201, 280, 282, 289, 335. ஐங். — 105. கலி. — 4, 9, 28, 40, 52, 54, 59, 64, 79, 80, 85, 92, 97, 105, 131, 135, 136. குறுந்.—104, 321. சிறுபாண்.—2, 57, 149. நற்.—23, 94. நெடுநல்.—37, 125, 136. பட்டினப்.—167-169. பதிற்.—48, 67, 74. பரி - 11, 13, 16, 20. புறம்.— 53, 161, 170, 377, 380. பெரும்.—329, 335, 393. பொருநர்.—28, 105, 162. மதுரைக்.—135, 286, 315, 382, 439, 505, 681, 716. மலை. - 518.

7. Srinivasa Iyengar, History of the Tamils, p. 308

8. Nilakanta Sastri, K. A., Foreign Notices of South India, p. 59.

9. இவ் ஆய்வேட்டாளருடன் நிகழ்ந்த நேர்முகப் பேட்டியில் திரு. வெலிங்க்டன் கூறிய செய்தி.

10. சோமலெ., இராமநாதபுரம் மாவட்டம், பக். 107.

11. சோமலெ., திருநெல்வேலி மாவட்டம், பக். 64

12. அகம்.—201, 350. ஐங்.—136, 191, 192, 193, 194, 195, 196, 197, 198, 199, 200. குறிஞ்சிப்.— 167. குறுந்.—15. சிறுபாண்.—176. நற். 172. நெடு.—36, 142. பதிற். — 67. பரி. — 13, 15. பெரும். — 35, பொருநர்.—வெ. 2. மதுரைக்.—135, 136, 185, 401, 407, 511. திரு.—23, 120, 127.

13. 'மறுகிலொளிர் மணிமுடியொடு சங்கவெள்வளை தரித்தும்'
—இரண்டாம் இராசசிம்ம பாண்டியனின் சின்னமனூர்ச் செப்பேடுகள், எஸ். அய். அய். 3, தகடு. 4.

14. இவ்ஆய்வேட்டின் பின்னிணைப்பு—தொழிற் படங்கள்

15. சோமலெ., இராமநாதபுரம் மாவட்டம், பக். 66.

16. சோமலெ., திருநெல்வேலி மாவட்டம், பக். 64.

17. சோமலெ., இராமநாதபுரம் மாவட்டம், பக். 13

18. சோமலெ., திருநெல்வேலி மாவட்டம், பக். 12
19. வானமாமலை, நா., தமிழர் வரலாறும் பண்பாடும், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1966, பக். 51
20. பார்க்க : இவ்ஆய்வேட்டின் பின்னிணைப்பு, பண்டைத் தமிழர் கடல்துறைத் தொடர்பான சொல்லாட்சிகள்.
21. இவ்ஆய்வாளருடன் நிகழ்ந்த நேர்முகப் பேட்டியில் தூத்துக்குடி புதுக் கடற்கரை சம்மாட்டியார் திரு. ஹாசேஸ் கூறிய தகவல்.
22. சோமலெ., இராமநாதபுரம் மாவட்டம், பக். 374
23. சோமலெ., திருநெல்வேலி மாவட்டம், பக். 67
24. Parasuraman, G., Asst. Director, Department of Fisheries (Information & Statistics), Statement No. 4 (R.D. & T. D.) Appendix of this dissertation.
25. சோமலெ., இராமநாதபுரம் மாவட்டம், பக். 358.

# 5

# அகராதிக்கலை

## விளக்கம், வரலாறு, வகைமை

அகரத்தை ஆதியாகக் கொண்டு சொற்களை வரிசையாகத் தொகுத்துப் பொருள் விளக்கம் கூறும் நூலை அகராதி என்பர்.[1] அகராதி எனும் பொருள்படும் 'டிக்ஷனரி' என்னும் ஆங்கிலச் சொல் 'டிக்ஷனேரியஸ்' எனும் இலத்தீன் சொல்லில் இருந்து பிறந்ததாகும். 'டிக்ஷனேரியஸ்' எனும் சொல்லுக்குச் சொல்தொகுப்பு என்பது பொருள். 'டிக்ஷனரி' எனும் நூலுக்கு ஆங்கிலத்தில் 'லெக்சிகன்' எனும் இன்னொரு பெயரும் உண்டு. இதன் தயாரிப்பாளரை 'லெக்சிகோகிராபர்' என்றும் இப்படித் தொகுக்கும் கலையை 'லெக்சிகோ கிராபி' என்றும் அழைப்பர். கிரேக்கர், ரோமானியர், அராபியர், அசீரியர், இந்தியர் ஆகியோர் சொற்களைத் தொகுத்து வைக்கும் வழக்கத்தை மேற் கொண்டிருந்தனர்.

கி. மு. 20இல் மார்க்ஸ் வெரியஸ் பிளாகஸ் என்பவர் தொகுத்த அகராதிதான் உலகில் முதல்முதலில் தோன்றிய அகராதியாகும். இதன்பின் கி. பி. 150 இல் ஷோ வென் என்னும் தலைப்பில் சீனநாட்டிலிருந்து ஒரு விரிவான அகராதி வெளியாயிற்று. கி.பி. 10ஆம் நூற்றாண்டில் மிகவும் முன்னேறியிருந்த அராபியர் 'அகராதித் தொகுப்புக்கலை' எனும் நூலை வெளியிட்டனர். ஜான் கார்லண்ட் எனும் ஆங்கிலேயர் இலத்தின் சொற்களைத் தொகுத்து அத்தொகுப்புக்கு 'டிக்ஷனரி' என்று பெயர் சூட்டினார். ரிச்சர்ட் ஹியுலெட் என்பவர் 1552ல் ஓர் அகராதி வெளியிட்டார். இவ்வகராதியின் தலைப்பு இலத்தீன் மொழியில் மிக நீண்டதாக அமைந்திருந்தது. ஆங்கிலச் சொல், இதற்கு ஆங்கில விளக்கம்; இதன்பின் இதனுடைய லத்தீன் மொழியாக்கம் என இது அமைந்து இருந்தது. இதுவே பன்மொழி

அகராதிக்கு இடப்பட்ட முதல் வித்தாக அமைந்தது; இது மட்டு மல்ல, ஆங்கிலத்தில் வெளியான முதல் அகராதியும் இதுவாக அமைந்தது; 26,000 சொற்களைக் கொண்ட இவ்வகராதி மிகவும் புகழ் பெற்றதாக விளங்கிற்று. ஜான் ப்ளோரியோ என்பவர் 'சொற்களின் உலகம்' எனும் அகராதியை 1598இல் வெளியிட்டார். இது இத்தாலிய ஆங்கிலேய மொழியகராதி யாகும். 1604 இல் ராபர்ட் கவ்ட்ரி என்பார் 'எழுத்துக்களின் அட்டவணை' எனும் ஆங்கில அகராதியை உருவாக்கினார். இது 3000 கடின வார்த்தைகளுக்கு மட்டும் பொருள் தரக்கூடிய அகராதியாக அமைந்தது. 1694 இல் பிரஞ்சுக் கலைக்குழு (பிரெஞ்சு அகடெமி) பிரஞ்சு மொழி அகராதி ஒன்றை அகர வரிசையில் அமைத்துக் கொடுத்தது. பின்னர் வந்த அகராதி களுக்கு இதுவே வழிகாட்டியாக ஏற்கப்பட்டது. கி.பி. 1704 இல் நாதன் பெய்லி என்பவர் 80,000 சொற்கள் அடங்கிய ஓர் அகராதியை உருவாக்கினார். 18 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஜோனாதன் ஸ்விப்ட், அலெக்சாண்டர் போப், ஜோசப் பாதிரியார், சாமுவேல் ஜான்சன் ஆகியோர் ஆங்கிலத் தின் தரத்தை உயர்த்தும் வகையில் ஓர் நல்ல அகராதியைத் தயாரிக்கும் ஆர்வம் கொண்டிருந்தனர். இந்தப் பொறுப்பை சாமுவேல் ஜான்சனிடம் ஒப்படைத்தனர். இவரது அயரா உழைப்பாலும் தளரா ஊக்கத்தாலும் 1775 இல் ஆங்கில மொழி அகராதி உருவாயிற்று. (இது 1755இல் உருவாகிற்று எனக் கலைக் களஞ்சியம் கூறுகிறது.) இவர் சொற்பொருளை விளக்குமிடத்து அறிஞர்களின் மேற்கோள்களை இணைத் திருந்தமையால் இவ்வகராதி பெரும் புகழ்பெற்று விளங்கியது. நோவா வெப்ஸ்டர் எனும் ஆங்கிலேயர் 1828இல் அமெரிக்கரின் ஆங்கில உச்சரிப்பை மையமாகக் கொண்டு 70,000 சொற் களைக் கொண்ட ஓர் அகராதியை இரு தொகுதிகளாகத் தயாரித்தார். இது ஆங்கிலேயரின் உச்சரிப்பின் உயர்வை வலியுறுத்தியது. 1928இல் பத்துத்தொகுதிகளாக வெளிவந்த 'வரலாற்று ரீதியிலான புதிய ஆங்கில அகராதி' பின்னர் தோன்றிய தேசிய அகராதிகளுக்கு வழிகாட்டிற்று. 15,487 பக்கங்களில் 5,00,000 சொற்களுக்கு இது விளக்கம் கூறிற்று. இதை மேலும் திருத்தி 1935இல் பதின்மூன்று தொகுதிகளாக வெளியிட்டனர். இதையே நாம் 'ஆக்ஸ்போர்டு ஆங்கில அகராதி' என அழைக்கிறோம்.[3]

இந்தியா, தமிழ் ஈழம் தவிர்த்து பிற உலக நாடுகளில் வளர்ந்து வந்த அகராதிக்கலையின் வரலாறு இவ்வாறிருக்க, இனி இந்தியா, தமிழ் ஈழம் ஆகிய நாடுகளில் வளர்ந்து வந்த அகராதிக் கலையைக் காண்போம் :

சமஸ்கிருத மொழியில் நிகண்டு என்பது வேதத்தின் அங்கமாக விளங்கி வைதிகச் சொற்களுக்குப் பொருள் கூறும் கருவி நூலாக விளங்கிற்று. நிகண்டு என்னும் சொல்லுக்குக் கூட்டம், தொகுதி என்பது பொருளாகும். இதற்கு நிருக்தம், அபிதானம், கோசம், நாமமாலா எனும் பெயர்களும் உண்டு. கி.மு 700 இல் யாஸ்க முனிவர் முதன் முதலாக ஒரு நிருக்தம் உருவாக்கினார் என்பர். இவ்வடமொழியில் இதுவரை அச்சான, அச்சாகாத மொத்த நிகண்டுகளின் எண்ணிக்கை 700 என்பர் வே.ராகவன்.[3]

தமிழ் மொழியில் இதுவரை ஏறத்தாழ 200 அகராதிகள் வெளி வந்துள்ளன. தமிழ் அகராதியின் தந்தையாக கி. மு. 3 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட காலத்தைச் சேர்ந்த தொல் காப்பியரைக் குறிப்பிடலாம். இவர் தமது இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தில் உரியியல், மரபியல் ஆகிய இரு இயல்களில் சொற்பொருள் தரும் பணியைச் செய்திருக்கிறார். இவர் அகர வரிசைப்படி சொற்களை அமைக்கவில்லையாயினும் சொல்லுக் குப் பொருள் கூறும் மரபைத் தொடங்கிவைத்தார் எனலாம். இவருக்குப்பின் சொற்பொருள் விளக்கும் செய்யுள் நூல்களாக நிகண்டுகள் தோன்றின. திவாகரம் எனும் பெயருடைய நிகண்டு கி. பி. 8 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும். இந்நிகண்டும் பிங்கலம் எனும் நிகண்டும் கி. பி. 11 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தன எனும் கருத்தும் உண்டு.

கலைக்கோட்டுத் தண்டனார் இயற்றிய ஒரு நிகண்டு சங்ககாலத் திலிருந்தது என ஒரு குறிப்பு காணப்படுகிறது. பவணந்தி முனிவர் தமது நன்னூலில் (460) பிங்கலம் எனும் நிகண்டைக் குறிப்பிட்டு இதனை 'உரிச்சொல்' எனக் குறித்துள்ளார். இந் நூலுக்கு உரை எழுதிய மயிலை நாதர் இந்நிகண்டை 'உரிச் சொல் பனுவல்' எனச் சுட்டிக்காட்டியுள்ளார். கயாதரர் தாம் இயற்றிய 'கயாதரம்' எனும் நிகண்டு நூலில் 'உரிச்சொல் பனுவல்' எனும் சொற்றொடரை இரு இடங்களில் (2,566) பயன்படுத்தியுள்ளார். காங்கேயர் 'உரிச்சொல் நிகண்டு' எனும்

நூலை இயற்றியிருப்பதாகத் தெரிகிறது. ஆக, பவணந்தி, மயிலைநாதர், கயாதரர், காங்கேயர் ஆகியோர் தொல்காப்பியர் தமது தொல்காப்பிய நூலில் உரியியலில் சொற்பொருள் விளக்கி அகராதிக் கலைக்கு வித்திட்ட காரணத்தால் தத்தம் படைப்புகளில் சொற்பொருள் கூறும் கலை நூலுக்கு 'உரிச்சொல்', 'உரிச்சொல் பனுவல்', 'உரிச்சொல் நிகண்டு' எனும் சொற்றொடர்களை ஆண்டிருப்பதாகக் கருதலாம். இதனால் தமிழில் அகராதிக்குரிய முன்னைநாள் பெயராக உரிச்சொல், உரிச்சொல் பனுவல் எனும் தொடர்கள் வழங்கி வந்தமையை அறிகிறோம். அரும்பொருள் விளக்க நிகண்டு, தொகை நிகண்டு, பொதிகை நிகண்டு, நாநார்த்த தீபிகை (1850) ஆகிய பல அகராதி நூல்களின் பெயரையும் அறிய முடிகிறது.

சிதம்பர ரேவண சித்தரின் அகராதி நிகண்டு (1594) 'அகராதி மோனைக்கு அகராதி எதுகை' (17ஆம் நூற்...) வீரை மண்டல புருஷரின் சூடாமணி நிகண்டு, கல்லிடைக் குறிச்சி சிவ சுப்பிரமணியக் கவிராயரின் நாமதீப நிகண்டு, யாழ்ப்பாணத்து வைத்தியலிங்கம் பிள்ளையின் சிந்தாமணி நிகண்டு (1874), வீரவநல்லூர் நா. அருணாசல நாவலரின் விரிவு நிகண்டு (20ஆம் நூற்.) ஆகியன பிற நிகண்டு நூல்களாகும். சில நிகண்டுகளை ஆதாரமாகக் கொண்டு எஸ். வையாபுரிப்பிள்ளை 'தமிழ் அகராதியின் ஆதார நூற்றொகுதி' எனும் நூலை (1934) வெளியிட்டிருப்பதாகத் தகவல் தருகிறார் மு. சண்முகம் பிள்ளை.[4]

செய்யுள் வடிவில் அமைந்த அகராதிகள் (நிகண்டுகள்) இங்ஙனம் இருக்க, உரை நடை வடிவில் அமைந்த அகராதிகள் பற்றிய தகவல்களைக் காண்போம் :

பிராஇன்சா 1679 இல் தமிழ்-போர்த்துகீஸ் மொழி அகராதியை உருவாக்கினார். 1732இல் வீரமாமுனிவர் 'சதுரகராதி' எனும் பெயரில் அமைந்த அகராதியின் முதல் தொகுதியை உருவாக்கி அளித்தார். மிகவும் புகழ்பெற்ற ஜான்சனின் ஆங்கில அகராதி உருவாவதற்கு இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பாகவே சதுரகராதியின் முதல் தொகுதி உருவாகி விட்டது. இவரே 1744இல் தமிழ்—பிரஞ்சு, போர்ச்சுகீஸ்—இலத்தீன்—தமிழ் அகராதிகளை உருவாக்கினார். பெப்ரீஷியஸ், பிரெய்ட்ஹௌப்ட் ஆகிய இருவரும் இணைந்து

1779 இல் தமிழ்—ஆங்கில அகராதியை உருவாக்கினர். இவ்வகராதியின் பெயர் 'தமிழும் இங்கிலேசுமாயிருக்கிற அகராதி' என்பதாகும். சதுர் அகராதியின் இரண்டாவது தொகுதியை பெஸ்கி 1819 இல் வெளியிட்டார். பின்னர் ரிச்சர்ட் கிளார்க் எனும் ஆங்கிலேய அதிகாரியின் உத்திரவின் பேரில் தாண்டவராய முதலியாரும் இராமச்சந்திரக் கவிராயரும் சேர்ந்து பெஸ்கி தயாரித்த சதுரகராதியின் இரு தொகுதிகளையும் சோதித்து ஒரே தொகுதியாக்கி 1824 இல் புதிய பதிப்பாக வெளியிட்டனர். 1830இல் டாக்டர் ரொட்லர் என்பார் தமிழ்—ஆங்கில அகராதி ஒன்றைத் தயாரித்தார். 1833 இல் யாழ்ப்பாணத்து அமெரிக்கன் மிஷன் அதிகாரிகள் தமிழ் அகராதி, தமிழ்—ஆங்கில அகராதி, ஆங்கிலம்—தமிழ் அகராதி என மூன்று அகராதிகளை உருவாக்குவதற்கு ஆவன செய்தனர். நிஸ்ஸெரா, பெர்சிவல் ஆகிய பாதிரிமார்கள் திரட்டிக் கொடுத்த சொற்களை வைத்துக் கொண்டு யாழ்ப்பாணம் சந்திரசேகர பண்டிதர் ஓர் அகராதியை உருவாக்கினார். இதற்கு ஓர் அனுபந்தத்தை (பிற்சேர்க்கையை)ச் சென்னப் பட்டினம் களத்தூர் வேதகிரி முதலியார் சேர்த்துக் கொடுத்தார். இவ்வகராதி 58,500 சொற்களைக் கொண்டதாக அமைந்தது. இதனை ஸ்பால்டிங் பாதிரியார் 1842 இல் வெளியிட்டார். மக்கள் இதனை யாழ்ப்பாண அகராதி என்றும் மானிப்பாய் அகராதி என்றும் அழைத்தனர். இதே ஆண்டில் (1842) வின்ஸ்லோ அடிகளார் பதிப்பில் ஹச்சிங்க்ஸ் பாதிரியார் உருவாக்கத்தில் ஆங்கில-தமிழ் அகராதி ஒன்றும் வெளியிடப்பட்டது. இராமாநுஜக்கவிராயர், விசாகப் பெருமாளையர், வீராசாமிச் செட்டியார் ஆகியோரது உழைப்பில் 67,452 சொற்களை உடைய ஓர் அகராதியை வின்ஸ்லோ 1862இல் பதிப்பித்தார். 1867இல் நாகப்பட்டினத்திலிருந்து ஆர்.பி. குரி என்பார் தமிழ்—இலத்தீன் மொழி அகராதி ஒன்றை ஆக்கியளித்தார்.[5] யாழ்ப்பாணம் ந. கதிரைவேற்பிள்ளை 'தமிழ் மொழி அகராதி' எனும் பெயரில் ஓர் அகராதியை உருவாக்கி உள்ளார். தி. நீலாம்பிகை அம்மையார் 1920களின் பக்கத்தில் வெளிவந்து கொண்டிருந்த 'திராவிடன்' எனும் இதழில் 'வடசொற்றமிழ் அகரவரிசை' எனும் தலைப்பின் கீழ் வட சொற்களுக்குத் தமிழ்ப் பொருள்தரும் முயற்சியை மேற்கொண்டார். இவ்வரிசைத் தொகுப்பே நூல்வடிவில் 'வட சொற்றமிழ் அகரவரிசை' எனும் பெயரில் 1937 இல் வெளியாயிற்று.[6]

ந.சி. கந்தையாபிள்ளை, பன்மொழிப்புலவர் கா. அப்பாதுரையார் ஆகியோரும் மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரும் திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தாரும் அகராதிகளைப் புதிதாக ஆக்கியளித்துள்ளனர். ஆ. சிங்காரவேலு முதலியாரின் அபிதான சிந்தாமணி, சென்னை மாகாண அரசாங்கத்தின் தமிழ் வளர்ச்சிக் கழக வெளியீடான கலைக் களஞ்சியம், தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் வாழ்வியற் களஞ்சியம், சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம், பெருஞ்சொல்லகராதி ஆகியன கலைக் களஞ்சிய வகையின்பாற்பட்டு, முழுமையாகப் பல்வேறு விவரங் களையும் ஒருங்கே தொகுத்துத்தரும் அகராதிவடிவின எனலாம். ஆக, இதுவரை பார்த்த அனைத்து அகராதிகளும் பொது அகராதி களாகும். அகராதிகளைப் பொது அகராதிகள் சிறப்பு அகராதிகள் என இருபிரிவுகளாகப் பிரிக்கலாம். சிறப்பு அகராதிகள் என்பன மருத்துவவியல், பொறியியல், சட்டவியல், கட்டடவியல், இயற்பியல், வேதியியல், பயிரியல், விலங்கியல் எனப் பல தொழில் துறை சார்ந்த தனித்தனி அகராதிகளாகும்.

இவ்வகைப்பட்ட பாகுபாடு மட்டுமின்றி வேறொரு வகை யான பாகுபாடும் செய்ய இடமுண்டு. பொதுவாகப் பொதுமக்கள் அனைவரும் அறியும் பொதுவான சொல்லகராதி, வட்டார மக்கள் மட்டுமே அறியும் வட்டாரச் சொல்லகராதி என அகராதியை இருவகைப்படுத்தலாம். வட்டார வழக்குச் சொல் குறித்துக் கூறுவதிலும் நம் பழந்தமிழ் இலக்கணி தொல்காப்பி யரே மூலவராக உள்ளார். திசைச்சொல் குறித்து,

**செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்**
**தங்குறிப் பினவே திசைச் சொற்கிளவி**[7]

என்று கூறும் தொல்காப்பிய நூற்பாவுக்குச் சேனாவரையர் 'அவ்வந் நிலத்துத் தாம் குறித்த பொருள் விளங்குவதல்லது அவ்வியற்சொல்போல எந்நிலத்தும் தம் பொருள் விளங்கா' எனப்பொருள் எழுதியுள்ளார். சான்றாகத் தென்பாண்டி நாட்டார் ஆ, எருமை என்பவற்றைப் 'பெற்றம்' என்பர். ஆண்டாள் தம் திருப்பாவையில் 'பெற்றம் மேய்த் துண்ணும் குலம்' எனக் கண்ணனின் குலத்தைக் குறித்தல் காணலாம். இச்சொல் தொண்டை மண்டலத்தாருக்கு விளங் காத சொல்லாகும். இங்ஙனம் வழங்கும் வட்டார வழக்குச்

சொற்களைப் பற்றிப் பவணந்தி முனிவரும் குறிப்பிட்டுப் பேசி யுள்ளார் :

> **செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினும்**
> **ஒன்பதிற் றிரண்டினில் தமிழ் ஒழி நிலத்தினும்**
> **தங்குறிப் பினவே திசைச்சொல் என்ப**[8]

எனும் நன்னூல் நூற்பாவுக்கு எழுதப்பட்டுள்ள உரையால் தென்பாண்டி நாட்டார் ஆவினைப் பெற்றம் என்றும், குட்ட நாட்டார் தாயைத் தள்ளை என்றும், குடநாட்டார் தந்தையை அச்சன் என்றும் இங்ஙனம் பற்பல நாட்டார் பற்பல வட்டார வழக்குச் சொற்களைப் பயன்படுத்துகின்றனர் என்றும் அறிய வருகிறோம்.

வட்டார வழக்கென்பது குறிப்பிட்ட நிலப்பகுதியைச் சேர்ந்த மக்கள் வழிவழியாக வழங்கி வரும் சொல் எனப்பொருள் படும். வீரமாமுனிவரே 'வட்டார வழக்குத் தமிழ் அகராதி' ஒன்றைத் தயாரித்ததாக அறிகிறோம்.[9] தூத்துக்குடி முதல் மணப்பாடு வரை கடற்கரைப் பகுதிப் பரதவரிடையே சமயப் பணி செய்ய வந்த யேசு சபைத் துறவியர் (1542-) தமது சொந்த உபயோகத்திற்காகவும் தமது சபையைச் சேர்ந்த துறவியர் உபயோகத்திற்காகவும் பேச்சுவழக்குத் தமிழ்ச் சொற்களுக்கு போர்த்துக்கீசிய — இலத்தீன் மொழியிலான பொருளைக் குறித்து அகராதிகள் தயாரித்து வைத்தனர் எனும் செய்தியை அறிய முடிகிறது. வட்டார வழக்குச் சொற்கள் நிறைந்த பேச்சுத் தமிழால் உருவாக்கும் நவீனப்படைப்பிலக்கியங் கள் (சிறுகதை, நாவல்) நாட்டுப்புற இலக்கியங்கள் மூலமாகப் பல வட்டார வழக்குச் சொற்களை அறிகிறோம். ஆயினும் அவற்றை அகராதி வடிவில் காண இயலாது.

தமிழ் நாட்டு மாவட்டங்கள் பற்றி மாவட்டத்திற்கு ஒரு நூல் வீதம் எழுதிய 'சோமலெ' அந்தந்த மாவட்டத்தில் வழங்கும் வட்டார வழக்குகளை அகரவரிசையில் அமைத்துப் பொருள் எழுதி அந்தந்த நூல்களில் சேர்த்துத் தந்துள்ளார். கி. ராஜ நாராயணன் திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த கரிசல் காட்டுப் பகுதிகளில் வழங்கிவரும் சொற்களைத் தொகுத்து 'வட்டார வழக்குச் சொல்லகராதி' (1982) எனும் நூலை வெளியிட்டுள்ளார். சிறப்பு அகராதிகளுள் தொழில்

துறை சார்ந்த அகராதிகளும் அடங்கும் என மேலே குறிக்கப் பட்டது. ஒரு குறிப்பிட்ட வட்டாரத்தில் ஒரு குறிப்பிட்ட தொழிலைச் செய்யும் மக்களிடமிருந்து திரட்டப்பட்ட சொற் களின் அகராதி நிலம், புலம் சார்ந்த தனிச் சிறப்புடைய அகராதி யாகும். சான்றாகக் கொங்கு நாட்டு மட்பாண்டத்தொழிற் கலைச் சொற்கள், கன்னியாகுமரி மாவட்டப் பனைத் தொழிற் கலைச் சொற்கள், கடற்கரைத் தமிழ்ப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள் எனும் தலைப்புகளில் அமைந்த அகராதிகள் வட்டார வழக்கு, தொழில்வழக்கு எனும் இரு கூறுகளும் நிறைந்தனவாக அமையும். ஓராய்வாளர், மட்பாண்டத் தொழில் கலைச் சொல் குறித்து ஓர் அகராதியை 1982 இல் தமிழ்ப் பல்கலைக் கழகத் திற்கு ஆக்கியளித்தார். நாகர்கோயில் ஸ்காட் கிருத்துவக் கல்லூரித் தமிழ்த் தேர்வுநிலை விரிவுரையாளர் திரு. இராஜா மணி 'கன்னியாகுமரி மாவட்டப் பனைத் தொழிற் கலைச் சொற்கள்' குறித்து அதே ஆண்டில் அப்பல்கலைக் கழகத்திற்குத் தயாரித்தளித்தார்.[10] தமிழ் நாட்டரசு மீன்வளத் துறையினர் சில தசாப்தங்களுக்கு முன்னர் மீன்வளத்துறை சார்ந்த சொற் களுக்கு ஓர் அகராதியைத் தயாரித்துள்ளனர். இது புலம்பற்றிய சிறப்பகராதியேயன்றி நிலம் சார்ந்த சிறப்பகராதியன்று. இவ் வாய்வாளர் உருவாக்கிய இவ்வகராதி நிலம் புலம், இரண்டானும் தனிச் சிறப்புடைய அகராதியாகும்.

## அடிக்குறிப்புகள் :

1. கலைக்களஞ்சியம் (தொகுதி 1), சென்னை தமிழ் வளர்ச்சிக் கழகம், முதல் பதிப்பு, 1954, ப. 15
2. ஸ்ரீஜெயன் (மொ. பெ. ஆ), 'அகராதியின் கதை' மஞ்சரி, சென்னை, ஜூலை 1989, பக். 41-44 (Translation : Krishna Venugopalan, Wisdom, Sep. 1988.)
3. கலைக்களஞ்சியம் (தொகுதி 6), சென்னை, தமிழ் வளர்ச்சிக்கழகம். முதற்பதிப்பு, 1959, ப. 441
4. மேலது ப. 437-440

5. கலைக் களஞ்சியம் (தொகுதி 1) மு. நூ., ப. 15-18
6. நீலாம்பிகையம்மையார், தி., வடசொற்றமிழ் அகர வரிசை, சென்னை திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், மறுபதிப்பு 1965, முன்னுரை 2-3
7. தொல். சொல். எச்ச. 4
8. நன். பெயர் 16
9. ராஜநாராயணன், கி., வட்டாரவழக்குச் சொல்லகராதி, சிவகங்கை, அன்னம் பிரைவேட் லிமிடெட், முதல்பதிப்பு 1982, ப. viii
10. குறுங்கால ஆய்வுத் திட்டத்தின் கீழ் 1982-83 காலகட்டங்களில் இவ்வாய்வாளரோடு ஆய்வில் ஈடுபட்ட ஒரு சாலை ஆய்வாளர்கள் தயாரித்தளித்த அகராதிகள்

## தொழிற்கலைச் சொற்கள்

### குறுக்க விளக்கம்

| | |
|---|---|
| அ. சி. | அபிதான சிந்தாமணி |
| க. த. அ. | கழகத்தமிழ் அகராதி |
| சோமலெ. | எஸ். எம். எல். லெட்சுமணன் செட்டியார் |
| த. மொ. அ. | தமிழ் மொழி அகராதி |
| தர்ஸ்டன் | எட்கர் தர்ஸ்டன் |
| தொ. பெ. சொ. | தொழிற்பெயர்ச் சொல் |
| தொ. பெ. சொ. தொ. | தொழிற்பெயர்ச்சொல் தொடர் |
| பெ. சொ. | பெயர்ச்சொல் |
| பெ. சொ. தொ. | பெயர்ச்சொல் தொடர் |
| வி. அ. பெ. சொ. தொ. | வினையால் அணையும் பெயர்ச் சொல் தொடர் |
| J. H. | James Hornell |

# தொழிற்கலைச்சொல் அகராதி

**அகர**

பெ. சொ.. மீன் வகை, அகரை மீன்

**அசைமண் ஓடல்**

தொ. பெ. சொ. தொ., வாடைக் காலத்தில், கடலின் அடிப் பகுதியில், நீர் மட்டத்திலிருந்து ஒரு சாண் உயரத்திற்கு மண் அசைந்து கொண்டிருக்கும். புயல் வருமுன்னர் இவ்வறிகுறி உண்டாகும். வள்ளத்தை இயக்கக் கோல் ஊன்றும்போது இந்நுணுக்கமான அசைவைப் பரதவர் உணர்வர்.

**அஞ்சாள**

பெ. சொ. தொ., மீன்வகை, அம் சாளை

**அஞ்சுமீன் குத்தகை**

பெ. சொ. தொ., ரோமன் கத்தோலிக்கக் கிருத்துவர் களான பரதவர்கள் தொழில் முடிந்து கரையேறியதும் தமது மீன்பாட்டிலிருந்து ஐந்து மீனை மாதா கோயிலுக்குச் செலுத்தும் வரியாகக் கருதி அளிப்பர். இதன்மூலம் உண்டாகும் வருவாயைக் கொண்டு கோயில் விழாச் செலவைக் கோயில் பொறுப்பாளர் கவனிப்பார். உவரி, மணப்பாடு ஆகிய ஊர்களில் இப்பழக்கம் உண்டு.

**அடக்காவி**

பெ. சொ. தொ., கட்டுமரத்தைக் கரையேற்றப் பயன்படும் முட்டுக்கட்டை. இதைக் கட்டுமரத்தின் அடியில் முட்டுக் கொடுத்து இலகுவாக மரத்தைக் கரை ஏற்றுவர்.

**அட சரக்கு**

பெ. சொ. தொ., அடைசரக்கு; திருக்கை மீனை ஒருநாள் உப்பில் ஊறவிட்ட பின்னர் மறுநாள் வழக்கம் போல

(கருவாடு தயாரிப்பில் செய்வது போல)க் காயப்போடாமல் மேலும் உப்பிட்டு 40 கிலோ எடையளவில் ஒரே பொட்டணமாகப் பனம்பாயினால் கட்டி வைத்து விடுவர். இதுவே அ(டை)ட சரக்கு; இது கிழக்குக் கடற்கரையில் இருந்து கேரளாவிற்கு விற்பனைக்காக அனுப்பப்படுகிறது. இறைச்சி மீன் உண்ணும் வழக்கம் உள்ள கேரள வாசிகளின் திருமணத்தில் அடசரக்கான திருக்கை மீன் பதார்த்தம் ஒரு சிறப்பான உணவுவகையாகப் பயன்படுத்தப் படுகிறது.

**அடசறது**
தொ. பெ. சொ., அலசுதல்—அடசுதல்; வழக்காற்றுத் திரிபு. கடுவாடு தயாரிப்பிற்காகச் சிமெண்ட் தொட்டியில் ஒரு நாள் ஊறவிட்ட பின்னர் மறுநாள் காயப்போடும் முன்பாக இலேசாக ஒருமுறை நீரில் அலசுதல்

**அடப்பங்கொடி**
பெ. சொ. தொ., கடல்கரைக் கழிகளில் காணப்படும் நெய்தல் நிலத் தாவரம்; கொடியினம். 'அடும்பு' எனச் சங்க இலக்கியங்களிலும் சிலப்பதிகாரத்திலும் இது குறிக்கப் படுகிறது.

**அடல்**
பெ. சொ., மீன்வகை; சாம்பல் வெண்ணிறம் (த.மொ. அ.) இந்நிறமுடைய மீன்

**அடித்தண்டுவாரி**
பெ. சொ. தொ., வள்ளத்தின் கடைசிப் பகுதியில் உட்கார்ந்து தண்டு வலிக்க வசதியாக அமைந்திருக்கும் பட்டி. மரப்பலகை, குறுக்குவாட்டத்தில் அமைக்கப் பட்டிருப்பது.

**அடிநீரோட்டம்**
பெ.சொ.தொ., கடல் தளத்திற்குக் கீழ் ஓடும் நீரோட்டம். Under Current

**அடுக்குப்பல்சுறா**
பெ. சொ. தொ., மீன்வகை. பல்லமைப்பால் பெற்றபெயர். Carcharhinus ellioti. Grey Shark

**அருக்குமிதி**

பெ. சொ. தொ., (அ) உப்பளத் தயாரிப்பில் களியடித்த பின் தளம் இறுகுவதற்காகக் கால்களால் இடைவிடாது சேர மிதித்தல்; (ஆ) மழைக்காலம் முடிந்ததும் இளகியிருக்கும் பாத்தியைப் புதுநீர்விட்டு இறுகும்படி சேர மிதித்தல்.

**அட்டிக்கட்டை**

பெ. சொ. தொ., தோணியின் இறுதிப் பகுதியில் உள்ள கட்டை

**அட்டுப் பிடித்தல்**

தொ. பெ. சொ. தொ., தெப்பங்களிலும் தொட்டான்களிலும் ஜிப்ஸம் படிதல்.

**அணியத்துவாரி**

பெ. சொ. தொ., வள்ளத்தில் துடுப்பு வலிப்பதற்கு வசதியாக அமர்வதற்குரிய பலகை. முகப்பிற்குப் பக்கத்தில் (அண்மை, அணிமை) இருக்கும் பலகை. அத்து—தைத்தல், இசைத்தல். சாரியை என்றும் கொள்ளலாம். வள்ளத்தின் முன்பக்கமுள்ள வாரி.

**அணியம்**

பெ. சொ., வள்ளத்தின் உட்பகுதி உறுப்பு. கடல் கலத்தின் முன்பக்கம் (த.மொ.அ.)

**அண்டளிக்க முடியாத காற்று**

பெ. சொ. தொ., எதிர்கொள்ள முடியாத கடுமையான காற்று

**அண்டை**

பெ.சொ., கட்டுமரத்தின் முன்பகுதியில் உள்ள ஓர் உறுப்பு

**அமக்கரம்**

பெ. சொ., படகின் மேல் பகுதியில கட்டப்படும் உறுப்பு. இதன் மறுபெயர் ஓட்டம் என்பதாகும்.

**அமரம்**

பெ. சொ., தோணியின் பின்புறம் (த. மொ. அ.). அதாவது நீரில் முன்னேறிச்செல்லும் 'முகப்பு'க்கு எதிர்ப்புறம். கலத்தின் பின் பகுதி. Stern.

**அமரத்தட்டுப் பலகை**

பெ. சொ. தொ., படகின் கடைசிப் பகுதியில் ஆட்கள் உட்காரும் பலகை

**அமரத்துக் கட்டை**
*பெ. சொ. தொ., படகின் அடிப்பகுதியில் அமைந்த நுனிக் கட்டை*

**அம்பாரம்**
*பெ. சொ., அடுக்கு, குவியல் (த.மொ. அ.) உப்பு அம்பாரம்*

**அம்பா**
*பெ. சொ., பரதவர் பாடும் தொழிற் பாடல். கடற்கரை மக்களின் நாட்டார் இலக்கியம். நாட்டுப்புறப் பாடல், அந்தாதித் தொடையில் அமைந்தது.*

**அம்பாரம் தேத்துறது**
*தொ. பெ. தொ. தொ., வாரு பலகையால் உப்பு அம்பா ரத்தை அழகாகத் தேய்த்து 'பிரமிட்' அமைப்பில் அமைத் தல்*

**அம்ழு**
*பெ. சொ., ஆழ்கடலுக்குச் சென்று மீன் பிடிக்கும் பரதவர் கரை திரும்ப ஒரு வாரமாகும். அதுவரை மீன் கெடாமல் இருக்கப் பதப்படுத்தல் வேண்டும். வலைப்பட்ட மீன் களைக் குடல் நீக்கி உப்பு அடைத்துப் பாடஞ்செய்வர். அதற்குப் பயன்படும் கருவிகளாவன : அம்ழு, அரிவாள், கத்தி, கண்டர்கோடரி, குத்தி ஆகியன.*

**அயிர**
*பெ. சொ., மீன்வகை. சிறுமீன் (த. மொ. அ.)*

**அயிட்ரான்**
*பெ. சொ., ஆங்கிலச் சொல். உப்புநீரின் அடர்த்தியை அளந்து அறிவிக்கும் கருவி.* Hydrometer

**அரக்கோட்டை**
*பெ. சொ. தொ., அரை கோட்டை. சிப்பி, சுண்ணாம்பு ஆகியனவற்றின் முகத்தலளவு. கோட்டை—112 படி; அரைக்கோட்டை—56 படி*

**அரச்சவலை**
*பெ.சொ.தொ., அரச்சவலை. அரை வலை. சங்கு, முத்துக் குளிப்போர் இதனைப் பை மாதிரியான அமைப்பில் இடுப்பில் கட்டியிருப்பர். கடலுள் இறங்கித் தொழில்*

செய்யும்போது சங்கு, முத்துக்களை அள்ளிச் சேகரிப்ப தற்கு இது பை போலப் பயன்படும்.

**அரணிசுறா**

பெ. சொ. தொ., மீன்வகை. Scyllium marmoratum

**அரணிவாரு**

பெ. சொ. தொ., கரையிலிருந்து கடல் நோக்கி (வங்கக் கடலைப் பொறுத்தமட்டில் மேற்கிலிருந்து கிழக்காக) ஓடும் நீரோட்டம்

**அரவட்டம்**

பெ. சொ. தொ., அரை வட்டம். வட்டக்காரர் தாம் மீன் பிடித் தொழிலில் சம்மாட்டியார் மூலமாகப் போட்ட முதலுக்குத் தினமும் பெறும் வட்டத்தொகையில் அரைப் பங்கு. வட்டம். ரூ. 6-25; அரைவட்டம்—ரூ. 3-12

**அரிவாள்**

பெ. சொ., மேற்குறிப்பு காண்க. மீன் பதப்படுத்தப் பயன் படும் கருவி.

**அருந்ததி**

பெ. சொ., நேர் வடக்கில் வானில் காணலாகும் விண்மீன். பரதவர் நடுக்கடலில் திசையறிய இதன் இருப்பிடத்தைக் கவனித்தல் நலம்.

**அரும்பு அரியறது**

தொ. பெ. சொ. தொ., அளங்களைத் தயாரிக்கும்போது பாத்திகளில் மிதக்கும் கசடுகள், சருகுகளைக் கையினால் அரித்தல், அப்புறப் படுத்தல்.

**அரைச்சான்**

பெ. சொ., சங்கு குளிக்கும் பரதவர் தமது இடுப்பில் கட்டி யிருக்கும் வலையாலாகிய பை. சுமார் நூறு சங்குகள் கொள்ளும் அளவினது.

**அல**

பெ. சொ., அலை. Surf, Wave

**அலசல்**

பெ. சொ., அலைசல், அலைவு, தொந்தரை (த. மொ. அ.) கடல் அலை மிகுதியாக இருத்தல். வள்ளம் முதலானவை நிலை நிற்க முடியாமல் தவித்தல், ஆடுதல்

**அலசா**
பெ. சொ., சுக்கான்

**அலநீளம்**
பெ. சொ., அலை நீளம். Wave-length

**அலவாரி**
பெ. சொ., தானாகக் கடலில் வந்து ஒதுங்கும் மரம்

**அலவாக் கர**
பெ. சொ. தொ., அலை வாய் கரை. கடற்கரை, அலைக் கரை. இச்சொற்றொடர் எல்லாக் கடற்கரையையும் பொது வாகக் குறிக்குமென்றாலும் தொண்டி கடற்கரையைச் சிறப்பாகக் குறிக்கும்.

**அல வைத்தல்**
தொ. பெ. சொ. தொ., அலை வைத்தல். பரதவர் பிள்ளை கள் அலையோடு ஓடி வரும் கடல் விளையாட்டு

**அலவு**
பெ. சொ., அலைவு. நீர் அலைவு. Tide

**அவுளியா**
பெ. சொ., மீன்வகை

**அளக்கரர்**
பெ. சொ., உப்பமைப்போர் (க. த. அ.)

**அளக்கர்**
பெ. சொ., கடல், உப்பளம் (க. த. அ.)

**அளக்கர்த்திணை**
பெ. சொ., கடலாற் சூழப்பட்ட நிலம் (க. த. அ.)

**அளத்தி**
பெ. சொ., நெய்தல் நிலப் பெண் (க. த. அ.)

**அளத்து நிலம்**
பெ. சொ. தொ., களர் நிலம் (க.த.அ.) உப்பு தயாரிக்க உதவும் நிலம்

**அளம்**
பெ. சொ., உப்பளம், நெய்தல் நிலம் (க.த.அ.)

**அளவர்**
பெ. சொ., உப்பளங்களில் தொழில் செய்யும் தொழிலாளர் கள் (அ. சி.) உப்புமைப்போர், அளக்கிறவர் (க.த.அ.)

இவர்களுக்குப் பண்ணையன், பண்ணையர் என்ற பெயர் களுமுண்டு.

**அளவுப்பலகை**

பெ. சொ. தொ., அளப்பதற்குப் பயன்படும் பலகை. Gauging board

**அளி**

பெ. சொ., குளிர்ச்சி (த. மொ. அ.)

**அளுவாபார்**

பெ. சொ. தொ., அளுவா—பாசி முதலியன. Aluva Par; Aluva : rotten (Pasi, Sea weed being understood) Rotten Weed Bank (J.H.)

**அறுத்து வாங்குதல்**

தொ. பெ. சொ. தொ., உப்புப் பாத்திகளை மண்வெட்டி யினால் ஒரே மட்டமாகச் செதுக்கி விடுதல்

**அறை ஓடல்**

தொ. பெ. சொ. தொ., பரதவர் விண்மீன்களை வெள்ளி என்பர். இவ்வெள்ளிகள் வானிலிருந்து மறைந்து விழும். மறைதல்—அறை ஓடல். இவர்கள் வெள்ளிக்குப் பல பெயர் கொடுத்து வழங்குவர். அரும் வெள்ளி, கப்ப வெள்ளி, கூட்டு வெள்ளி, சோற்று வெள்ளி, விடி வெள்ளி என்பன அப்பெயர்கள். விழும் விண்மீனை இருப்பிட அடிப் படையில் கூட்டு வெள்ளி அறை ஓடுதல், விடிவெள்ளி அறை ஓடுதல் என்பர். இங்ஙனம் அறை ஓடினால் புயல், காற்று, கொந்தளிப்பு ஆகியன ஏற்படலாம் என்று பரதவர் அஞ்சுவர். இது இவர்தம் நம்பிக்கை.

**அன்னபார்**

பெ. சொ. தொ., அன்னம்—நீர்வாழ் பறவையினம். வாத்து போன்றது. Anna Par; Anna or Annam Signifies Swan (J.H.)

**அஷ்டமி**

பெ. சொ., அட்டமி நாளில் கடல் நீரோட்டம், தண்ணி அற ஓடுதல் ஆகியன குறிப்பிடத் தகுந்த மாற்றத்திற்குள் ளாகும். இவ்வாறே அமாவாசை, பௌர்ணமி ஆகியன குறிக்கத்தக்கன,

**ஆசாரி**
பெ.சொ., கட்டுமரம், தோணி, படகு, வள்ளம் ஆகியன கட்டிச் செதுக்கும் தச்சு வேலை செய்பவர்

**ஆஞ்சான்**
பெ. சொ., மரக்கலப்பாய் கட்டுங்கயிறு (த.மொ.அ.)

**ஆஞ்சாங்கயிறு**
பெ. சொ. தொ., பார்க்க—ஆஞ்சான்

**ஆஞ்சாம்பற்றி**
பெ. சொ. தொ., மரக்கலப்பாய் கட்டும் தூண் (த.மொ.அ.)

**ஆஞ்சான்வாரி**
பெ. சொ. தொ., வள்ளம் அல்லது தோணியில் சிறியபாய் கட்டப்பட்டிருக்கும் மரத்தைத் தாங்கும் பலகை. இதற்குப் 'பிச்சில்வாரி' என்ற மறுபெயரும் உண்டு.

**ஆடாதிருக்கை**
பெ. சொ., மீன் பெயர். திருக்கை மீனின் வகை. காண்க: திருக்கை. சுறாவேலா என்னும் சுறாமீனை விட அபாயகரமானது. சங்கு குளிக்கும் பரதவர்க்கு ஊறு விளைவிப்பது. குளியல் சங்கு எடுக்கும்போது பாய்ந்து தொடையைக் கடித்துவிடும் இயல்பினது. பரதவர் இம்மீனுக்கு மிகவும் அஞ்சுவர்.

**ஆட்டுக்கத்திகோலா**
பெ. சொ. தொ., மீன் வகை. Belone Strongulara

**ஆத்துவாய்**
பெ. சொ. தொ., ஆற்றுவாய். ஆறு கடலுடன் கலக்குமிடம்

**ஆத்துவி ஆறுபாகம்பார்**
பெ. சொ. தொ., ஆற்றுவாய் ஆறுபாகம் பார். Bank near mouth of the river in six fathoms (J.H.)

**ஆத்தொம்பது பார்**
பெ. சொ. தொ., ஆற்று ஒன்பது பார். Nine fathom bank off river; 'Ombadu' a corrupt form of 'onpatu' (J.H.)

**ஆமை**
பெ. சொ., நீர் வாழ் உயிரினம். Turtle

**ஆயினிஸ்மரம்**

பெ. சொ. தொ., வள்ளம் முதலானவை செய்யப் பயன்படும் மரம். கேரளாவில் உற்பத்தியாவது. எண்ணெய்ப் பசை யுடையதும் நீர் உறிஞ்சாத் தன்மையுடையதும் ஆகும்.

**ஆரால்**

பெ. சொ., மீன் வகை. Rhyncobdella Spp.

**ஆலந்தலைப்பத்தூரி**

பெ. சொ. தொ., ஆலந்தலை பத்து பார். The 10 fathom bank of Alanthalai (J. H.)

**ஆலா கத்துதல்**

தொ. பெ. சொ. தொ., கடற்கரையோரக் காட்டுப் பகுதி களில் வாழும் ஒரு பறவை ஆலா. இது கத்தினால் மழை வரும் எனப் பரதவர் நம்புகின்றனர். 'ஆலா கத்த கத்த, அத்திமழை பெய்ய பெய்ய'—என்பது அவர்தம் பழமொழி.

**ஆவட்ட சோவட்ட**

ஓர் ஒலித் தொடர். இத்தொடரை, 'மிகுதியான களைப்பு எனும் பொருளில் பரதவர் பயன்படுத்துகின்றனர்.

**ஆவுகரியா**

பெ. சொ., மீன் வகை. குட்டி போட்டுப் பால் கொடுக் கும் மம்மூலியா இனத்தைச் சேர்ந்த மீன். இராமநாதபுரம் மாவட்டம் குருசடைத்தீவில் நெடுங்காலமாகப் பிடிக்கப் படுவது

**ஆழம்**

பெ. சொ., கடலாழம். Depth

**ஆழிக்கடல்**

பெ. சொ. தொ., 'ஆழி' எனினும் 'கடல்' எனினும் ஒன்றே. ஆழம் மிகக்கொண்டது ஆழி. பரதவரிடையில் 'ஆழிக் கடல்' எனும் தொடர் 'ஆழமான கடல்' எனும் பொருளில் வழங்கப்படுகிறது.

**ஆளி**

பெ. சொ., சிப்பி. கிளிஞ்சல் போன்றது (த. மொ. அ.) Oyster

**ஆளித்திடல்**

பெ, சொ, தொ., ஆளிப்படுகை, Oyster bed

**ஆறாம் வெள்ளி**

பெ. சொ. தொ., நடுக்கடலில், பரதவர் திசையறிய, வழி காட்டும் ஆறு புள்ளிகள் போலத் தோற்றமளிக்கும் விண்மீன் தொகுதி, கூட்டம். ஆறு வெள்ளி—ஆறாம் வெள்ளி

**ஆறுனபாட்டன்**

பெ. சொ. தொ., பரதவர் கடல் தொழிலில் ஈடுபட்டிருக்கும்போது காற்று பலமாக வீசினால் கடல் நீரைக் கையால் அள்ளி பாய்மீது தெளித்துக் கும்பிட்டு வணங்குவர். இப்படிச் செய்யும்போது 'ஆறுனபாட்டன், நேர்பாட்டன், சீர்பாட்டன்' எனக் கூவுவர். இங்ஙனம் செய்வதால் காற்று (பாட்டன் முறை) சினந்தணிந்து அடங்கும் என நம்புவர்

**ஆனி**

பெ. சொ., ஒருவகைக் கிளிஞ்சல் மீன்; கூர்மையான தோற்றம் கொண்டது.

**ஆனைமட்டி**

பெ. சொ. தொ., ஒருவகைக் கடல் கிளிஞ்சல்

**ஆல்பிடித்தல்**

தொ. பெ. சொ. தொ., தெப்பம், தொட்டான் முதலிய உப்பளப் பாத்திகளுக்கு வரப்பு போடுதல்

**இடரியாய்மரம்**

பெ. சொ. தொ., அவசர, ஆபத்துக் காலங்களில் உதவிகரமாக இருக்கும் பாய்மரம். Hullock; Trysail

**இணைவலை**

பெ. சொ. தொ., வலையின் உறுப்பு. வலைகளைத் தம்முள் ஒன்றிக்கொன்று இணைக்கும் பகுதி

**இப்பி**

பெ. சொ., சிப்பி, சங்கு (க. த. அ.)

**இயற்கை முத்து**

பெ. சொ. தொ., கடல் சிப்பிகளில் இயற்கையாகவே உண்டாகும் முத்து. Genuine Pearl

**இராக்கெட் சங்கு**

பெ. சொ. தொ., இராக்கெட்—விண்கலம்; இராக்கெட் திடீரென்று விண்ணில் சீறிப் பாய்வதுபோல இவ்வகைச்

சங்கு 5 அடி, 10 அடி நீரில் பாய்வதால் பெற்ற பெயர். அண்மைக் காலங்களில் லாஞ்சுகள் புழக்கத்திற்கு வந்தான பின்னர் இழுவை வலைகளில் இது மிகுதியாகக் கிடைக்கத் தொடங்கிற்று. சங்கு வகைகளுக்குள் இது அரியது. விரல் அளவுடையது. ரூ. 1000/—வரையும் பெறுமதி உடையது.

**இராமேஸ்வரம்**
பெ. சொ., சங்கு வகை. இராமேஸ்வரம் பகுதியில் மட்டும் கிடைக்கும் ஒருவகைச் சங்கு. இடவாகு பெயர்.

**இராவணன் விழி**
பெ. சொ., தொ., சங்கு வகை, இராமநாதபுரம் மாவட்டத்தில் கிடைப்பது

**இருட்டு அமாவாசை**
பெ. சொ. தொ., அமாவாசை நாளிரவு மிகவும் இருட்டாக இருப்பதால் அமாவாசையை 'இருட்டமாவாசை' என்றே அழைப்பர். இந்நாளில் கடல்நீரோட்டம், தண்ணி வாட்டம் ஆகியன குறிப்பிடத்தகுந்த மாற்றம் கொள்ளும்.

**இரு பிறவி**
பெ. சொ., சங்கு வகை. இராமநாதபுரம் மாவட்டத்தில் கிடைக்கும் வகை

**இரைமீன்**
பெ. சொ. தொ., பெருமீன் பிடிப்பதற்காகத் தூண்டில் மூள் கொக்கியில் மாட்டும் சிறுமீன்

**இலுப்பா**
பெ. சொ., ஒருவகைச் சுறாமீன்

**இழுபடகு**
பெ. சொ. தொ., இழுவைப் படகு. Tug boat

**இழுப்புக்கயிறு**
பெ. சொ. தொ., வலையை இழுப்பதற்கு வசதியாக அமைந்த கயிறு. Tow rope

**இழுவலைக்கயிறு**
பெ. சொ. தொ., வலையுடன் இணைந்த கயிறு. Towing Warp

**இழுவலை**
பெ. சொ., வலைவகை Trawlers

**இழுவைக் கயிறு**
பெ. சொ. தொ., இழுக்குங்கயிறு, நெடுங்கயிறு (த. மொ. அ.)

**இழுவைப்படகு**
பெ. சொ. தொ., இழுக்கப்படும் படகு

**இழுவை**
பெ. சொ. இழுவை வலையில் பட்டமீன். Haul

**இளந்தண்ணீர்**
பெ. சொ. தொ., உப்புக்காட்டம் அல்லது அடர்த்தி குறைந்த உப்பு நீர்

**இறம்பாக் கட்டை**
பெ. சொ. தொ., வள்ளத்தில் விழும் அல்லது புகும் கடல் நீரை இறைத்து வெளியேற்றப் பயன்படுகிற கட்டை

**இறல்**
பெ. சொ., கிளிஞ்சல் (த.மொ .அ.)

**இறுக்காவலை**
பெ. சொ. தொ., வலைவகை; தடித்த நைலான் நூலினால் ஆனது. 10 அல்லது 12 அடி அகலமும் 500 அடி நீளமும் கொண்டது. இவ்வலை பல துண்டங்களின் இணைப் பாகும்; வலையின்கண் 3 அங்குல நீளமுடையதாக இருக்கும். வலையின் மேற்புறம் மிதவைக் கட்டைகளும் கீழ்ப்புறம் அளவான சிறு கற்களும் கட்டப்பட்டு கடல்நீரில் வேலி போல் மிதக்கும் இயல்பினது.

**இறால்**
பெ. சொ., மீன்வகை

**இஜட்ஃபீ**
பெ. சொ. தொ., ஆழ்கடல் மீன்பிடி படகு. இதன் நீளம் 43 அடி. Zenebh Boat

**ஈசானதிசை**
பெ. சொ. தொ., வடகிழக்குத் திசை (த.மொ.அ.)

**ஈரப்பதம்**
பெ. சொ. தொ., காற்று வெம்மையாய் இராமல் குளிர்ச்சி யாய் இருத்தல்

**ஈரால்**
பெ. சொ., இரால் இறால் எனும் சொற்களின் முதல் நீட்சி

**உக்கயிறு**
பெ. சொ. தொ., வீசுவலையில் உள்ள உள் கயிறு

**உருவலை**
பெ. சொ., வலைவகை

**உப்பங்கழி**
பெ. சொ. தொ., கடற்கரையருகில் நீண்ட கால்வாய்களாக அமைந்திருப்பது. கடல் நீர் ஏறி இறங்கும் கால்வாய். காயல். உப்பளம் (க. த. அ.) Back water

**உப்பங்காத்து**
பெ.சொ.தொ., உப்பு அம் காற்று கடற்காற்று (க.த.அ.) தென்கிழக்கிலிருந்து வீசும் கடற்காற்று எனும் பொருளும் உண்டு.

**உப்பளவர்**
பெ. சொ., உப்பு விளைவிப்போர், பரதர் (க.த.அ.) வெள்ளுப்புப் பகருநர் மீன்வலைப் பரதவர் (சிலம்பு. இந்திரவிழவு. 25)

**உப்பாணி**
பெ. சொ., உப்புச் சுமப்பவன். விளையாட்டில் தோல்வி அடைந்தவன் வென்றவனைச் சுமக்கும் விளையாட்டு (க. த. அ.) உப்புச் சுமத்தல் இழிவெனும் கருத்து உப்பு விளைவிப்போரின் சமூக நிலையைச் சுட்டும்.

**உப்பு**
பெ. சொ., அராகம், இலவணம், இனிமை, உருசி, உவர்த்தல், எல்லை, கடல், மகளிர், விளையாட்டு (த. மொ. அ.)

**உப்புக்கரித்தல்**
தொ. பெ. சொ. தொ., உவர்த்தல் (த. மொ. அ.)

**உப்புக்களிக்கெளிறு**
பெ. சொ., மீன்வகை. Arius Jella

**உப்புத்தண்ணீர்த்தீவுபார்**
பெ. சொ. தொ., Uppu Thanni Tivu Bank; Uppu-Salt; An island close to Nalla Thanni Tivu where the walls are brackish (J.H.)

**உப்பு நீர் போதல்**
தொ, பெ, சொ. தொ., அளவுக்கு அதிகமான வெப்பத்

தாலும் காற்றாலும் உப்பளங்களில் உப்பு மிகவும் பொடிப் பொடியாய்ப் பொடிதல்

**உப்புப் பருதல்**
தொ. பெ. சொ. தொ., உப்பு விளைதல் (த.மொ. அ.)

**உப்புப்பற்றுதல்**
தொ. பெ. சொ. தொ., உப்புப் பிடித்தல் (த. மொ. அ)

**உப்புப் பாத்தி**
பெ. சொ. தொ., உப்பு விளைதற்கிடமான பாத்தி (க.த.அ.)

**உப்புப் பாறை**
பெ. சொ. தொ. கடலடியில் உப்புப் படிவம் படிந்த பாறைகள். Evaporites

**உப்புப் புல்லு**
பெ. சொ. தொ., உப்புப்புல். உவர்த்தரையில் (உப்பளங்களில்) முளைக்கும் புல்

**உப்புப் போடுறது**
தொ. பெ. சொ. தொ., கருவாடு தயாரிப்புக்காகக் கட்டப் பட்டிருக்கும் பெரிய சிமெண்ட் தொட்டிகளில் மீன்களை டன் கணக்கில் கொட்டி உப்பிடுதல்

**உப்பு மாறுதல்**
தொ. பெ. சொ. தொ., உப்பு விற்றல்

**உப்பு மூலை**
பெ. சொ. தொ., தென்கிழக்கு மூலை

**உப்பு வாடி**
பெ. சொ. தொ., உப்பு கொட்டும் மேடை (க. த. அ.)

**உமட்டியர்**
பெ. சொ., உப்பு விற்கும் மகளிர் (க. த. அ.)

**உமரி**
பெ. சொ., கடற்கரைப் பூண்டு; நெய்தல் நிலத் தாவரம். பரதவ சமூகத்தினரால் கீரை உணவாக உட்கொள்ளப் படுகிறது

**உமணத்தி**
பெ. சொ., உமணப் பெண் (க. த. அ.)

**உமணர்**
பெ. சொ., உப்பு விற்கும் ஆடவர் (க. த. அ.)

**உரஉப்பு**

பெ. சொ. தொ., கருவாடு தயாரிப்பில் பயன்படுகிற சிமெண்ட் தொட்டியில் ஒருவாரகாலமாகச் சேர்ந்திருக்கும் உப்பை அள்ளி வெளியே கொட்டிவிட்டுப் புதுத் தண்ணீர் விடுவர். இப்படி அள்ளப்படும் உப்பானது மீனுடன் ஊறிய உப்பாதலால் நல்ல உரமெனக் கருதப்பட்டு தாவரங்களுக்கு அடி உரமாக போடப்படுகிறது. இது உரஉப்பு.

**உருமால்**

பெ. சொ., வலையால் கட்டிக் கொள்ளப்படும் தலைப் பாகை

**உல்லம்**

பெ. சொ., மீன்வகை (அ. சி., த. மொ. அ.)

**உல்லாவலை**

பெ.சொ. தொ.. வலைவகை; உல்லம், வஞ்சிரம், வவ்வால் ஆகிய மீன்களைப் பிடிக்கப் பயன்படும் வலை. வலைக்கண் 2 அங்குலம் கொண்டது. பல துண்டங்களின் இணைப்பு; ஒரு துண்டு வலை 15 அடி அகலமும் 50 அடி நீளமும் கொண்டதாகும். இப்படி பத்துக்குக் குறையாத துண்டங்களை இணைப்பதால் உருவாவது 100 கட்டவலை, 60 கட்ட வலை என்று பரதவர் கூறுவர். வலை மேல்புறம் மிதக்கும் மிதவைக் கட்டைகளின் எண்ணிக்கையால் இதன் அளவைச் (நீளம்) சுட்டுவர். காற்று, வெள்ளம் ஆகிய வற்றிற்கு ஏற்பப் பரதவர் இவ்வலையைக் கையாளுவர். ஒருவகையான துவர்ச்சாயம் தோய்க்கப்பட்ட இவ்வலைகள் முன்னாளில் ஆந்திரப் பிரதேசத்திலிருந்து வந்தன. துவர் நுணுக்கம் ஆந்திரர் மட்டுமே அறிந்ததாகும். தற்போது இதற்குப் பதில் நைலான் வலை பயன்படுத்தப்படுகிறது.

**உவரி அந்தோனியார் கோயில் பிடித்தபார்**

பெ.சொ.தொ., Ovari Anthoniyarkoil Piditha Par; Ovari—the name of a village; Anthoniyarkoil-St. Antony's Church; Bank touching St. Antony's Church at Ovari (J.H.)

**உவரி அந்தோனியார் கோயில் வள்ளைவிளைபார்**

பெ. சொ. தொ., Ovari Anthoniyarkoil Vallai Velai par (J.H.)

**உவர்நீர்**

பெ. சொ , உப்புநீர். Brackish water

**உழப்புமிதி**

பெ.சொ. தொ., உப்பளத் தயாரிப்புக்காகக் களிமண்ணில் உழவுபோட்ட பின்னர் காலால் குறுக்கவும் நெடுக்கவும் நடந்து மிதித்தல்

**உழவு போடுறது**

தொ. பெ. சொ. தொ., அளத்தை மாடுகட்டி உழுதல்

**உளுவை**

பெ.சொ., மீன்வகை. Butis butis, Glassogobius Spp.

**உள்ளான்**

பெ. சொ., மீன்வகை, இராமநாதபுரம் மாவட்டக் கடற்கரையில் பிடிக்கப்படும் மீன்வகை. மிகுந்த சுவையுடையது, "உள்ளதை எல்லாம் விற்றாவது உள்ளான் வாங்கிச் சாப்பிடு" என்பது பழமொழி.

**ஊசி**[1]

பெ. சொ., வள்ளத்தின் உறுப்பு

**ஊசி**[2]

பெ,சொ.. வலை தயாரிக்க உதவும் சிறுகருவி

**ஊசிகோலா**

பெ.சொ., மீன்வகை. Belone Strongulara

**ஊசிப் பலகை**

பெ.சொ.தொ., பரதவர் மீன்பிடி கருவிகளுள் ஒன்று

**ஊச்சி**

பெ.சொ., பொடி சிப்பி

**ஊஞ்சல் மரம்**

பெ.சொ.தொ., கடலூர்த்தி தயாரிப்புக்கு உதவும் மரம் Albizzia Amara

**ஊடச்சு**

பெ. சொ., வள்ளம், தோணி இவற்றின் அடித்தளத்தில் அமைந்திருக்கும் அச்சு. Axis

**ஊடம்**

பெ.சொ., மீன்வகை. 'ஊடகம்' (த.மொ.அ.)

**ஊடிணைப்பு**

பெ.சொ. தொ., வலைகட்டும்போது சிறு அளவில் இரு முனைகளை இணைக்கப் பயன்படும் கயிறு

**ஊடுருவிப்பார்**
பெ.சொ.தொ., Possibly has reference to a Cavernous Condition of the rock, enabling fish to pass in and out of the cavities. Uduruvi—Penetrating or passing through (J.H.)

**ஊத்தா**
பெ.சொ., வலைவகை. தூரிபோன்ற அமைப்புடையது

**ஊத்திப்பார்**
பெ.சொ. தொ., Snail bank, Oti or Uti, a snaill ike molluse, probably a corrupt form of Uri, the name of a small spiral shell-fish (gastropod) that is an active enemy of the Pearl Oyster during the first four months of life (J.H.)

**ஊறக்கருவாடு**
பெ. சொ. தொ., கீறி (பிளந்து) உப்புவைத்துப் பதப் படுத்தப்பட்ட கருவாடு

**ஊரா**
பெ.சொ., மீன்வகை. Acanthurus Spp. Surgeon fish

**ஊரி**
பெ.சொ., மீன்வகை. Amply pharngodon

**ஊளைக்காத்து**
பெ.சொ., ஊதல் காற்று, ஊதைக்காற்று

**ஊளா**
பெ.சொ., மீன்வகை. நெடுவாய் மீன் (த.மொ.அ.) Sphyraena Obtusata

**ஊளி**
பெ.சொ., மீன்வகை. கொக்கிக் கயிற்றால் பிடிக்கப்படும் மீன். Sphyraena Obtusata

**ஊன்**
பெ.சொ., சங்கினுள் உள்ள தசை. சங்குக் கிடங்கினுள் குவியலாகக் கொட்டியிருக்கும் சங்கிலிருந்து வடியும் ஊன்.

**எச்சிப்படுதல்**
தொ.பெ. சொ.தொ., சங்கு, முத்து குளிப்பவரை சுறாக் கள் கடித்தால், பரதவர் 'எச்சில் பட்டுவிட்டது' எனும் தொடரால் இதனை உணர்த்துவர்.

**எடவலை**

பெ.சொ.தொ., வலைவகை. 'எடவலை' இறக்குவதற்கு முன்னரே தென்னை, பனை மட்டைகளைக் கடலின் குறிப் பிட்ட பகுதியில் போட்டு வைத்திருப்பர்; பின்னர், 'எட வலை'யை அப்பகுதியில் பக்குவமாக இறக்கி மட்டைகளை மொய்த்துக் கொண்டிருக்கும் மீன்களையெல்லாம் வலைக் குள் விழுமாறு நீரில் மூழ்கி நுழைப்பர். இவ்வலைக்குக் கம்பி வலை, மதவலை எனும் மறுபெயர்களும் உண்டு.

**எரசல்**

பெ. சொ., கனம் குறைந்த, இலேசான உப்பு

**எருமை நாக்கு**

பெ. சொ., மீன்வகை. Brachirus Commersonii

**எழுத்தாணிச் சங்கு**

பெ. சொ. தொ., சங்கு வகை. நீளமாகவும் கூர்மையாகவும் ஏறக்குறைய எழுத்தாணி போன்ற அமைப்பில் இருப்பது. உவமை வகையால் வந்த காரணப்பெயர்

**எளநாடு**

பெ. சொ., கடல் படுகையில் இருக்கும் சல்லி நிலத்தில் (பார்க்க-கடல்படுகை, சல்லிநிலம்) கம்பங்கதிர் அமைப்பில் 'சங்குப்பூ' இருக்கும். இதற்கு 'எளநாடு' என்று பெயர். ஒரே ஓர் எள நாட்டில் பல்லாயிரக்கணக்கான சங்குகள் உற்பத்தியாகின்றன. லாஞ்சிக்காரர்கள் வலை போட்டுச் சங்கு பிடிக்கும் முறையால் இந்தச் சங்குப்பூக்களை (எளநாடுகளை) நசுங்கி அழியும்படி செய்து விடுகின்றனர். இதனால் சங்கு உற்பத்தியும் சங்குத் தொழிலும் பாதிக்கப் படுவதாக வள்ளத்தில் சென்று சங்கு குளிக்கும் குளியர்கள் கூறுகின்றனர்.

**எஸ். டி. பி.**

பெ. சொ., டீசலால் இயங்கும் விசைப்படகு; இதன் நீளம் 32 அடி; இழுப்பு வலை, கில்நெட் ஆகியன இப்படகில் மீன்பிடிக்கப் பயன்படுகின்றன. இதில் தொழில் செய்வ தால் கிடைக்கும் வருமானத்தில் 60% விசைப்படகு உரிமையாளரும் 40% தொழிலாளரும் பிரித்துக் கொள் கின்றனர். டீசலுக்கு ஆகும் செலவு இருவருக்கும் பொது

வானது. இப்படகில் பணி செய்ய ஆறு ஆட்களுக்குமேல் தேவைப்படுவர். Stand Trawler Boat

**ஏத்துமீன்**

பெ. சொ. தொ., கடல் நீரோட்டத்தை எதிர்த்து ஏறும் மீன். நீரோட்டத்திசைக்கு எதிர்த்திசையில் நீந்தும் மீன்

**ஏரா[1]**

பெ. சொ., வள்ளம் அல்லது படகின் அடிக்கட்டை. Keel. மரக்கலத்தின் அடிமரம் (த. மொ. அ.)

**ஏரா[2]**

பெ. சொ., வள்ளத்தின் இரண்டாவது ஏரா

**ஏராக்கட்டை**

பெ. சொ. தொ., பெருவலைப் படகின் அடிப்பகுதி

**ஏலம்**

பெ. சொ., மீனவர் வலையில்பட்ட மீன்பாட்டினை உச்ச கட்ட விலைக்கு ஏலம் போடுதல். Auction

**ஏறல்**

பெ. சொ., கிளிஞ்சல் (த. மொ. அ.)

**ஏறா முதல் பலகை**

பெ. சொ. தொ. ஏறா—நீர் ஏற முடியாத மேடு (த. மொ. அ.). மரக்கலம் நீரில் மிதக்கும்போது நீர் பரப்பிற்கு மேல் உள்ள வள்ளத்தின் சுற்றுப்புற முதல் சட்டம்.

**ஏறா இரண்டாம் பலகை**

பெ. சொ. தொ., ஏறாவில் இரண்டாம் சுற்றுச் சட்டம். பார்க்க—ஏறா முதல் பலகை

**ஏறினி**

பெ. சொ., கடலின் வெள்ளப் பெருக்கு

**ஏற்றுமதி**

பெ. சொ., கிழக்குக் கடற்கரையிலிருந்து வெளிநாடுகளுக்கு அனுப்பப்படும் பொருட்கள்—இல்மனைட் மணல், உப்பு, உலர் இலைகள், கருவாடு, தேங்காய் எண்ணெய், பச்சிலை, பட்டைகள், பனந்தும்பு, மிளகாய், வெங்காயம் ஆகியன. Export

**ஐ. பீ.**

பெ. சொ., டீசலால் இயங்கும் விசைப்படகு. இதன் நீளம் 30 அடி; ஆழ்கடல் மீன்பிடிப்புக்கு பயன்படுவது. நாள் வருமானத்தில் 65% படகு உரிமையாளரும் 35% தொழிலாளரும் பிரித்துக் கொள்வர்; இப்படகில் தொழில் செய்ய 4 அல்லது 5 தொழிலாளர் போதும். Illugasan Boat

**ஐராத்தீவுகுடாமுத்துபார்**

பெ. சொ. தொ., Irai Tivu Kuda Muthu Par; Irai —literally finger joint, inch; Kuda—bay; Muthu —Pearl (J. H.)

**ஐவிரலி**

பெ. சொ., சங்கு வகை. மனிதருடைய விரிந்த கைவிரல்களைப் போன்ற அமைப்பில் இருக்கும் சங்கு. ஐவிரல் சங்கு என்பதன் சுருக்கம்.

**ஐவிரல் சங்கு**

பெ. சொ. தொ., பார்க்க—ஐவிரலி

**ஒட்டி**

பெ. சொ., சிறு அளவிலான மீன் வகை; திமிங்கலம் போன்ற பெருமீன்களை அழித்து அவ்வினம் கடலில் பெருகாதவாறு இம்மீன் பார்த்துக் கொள்கிறது எனப் பரதவர் நம்புகின்றனர்; மனிதர் பாதம் போன்ற வடிவுடைய இந்த 'ஒட்டி' மீனானது திமிங்கலம் போன்ற பெருமீன்களின் புறத்தே ஒட்டிக் கொண்டு துளைபோட்டு இரத்தம் முழுவதையும் உறிஞ்சிக் குடித்துவிடும் இயல்பினது; இதனால் திமிங்கலம் முதலானவை ஓர் எண்ணிக்கைக்குள் மட்டுப்படுகின்றன என்பர் பரதவர்.

**ஒட்டுமுத்து**

பெ. சொ. தொ., உள்ளே திடமாகவும் கெட்டியாகவும் இராமல் திரவத்துளிகள் அமையப் பெற்ற முத்து. Blister Pearl.

**ஒட்டடம்**

பெ. சொ., பார்க்க—அமக்கரம்; படகின் மேல் பகுதியில் கட்டப்பட்டிருக்கும் ஓர் உறுப்பு

**ஒட்டு முளை**

பெ. சொ. தொ., வலிக்கின்ற தண்டுகளைப் பிணைத்து வைக்கின்ற முளை போன்ற உறுப்பு

**ஒத்தமரத்துவாரி**

பெ. சொ. தொ., கடல் தொழிலாளிகள் உட்கார்ந்து கொண்டு 'தண்டு' (துடுப்பு) வலிக்க வசதியான பலகை. அணியத்துவாரியின் பயனைப் போல பயன்படுவது. அத்து —தைத்தல் இசைத்தல்

**ஒமல்**

பெ. சொ., உமல். மீன் பிடிக்கிறவர்களின் ஓலைப் பை (த. மொ. அ.) பெரும்பாலும் தென்னோலையால் ஆன பெட்டி

**ஒரு தோணி வலை**

பெ. சொ. தொ., கடல் தொழிலில் ஒரு தோணிக்கு வேண்டிய வலை; வலையின் அளவுப் பெயர்

**ஒரு மரத்து வலை**

பெ. சொ. தொ., கடல் தொழிலில் ஒரு கட்டு மரத்திற்கு வேண்டிய வலை

**ஒரு மரத்துவாரி**

பெ. சொ. தொ., ஒரே தடியால் உருவாக்கப்பட்ட கட்டு மரம்

**ஒழினிவெள்ளம்**

பெ. சொ. தொ., வெள்ளம்—நீரோட்டம். கிழக்கிலிருந்து மேற்காக ஓடும் நீரோட்டம் (திசைகள் மன்னார் வளை குடாவைப் பொறுத்த மட்டில் குறிக்கப்படுகிறது)

**ஓங்கல்[1]**

பெ. சொ., மீன் வகை

**ஓங்கல்[2]**

பெ. சொ., மரக்கலம் (த. மொ. அ.)

**ஓடக்கரை துண்டுபார்**

பெ. சொ. தொ., ஓடை கரை துண்டு பார். Narrow and Small bank towards the Shore (J.H.)

**ஓடக்கரை பார்**

பெ. சொ. தொ., ஓடை கரை பார். Narrow bank towards the Shore (J.H.)

**ஓடத்துறை**
பெ. சொ. தொ., ஓடம் நிற்கும் இடம். Quay

**ஓடம்**
பெ. சொ., கடலூர்தி. Craft

**ஓடு கயிறு**
பெ. சொ. தொ., Trolling line

**ஓரா**
பெ. சொ., மீன்வகை (த.மொ. அ.)

**ஓலப்பாய்**
பெ. சொ. தொ., ஓலைப்பாய். கருவாடு கட்ட பயன்படும் பாய்

**ஓலைவக்கிறது**
தொ. பெ. சொ. தொ., உப்பள வரப்புகளின் இருபுறமும் வரப்பு பாதுகாப்பிற்காக பனை அல்லது தென்னை ஓலையைப் பதித்தல்—ஓலை வைத்தல்

**ஓலைவால்திருக்கை**
பெ. சொ. தொ., மீன்வகை. Dasyatis Sephen

**ஓலைவாளை**
பெ. சொ. தொ., மீன்வகை. ஓலை வாளை. Trichiurus haumela

**கங்காணி**
பெ. சொ., தோணியில் 'மேஸ்திரி' போல தொழில் பார்ப்பவர். பார்க்க—சவருக்குப் போதல்

**கச்சாங்காத்து**
பெ. சொ. தொ., கீழ்க்காற்று அல்லது கொண்டல் காற்று எனும் பொருளில் இராமநாதபுரம் மாவட்டத்திலும் தெற்கிலிருந்து வீசும் காற்று எனும் பொருளில் திருநெல்வேலி மாவட்டத்திலும் பயன்படும் சொல்

**கச்சால்**
பெ. சொ., ஞூன்பிடிக்கும் கூடு (த.மொ.அ.)

**கச்சான்**
பெ. சொ., தென்மேற்குக் காற்று. மழை வரும் முன்னர் வீசும் காற்று. 'கச்சான் மழைக்கு மச்சான்' என்பது பழமொழி

**கச்சாக் கழி**

பெ. சொ. தொ., கச்சாவலையில் உள்ள கைப்பிடிக்கழி

**கச்சாங்கோடை**

பெ. சொ. தொ., தென்மேற்குத் திசையிலிருந்து வட கிழக்குத் திசைநோக்கி வீசும் காற்று

**கச்சாவலை**

பெ.சொ.தொ., வலைவகை. இது இருவகைப்படும். (1) வட்டமான கழியைச் சுற்றிக் கூம்புபோல ஒருவலை அமைந்திருக்கும்; இது கைக்கு அடக்கமாகவும் சிறு அளவிலும் காணப்படும். இதனைப் பயன்படுத்தி இறால், நண்டு ஆகியனவற்றைப் பிடிப்பர். (2) நீளமான இரண்டு கழிகளில் பை போன்ற அமைப்பில் பிணைக்கப் பட்டிருக்கும்; இதனை இருவர் பயன்படுத்தி கோலாமீன் பிடிப்பர்.

**கஞ்சி கொடுத்தல்**

தொ.பெ.சொ.தொ., வலை உறுதியாக விளங்குவதற்காக அரிசிமாவினால் கஞ்சி செய்து வலைக்குக் கஞ்சியிட்டு உறுதிப் படுத்தல்

**கஞ்சி வைத்தல்**

தொ. பெ. சொ.தொ., மேற்படி விளக்கம் காண்க. பருத்தி வலையை உறுதியாக்கவும் குற்றம் கழிவதற்காகவும் அரிசி அல்லது கேழ்வரகுக் கஞ்சியில் நனைத்தல்

**கடகம்**

பெ. சொ., பனைநாரால் பின்னப்பட்ட பெட்டி. மீன் விற்கும் பெண்டிர் பயன்படுத்தும் கருவி

**கடப்பலகை**

பெ. சொ. தொ., கட்டு மரத்தின் கடைசியில் உள்ள சுக்கான் பலகை

**கடம்பாளம்**

பெ.சொ., மிதவை போன்ற அடையாளக்கருவியை நிலை நிறுத்தும் கயிறு. Buoy anchor rope

**கடலடி**

பெ. சொ., கடலின் அடிப்படுகை. Benthic; Sea bottom

**கடலடிக்குன்று**

பெ.சொ.தொ., பார். கடலின்கீழுள்ளபாறை. Submarine ridge

**கடலம்மை**
பெ.சொ.தொ., கடல் தாய், கடல். உருவகம்.

**கடலாமை**
பெ. சொ. தொ., ஆமை வகை. சிலர் இதனை உணவுப் பொருளாக உட்கொள்வர். இதில் சில வகைகள் நச்சுத் தன்மை உடையவை

**கடலிறக்கம்**
பெ. சொ. தொ., தாழ்கடல். Low tide

**கடலுளுவை**
பெ. சொ. தொ., மீன்வகை

**கடலேத்தம்**
பெ. சொ. தொ., உயர்கடல். கடல் ஏற்றம். High tide

**கடலோடி**[1]
வி. அ. பெ., கடலில் தொழில் செய்பவர். Seaman

**கடலோடி**[2]
பெ. சொ. தொ., மரக்கலமோடுவோன்

**கடல் கழி**
பெ. சொ. தொ., கடலையொட்டிய கால்வாய். Firth

**கடல் அறைஓடல்**
பெ. சொ. தொ., காண்க—அறை ஓடல்

**கடல் உடும்பு**
பெ. சொ. தொ., ஒருவகைக் கடல் மீன்

**கடல் எடுத்தல்**
பெ. சொ. தொ., சமுத்திரம் பெருகுதல்

**கடல் ஓட்டு**
தொ. பெ. சொ. தொ., கப்பலோட்டு

**கடல் கழுகு**
பெ. சொ. தொ., மீன்வகை. Erne

**கடல் கன்னி**
பெ. சொ. தொ., கடல் தேவதை. கடலோடிகளான பரத வர்களின் வணக்கத்திற்குரிய பெண் தெய்வம். மீன்வகை. பாம்பன் கடலில் 7அடி நீளமும் 2அடி அகலமும் உள்ளவை யாக இவை அகப்படுகின்றன. இவை 60 ஆண்டுகள் வரை வாழும். முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்காமல் குட்டி

போட்டு பால் கொடுக்கும். பரதவர் கடல்கன்னியைக் கடவுளாகக் கருதுவதால் இவற்றை உணவாக உட்கொள்வதில்லை. கடல் கன்னியின் தோல் பணப்பை செய்ய பயன் படுகிறது. Mermaid

**கடல் கட்டி**
பெ. சொ. தொ., செம்படவன், மச்சங்களின் வாய கட்டு பவன்

**கடல்காத்து**
பெ. சொ., கடல் வழி வீசும் காற்று. Sea breeze

**கடல் கால்**
பெ. சொ. தொ., இரு பெருங்கடல்களை இணைக்கும் நீர் இணைப்பு (ஜலசந்தி). Strait

**கடல் குதிரை**
பெ. சொ. தொ., மீன்வகை. Trachyrhamphus Serratus

**கடல் கூம்பு**
பெ. சொ. தொ., சிறுகுடா. Cove

**கடல்கோரை**
பெ. சொ. தொ., கடல்நீர்த் தாவரம். Agar

**கடல் சுரப்பு**
பெ. சொ. தொ., கடல் கொந்தளிப்பு

**கடல் பன்றி**
பெ. சொ. தொ., கடல் வாழ் உயிரினம்

**கடல் புலி**
பெ. சொ. தொ., கடல்வாழ் உயிரினம்

**கடல் முனை**
பெ. சொ. தொ., கடல் அந்தம்

**கடல் திட்டு**
பெ. சொ. தொ., கடல் நடுவில் உள்ள சிறுநிலம். Head land

**கடல் நாய்**
பெ. சொ. தொ., கடல்வாழ் பிராணி. Seal

**கடல் நீரோட்டம்**
பெ. சொ. தொ., கடலில் ஓடும் நீரோட்டம். Sea Current

**கடல் பசு**
பெ. சொ. தொ., இது ஒரு சிறிய திமிங்கலம் போன்றது. 8 முதல் 12 அடி நீளம் உடையது. கடற்பூண்டுகளைத் தின்று உயிர் வாழ்வது. Dugong

**கடல் பஞ்சு**
பெ. சொ. தொ., கடல்வாழ் உயிரினம். பவழ இனம், Anthozon

**கடல் படுகை**
பெ. சொ. தொ., கடலடிப் படுகை. Sea bed

**கடல் பன்னி**
பெ. சொ. தொ., கடல் பன்றி. Dolphin

**கடல் பள்ளம்**
பெ. சொ. தொ., கடலடியில் உள்ள பள்ளம். Trough

**கடல் பாறை**
பெ. சொ. தொ., இராமநாதபுரம் மாவட்டக் கடல் பகுதியில் உள்ள நல்ல தண்ணீர்த்தீவு, உப்புத்தீவு, தலையாரித் தீவு, வெள்ளித்தீவு, முள்ளித்தீவு, முயல்தீவு, மண்ணளித் தீவு, குருசடைத் தீவு, பூ முறிச்சான் தீவு, சிங்களத் தீவு, புல்லித் தீவு, கச்சத்தீவு ஆகிய பல சின்னஞ்சிறிய தீவுகளைச் சுற்றியும் கடலோரத்திலும் இப்பாறைகள் உண்டாகின்றன. தெளிந்த நீராறுகள் வந்து சேரா இடமாகவும் படிவங்கள் சேரா இடமாகவும் இருப்பின் இப்படிப்பட்ட கடல் பாறைகள் உருவாகும். Coral Reefs

**கடல் புலி**
பெ. சொ. தொ., சுறாமீனின் மறுபெயர்

**கடல் பேய்**
பெ. சொ. தொ., மீன்வகை. உருவமும் பற்களும் பயங்கரமான வடிவமைப்பில் உடையவை. மிகப் பருத்தும் குறுகியும் மனிதர்களும் பிராணிகளும் அஞ்சத்தக்க வகையில் செயல்படுபவை. (அ.சி.)

**கடல் முயல்**
பெ. சொ. தொ., ஓடில்லா நத்தை. Aplysia

**கடல் வண்டல்**
பெ. சொ. தொ., கடல்வடிப் படியும் படிவங்கள். Marine Sediment

**கடல் வயலா(க) இருத்தல்**
தொ. பெ. சொ. தொ., கடல் மிகவும் அமைதியாக இருத்தல்

**கடல் வாங்கலா(க) இருத்தல்**
தொ. பெ. சொ. தொ., கடல் சிறிதளவு கொந்தளிப்பாக இருத்தல்

**கடல் வாத்து**
பெ. சொ. தொ., மீன்வகை. Eider

**கடல் விறால்**
பெ. சொ. தொ., மீன்வகை. Elacate nigra

**கடல் வெள்ளரி**
பெ. சொ. தொ., கடல் அட்டை. Sea Cucumber

**கடாயக் கோல்**
பெ. சொ. தொ., கட்டுமரம், தோணி ஆகியவற்றின் பின் பகுதியிலிருந்து குத்திக் கலத்தை முன்னோக்கிச் செலுத்தும் கோல்

**கடுந்தண்ணி**
பெ. சொ. தொ., காட்டம் அல்லது அடர்த்தி மிகுந்த உப்புநீர்

**கடுப்புக் குழி**
பெ. சொ. தொ., பார்க்க—குழிவலை

**கடுமிதி**
பெ. சொ. தொ., அடுக்குமிதிக்குப் பின்பு அளம் இறுகுவதற்காக உப்பு நீர் விட்டு இறுகும்படி மிதித்தல்

**கடுமை**
பெ. சொ., கடல்காற்றின் 'வேகத்தை' இச்சொல் புலப்படுத்துகிறது

**கடையன் பார்**
பெ. சொ. தொ., Kadeiyan Par; The Kadeiyar Caste is that of the lime-burners; it however furnishes a contingent of men who work as divers at the Chank and Pearl fisheries; the lime-burner's Bank (J. H.)

**கடையன்**

பெ. சொ., சுண்ணாம்புச் சுடுதலும் முத்துக் குளித்தலும் செய்யும் பரதவப் பிரிவினர் (அ. சி., ம. த. பே.)

**கட்ட சுறா**

பெ.சொ.தொ., மீன்வகை. Carcharhinus Melonopterus

**கட்டா**

பெ. சொ., மீன்வகை. Chorinemus Spp. Leather Jacket

**கட்டியிழுத்தல்**

தொ. பெ. சொ. தொ., வலையைக் கரைக்கு இழுத்தல். வள்ளத்தைக் கரைக்கு இழுத்தல். Towing

**கட்டு கட்டுதல்**

தொ. பெ. சொ. தொ., உலர்மீனை (கருவாட்டை)க் கட்டு கட்டாகக் கட்டுதல்

**கட்டுத்தறி**

பெ. சொ. தொ., கடல் கலத்தின் மேல் தளத்தில் உள்ள கம்பம். Bollard

**கட்டுமரம்**

பெ. சொ. தொ., சில மரத்தடிகளை வலுவான கயிற்றால் பிணைத்து ஆக்கப்பட்ட மிதவை. பாறை, பார் என வழங்கப்படும் கற்குவியல். கல்மலை நிறைந்த கடற்பகுதிகளில் இது தொழிற் செய்ய பயன்படுகிறது. வள்ளம், தோணி ஆகியன பாறைகள் நிறைந்த கடலில் மோதி உடைந்துவிடும் அபாயமுண்டு. ஆனால் கட்டுமரங்கள் இப் பாறைகளால் உடைவதில்லை. எற்றித்தள்ளப்படுகின்றன. திருச்செந்தூர் முதல் கூட்டப்புளி வரை கட்டுமரங்கள் புழக்கத்தில் உள்ளன. இராமநாதபுரம் மாவட்டத்தில் கட்டுமரங்கள் குறைவு. காரணம் பார்கள் இல்லை. திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டங்களில் பாறைகள் அதிகமாதலால் கட்டுமரங்களும் மிகுதி. Catamaran.

**கட்டுவலை**

பெ. சொ. தொ., வலைவகை. Stake net.

**கட்டையடித்தல்**

தொ. பெ. சொ. தொ., கால்மிதியால் கெட்டிப்படுத்தப் பட்ட உப்பள தளத்தைக் கனமான மரக்கட்டைக் கொண்டு அடித்து இறுகும்படிச் செய்தல்

**கட்டை பற்றல்**

தொ. பெ. சொ. தொ., வலையைக் கழுவிக் காய வைக்கும் போது வலை விரைவில் காய்ந்து விடும். மிதப்புக் கட்டை காயாது. ஆகவே புரட்டிப் போடுவர். இதற்குக் கட்டை பற்றல் என்று பெயர்.

**கணலா**

பெ. சொ., மீன்வகை

**கணவா**

பெ. சொ., மீன்வகை, 'கணவாய்' (த.மொ.அ.). இம்மீன் நிறைய கிடைக்கும் பார் 'கணவாபார்'. Sapio

**கணவாபார்**

பெ. சொ. தொ., Kanava Par; Kanava—Cuttle fish; Bank abounding in Cuttle fish (J.H.)

**கணி**

பெ. சொ., வலைக்கண்

**கண்டமரம்**

பெ. சொ. தொ., கடற்கரைப் பகுதியில் காணலாம். ஒரு வகைத் தாவரம். மரம்

**கண்டர் கோடாரி**

பொ. சொ. தொ., பார்க்க—அம்மு. தங்கு வலை; ஆழ் கடலில் மீன் பிடிக்கும் பரதவர் கரையேறுவதற்குள் மீன் கள் கெட்டுப் போகாமல் இருக்கக் குடலை அப்புறப்படுத்தி உப்பிட்டுப் பதப்படுத்துவர்; இதற்கு உதவும் இரும்பாலான கோடாரியாகும்

**கண்டல்**

பெ. சொ., மீன்வகை

**கண்ணாடி**

பெ. சொ., சங்கு, முத்துக்குளிப்போர் கடலின் அடியில் தொழிற்படும்போது உப்பு நீரால் கண்கள் எரியாமல் இருக்கவும் கண்களை அகலத்திறந்து சங்கு, முத்துச் சிப்பி களைத் தேடிச் சேகரிக்கவும் வசதிப்படும்படியாக அணியப் படும் கண்ணாடி. இரும்புத் தொழிற்பட்டறையில் கண் பாதுகாப்பிற்காக அணியப்படும் கண்ணாடி போன்றது. Watch glass.

**கண்ணாடி மீன்**
பெ.சொ.தொ., மீன்வகை. Ambassis, Glass fish

**கண்ணி**
பெ. சொ., வலைச் சந்து. One of the spaces in a net.

**கண்ணிப் பலகை**
பெ. சொ., மீன்பிடி கருவி. Mesh Board

**கதம்பறால்**
பெ. சொ. தொ., இறால் வகை

**கதிர்**
பெ. சொ., வலைக்குப் பயன்படும் நூலை முறுக்கேற்றும் கருவி

**கத்தி**
பெ. சொ., மீனைப் பதப்படுத்த உதவும் கருவி. பார்க்க: அம்மு, கண்டர்கோடரி

**கப்பலோட்டி**
பெ. சொ. தொ., கப்பல் ஓட்டுநர். Sailor

**கப்ப வெள்ளி**
பெ. சொ. தொ., கப்பல் போன்று தோற்றமளிக்கும் விண் மீன். இவ்விண்மீன் வடகிழக்குத் திசையில் காணப்படும்

**கப்பி**
பெ. சொ., பாய்மரத்தில் பாய் ஏற்றவும் இறக்கவும் பயன் படும் உருளை

**கம்பி**
பெ. சொ., மீன்பிடி தொழிலில் பயன்படுவது. தூண்டிலின் கொக்கிப் பகுதிக்கு முன் உள்ளது. மீன்களால் கயிறுகள் கடிக்கப்படுமாதலால் இதனைத் தடுக்கக் கம்பியைப் பயன் படுத்துவர்

**கம்பி வலை**
பெ. சொ. தொ., காண்க : எடவலை

**கம்மாக்காரர்**
பெ. சொ., இச்சொல் எளிய மீனவரைக் குறிக்கிறது

**கயிறு**
பெ. சொ., பாய் கட்டவும் பிறதேவைகளுக்கும் உதவும் நூல், நைலான் கயிறு

**கயிறுகட்டி அரிதல்**

தொ. பெ. சொ. தொ., உப்பள வரப்புகள் நேராக அமையும் பொருட்டு கயிற்றைக் கட்டி மண்வெட்டியால் அரிதல்

**கயிறு காட்டியாச்சு**

தொ. பெ. சொ. தொ., கடலில் வலை இறங்கும்போது பெருவலை வைக்கத் தொடங்கியாகி விட்டது என்பதை இத்தொடருக்குரிய பொருளாகப் பரதவர் கொள்கின்றனர்.

**கயிறு சாம்புதல்**

தொ. பெ. சொ. தொ., வலைக் கயிற்றை வள்ளம் அல்லது லாஞ்சில் இழுத்துக்கட்டுதல்

**கரல்**

பெ. சொ., மீன்வகை

**கரவல**

பெ. சொ. தொ., வலைவகை. கரைவலை. 2 கிலோ மீட்டர் நீளமும் 200 மீட்டர் அகலமும் 5மீட்டர் உயரமும் உடையது. கரையிலிருந்து கிளம்பிய படகுக்காரர்கள் கடலில் வெவ்வேறு திக்குகளில் நின்றுகொண்டு அவற்றின் ஊடே கரைவலையை விரித்துப் பலவாறு குரல் கொடுத்து மீன்களை விரட்டி 6 மணி நேரத்தில் பல இலட்சம் மீன்கள் பிடித்து விடுவர். இது மீன்களைப் பிடிக்க ஒரு பொறிபோல் பயன்படுகிறது. இதில் மீன்களை ஏமாற்றுவதற்காக தேங்காய்த் துண்டுகள் பொருத்தப்பட்டிருக்கும். கரையிலிருந்து கரைவலையை இழுத்து மீன்களைக் கரை சேர்ப்பர்.

**கரி எண்ணை**

பெ. சொ. தொ., கீல், தார், கரி எண்ணெய்

**கரிமுட்டைச் சுறா**

பெ. சொ. தொ., மீன்வகை. சுறா இனம். Carcharhinus Menisorrah; Dog Shark

**கரிமுஞ்சிப் பாரை**

பெ. சொ. தொ., மீன்வகை. Caranx ire

**கரிய கருவல்பார்**

பெ. சொ. தொ., Kariya Karuval Par; Karuval—black; Probably from the colour of the Surface of the rock; In-Shore black bank (J.H.)

**கரிவ்லங்கோலா**
*பெ. சொ. தொ., மீன்வகை.* Belone Chorum

**கருக்கல்**
*பெ. சொ., விடியல் பொழுது*

**கருப்பு மட்டலா**
*பெ. சொ., மீன் வகை.* Acanthopagrus berda

**கருப்புத்தேளி**
*பெ. சொ. தொ., மீன்வகை,* Callichrous Spp.

**கருமை**
*பெ. சொ. தொ., கரிய நிற மை. கணவாய் மீன் இந்நிறமையைப் பயன்படுத்தித் தற்காத்துக் கொள்கிறது. காண்க : கணவாய்*

**கருவாடு**
*பெ. சொ., உலர்ந்த மீன்.* Dehydrated fish

**கருவாட்டுத் தொட்டி**
*பெ. சொ. தொ., டன் கணக்கில் மீன்களைக் கொட்டி உப்பிட்டு ஊற வைப்பதற்கு ஏற்றுவகையில் அமைந்த சிமிண்ட் தொட்டி. 5 அடி நீளம், 4 அடி அகலம் கொண்டது*

**கருவேலன்**
*பெ. சொ., மரவகை. கடல் கலங்கள் செய்ய ஏற்றது*

**கருவை**
*பெ. சொ., மீன்வகை.* Aetobatus flagellum; Spotted eagle Ray

**கரை**
*பெ. சொ., பரதவர் இடையில் இச்சொல் கடற்கரையைக் குறிக்கும்*

**கரைகாரர்**
*பெ. சொ., கடற்கரையில் முதல் மரியாதைக்கு உரியவர். ஜாதித் தலைவன்*

**கரைபார்**
*பெ. சொ. தொ.,* Karai Par; Bank lying towards the shore (J. H.)

**க(ை)ர மரம்**

பெ. சொ. தொ., கரைப் பகுதியில் தொழில் செய்யப் பயன் படும் சிறிய மரங்கள் (கட்டு மரங்கள்) 'கரைமரம்' எனப் படும். கவலை வலை, நண்டு வலை போன்றன கரை மரத் தொழிலுக்கு ஏற்றவை.

**கரையார்**

பெ. சொ., கடற்கரையில் வசிப்பவர். பரதவர். மீன் வலைஞர். (க. த. அ.) Fishermen

**கலக் கடல்**

பெ. சொ. தொ., கச்சத்தீவுக்கு அண்மையில் உள்ள கடல் பரப்பு; மன்னார் வளைகுடாப் பரதவர் கலக்கடல் எனும் தொடரை மேற்குறித்த பொருளில் வழங்குகின்ற னர்.

**கலக்கு**

பெ. சொ., கரையிலிருந்து கடல் நோக்கி ஓடும் நீரோட்டம் (அரணிவாடு) காரணமாகக் கடற்கரையிலிருந்து சுமார் 13 மைல் தொலைவு வரை கடல்நீர் தெளிவில்லாமல் கலங்கியிருத்தல். இக்கலக்கை கடந்த பின்னரே சங்கு குளியர்கள் சங்கு குளிப்பர்.

**கலக்குமட்டிச் சுறா**

பெ.சொ.தொ., மீன் வகை. Carcharhinus Melonopterus

**கலங்கரை விளக்கு**

பெ. சொ. தொ., கலம் கரை விளக்கு. கலம்—வள்ளம், தோணி, லாஞ்சி, கப்பல் ஆகியன. கரை—கடற்கரை. கரை காணாத கடலுள் இறங்கிய கடல் தொழிலாளர்கள் இரவு நேரத்தில் கரையறிந்து திரும்பவும் தமது கரைக்குத் திரும்ப வழிகாட்டும் விளக்கு. Light house

**கலப்பத்து வேலை**

தொ. பெ. சொ. தொ., படகில் கயிற்றுப் புரியை அடிக்கும் வேலை. இது ஆசாரியின் வேலையாகும்.

**கலவா**

பெ. சொ., மீன் வகை

**கல் உழுவை**

பெ. சொ. தொ., மீன் வகை. Eleotris fusca

**கல்லாந்துளை**

பெ. சொ. தொ., மீன் வகை

**கல்லாப் பாறை**

பெ. சொ. தொ., மீன்வகை. Caranx armatus

**கல்வெட்டி**

பெ. சொ., மீன் வகை

**கவடை**

பெ. சொ., சங்கு வகை

**கவல வலை**

பெ. சொ. தொ., வலைவகை. 'கவலை' எனும் பெயர் கொண்ட மீனைப் பிடிக்க உதவும் வலை; நூலால் ஆனது; வலைக்கண் அரை அங்குலம் கொண்டது; துவர் தோய்ந்தது; பல துண்டு வலைகளின் இணைப்பு: இதன் நீளம் 200 அடி. கரைமரத் தொழிலுக்கு இவ்வலை மிகுதியும் பயன் படுகிறது.

**கவுண்டன்**

பெ. சொ., இந்து சமயத்தைச் சார்ந்த பரதவர் (ம. த. பே.)

**கவுளிப் பாத்திரம்**

பெ. சொ., சங்கு வலை

**கழி**

பெ. சொ., கடல் கால்வாய், கடல் நீர்நிலை, காயல். Lagoon

**கழிவு மீன்**

பெ. சொ. தொ., வள்ளத்தில் உள்ள மீனை ஏலம் விட்ட பின்பு இறுதியில் எஞ்சும் காரல் போன்ற சிறு மீன்கள். Trash fish

**கழிவு முள்ளு**[1]

பெ. சொ., கடல் நடுவே உள்ள முள்காடுகள்

**கழி முள்ளு**[2]

பெ. சொ., மீனிலிருந்து கழிக்கப்படும் முள்

**கழியர்**

பெ. சொ., உப்பளவர், நெய்தல் நில மக்கள்

**கழிவுச் சங்கு**

பெ. சொ., சங்கு, வளையல் போன்ற பொருட்கள் தயாரிக்கப்பட்டபின் எஞ்சிய பகுதி கழிவுச் சங்கு எனத் தள்ளப்படும். இதனைப் பயன்படுத்தி உயர்ரக சுண்ணாம்பு முதலானவை தயாரிக்கப்படுகின்றன.

**களி நண்டு**

பெ. சொ. தொ., நண்டு வகை

**களியடித்தல்**

தொ. பெ. சொ. தொ., உப்பளத் தயாரிப்பில் முதன் முதலாக வெற்று நிலத்தில் களிமண் கொட்டுதல்

**களி விரித்தல்**

தொ. பெ. சொ. தொ., கும்பலாகக் கொட்டிய களிமண்ணை அளத்துடன் கலக்கும்படிச் சமமாகப் பாத்தி முழுமைக்கும் பரப்புதல்

**கள்ளமீன் பிடிக்கிறவர்**

வி. அ. பெ., வேறொரு வள்ளக்காரர் கடலில் இறக்கி யிருக்கும் வலையில் பட்டிருக்கும் மீன்களைத் திருட்டுத் தனமாக அள்ளித் தம் வலையில் போட்டுக் கொள்பவர். பொதுவாக இச்செயல் இரவு காலங்களில் நடைபெறும். Black-fisher

**கள்ளவலை**

பெ. சொ. தொ., இச்சொல் இருபொருள் உடையது. 1. கரையோரக் கழிமுகங்களில் அல்லது காயல்களில் இரண்டு மூன்று பேர் கழுத்தளவு நீரில் வலை போடுவது; 2. முன்பு யாராலோ போடப்பட்ட வலையில் பட்ட மீன் கள் தம் வலையில் படுமாறு கள்ளத்தனமாக வலை போடு வது. பொதுவாக இது இரவுக் காலங்களில் மிகுதியாக நடை பெறும்.

**கறுப்பில் அகப்பட்டு விட்டது**

தொ.பெ.சொ. தொ., வலை இளக்கும்போது பார் (கடல் பாறை)களில் வலை அகப்பட்டுக் கொள்ளுதலை இத் தொடர் குறிக்கிறது.

**கற்றளை**

பெ. சொ., மீன்வகை

**கன்னத்தீவு ஆறுபாகம்பார்**

பெ. சொ. தொ., Kanna Tivu Aru Pagam Par; Bank of Kanna Tivu in six fathoms (J. H.)

**கன்னபுளி பூண்டுபார்**

பெ. சொ. தொ., Kanna Puli Pundu Par; Bank having a tamarind bush as landmark near Kanna Tivu (J. H.)

**கன்னாத் தோணி**

பெ. சொ. தொ., சிறிய அளவிலான தோணி. கன்னா- ஆங்கிலச் சொல்

**கன்னி மூலை**

பெ. சொ. தொ., தென்மேற்கு மூலை, திசைப் பெயர்

**காகண்டை**

பெ.சொ., கடற்கரையில் உள்ள ஒருவகை நெய்தல் நில மரம்

**காக்காசெந்நெல்**

பெ. சொ. தொ., மீன்வகை. Ambassis myops; Glass perchlet

**காக்காச்சி**

பெ. சொ., மீன்வகை. ஒருவகை மச்சம் (த.மொ.அ.). ‘காக்காய்மீன்’ என்பதின் திரிபாய் இருக்கலாம். Ambassis myops; Glass Perchlet

**காக்கியம்**

தெதே. பெ. சொ., தோணி அல்லது படகில் பலகைகளுக்கு இடையே கயிற்றுப் புரி அடித்தல்

**காணா**

பெ. சொ., வள்ளத்தின் உள்ளுறுப்பு

**காணாக்காரன்**

பெ. சொ., கட்டுமரத் தலைவன்

**காணாங்கெளுத்தி**

பெ. சொ. தொ., மீன்வகை. Rastrelliger Kanagurta

**காத்து இறங்கியிருத்தல்**

தொ. பெ. சொ. தொ., காற்று இறங்கியிருத்தல்; கடல் தொழிலாளர் நடுக்கடலில் தொழிற்படும் போது காற்று தாழ இறங்கி வீசுதல். மழை வருவதற்கு முந்திய நிலை.

**காப்பாத்தடி**

பெ. சொ., தண்டு வலிப்பதற்குப் பயன்படுத்தப்படும் வளைந்த தடி

**காயப்போடுதல்**

தொ. பெ. ப்சா. தொ., கருவாட்டுத் தொட்டியில் ஊறிய. மீனை மறுநாள் அலசி சிமெண்ட் அல்லது கடப்பைக் கல் அல்லது மணல்தளத்தின்மீது அமைந்த தாட்டின்மேல் காயப் போடுதல். தாட்டு—தேங்காய் நார்ப்பாய்

**காயல்**

பெ. சொ., கழி, கழிமுகம் (த.மொ.அ.). காயல் என்பது கடலோரத்தில் ஆற்றுக்கால்களாய் அமைந்த நிலப்பகுதி. தமிழ்நாட்டில் திருநெல்வேலி மாவட்டம் தவிர வேறெங் கும் காயலைக் காணமுடியாது. இம்மாவட்டத்தில் ஸ்ரீ வைகுண்டம் வட்டத்தில் காயல் பட்டினம், மஞ்சள் நீர்க் காயல், பழைய காயல், புன்னைக் காயல் என்னும் பெயர்களில் ஊர்கள் உள்ளன. ('சோமலெ') Lagoon

**காரப்பொடி**

பெ. சொ. தொ., மீன்வகை. காரல்பொடி. Leiognathns Gindus

**காரல்**

பெ. சொ., மீன் வகை. Silver bellies; Equula Spp.

**காராப்பூச்சி**

பெ. சொ. தொ., மீன் வகை

**கார்பாய்**

பெ. சொ., ஆங்கிலச் சொல். சுற்றிலும் பிரம்பால் பின்னப் பட்ட வலுவான கண்ணாடியால் ஆகிய பெருங்குப்பி. லாஞ்சிகளில் குடிநீர் கொண்டு செல்ல பயன்படுத்தப்படும் பாத்திரம். Carboy

**கால்**

பெ. சொ., வள்ளத்தின் உறுப்பு, மரக்கால் (த. மொ. அ.)

**காவலாளி**

பெ. சொ., மீன்வகை. கோலாமீன். நாட்டார் பாடல்களி லும் காணப்படும் சொல்லாட்சி

**காவளைப் பூண்டு**

பெ. சொ. தொ., நெய்தல் நிலத் தாவரம். கோலா மீன் பிடிக்க இது பயன்படுத்தப் படுகிறது. பார்க்க—கோலா

**காவி**

பெ. சொ., மிதவை (க. த. அ., த. மொ. அ.)

**காவுதல்**

தொ.பெ. சொ., தோணில் தூக்கிச் செல்லுதல்; கடல் தொழிலுக்குச் செல்ல ஏற்பாடுகள் செய்யும் பரதவர் கட்டு மரங்களின் உறுப்பு மரங்களையோ அல்லது வேறு கனமான பொருட்களையோ இருவர் தோள்மீது ஏற்றிக் காவட்டுப் போட்டு எடுத்துச் செல்லுதல்; தோணி காவுதல், வலை காவுதல் என்பர்.

**காற்றும் கடலுமாக இருத்தல்**

பெ. சொ. தொ., கடுமையான காற்றும் கொந்தளிப்பான கடலுமாக இருத்தல்

**காளி**

பெ. சொ., கடல் கலங்களில் காணலாகும் அடி அகடு) கால்வாய். கடலூர்தியின் அறை (த. மொ. அ.) Bilge

**கில்நெட்**

பெ. சொ. தொ., விசைப்படகுகளில் ஆழ்கடல் மீன்பிடிப் புக்காக இவ்வலை பயன்படுத்தப் படுகிறது. வலைக்கண் 4 அங்குலமுடையது. அகலம் 20 அடி நீளம் ஒரு மைல் கூட இருக்கும். வலையின் மேற்புறம் மிதவைகளும் கீழ்ப்புறம் கற்களும் இணைக்கப் பட்டிருக்கும். கில்நெட்— ஆங்கிலம்

**கிழங்காளி**

பெ. சொ., மீன்வகை

**கீறிச்சி உப்புவைக்கிறது**

தொ. பெ. சொ. தொ., மீனைப் பிளந்து உப்பு வைத்துக் கருவாடாக்கச் செய்யும் செயல்

**கிளாச்சங்கு**

பெ. சொ. தொ., சங்கு வகை. சங்கு வகைகளில் மிகவும் சிறியது. குழாய்ச்சங்கு எனும் வார்த்தையின் திரிபு.

**கிளாத்தி**

பெ.சொ., மீன்வகை. Balistes Capistratus (Marked file- fish), Balistes maculatus (Spotted-file fish)

**கிளாத்திபார்**

பெ.சொ.தொ., Kilatti par : Bank abounding in trigger fish (J.H.)

**கிளிஞ்சல்**

பெ.சொ., நீர்வாழ் உயிரினம். கடல், கழி முதலிய நீர் நிலைகளில் வாழ்வது. இருமேலோடுகளால் ஆனது. இதனுள் கிளிஞ்சல் பூச்சி பாதுகாப்பாக வாழ்கிறது. இந்த ஓடுகள் சுண்ணாம்புத் தயாரிப்புக்கு மூலப்பொருளாக உதவுகின்றன. (அ.சி.) Shell

**கிளிஞ்சா**

பெ.சொ., மீன்வகை

**கிறாய்**

பெ.சொ., மீனைக் காயப்போடும் உப்பள உவர் நிலம்

**கீங்கா**

பொ.சொ., கீழ்வளை, வலையின் கீழ்ப் பகுதி

**கீங்காப் பறிதல்**

தொ.பெ.சொ.தொ., கீழ்வலையை எடுத்து விடுதல்

**கீரிமிஞ்சாளை**

பெ.சொ.தொ., மீன்வகை

**கீழக்கரை வள்ளியமலை விலங்குபார்**

பெ. சொ.தொ., Outer bank of the white hill at Kilakarai; Kilakarai literally the East Coast. Kilai —east; Karai—Shore; Vellai—white; malai—hill; Velangu—further or outer; Kilakarai a port on the East Coast (J.H.)

**கீழ்த்தண்டு**

பெ.சொ.தொ., தோணிப் பாயின் கீழ்ப்பகுதித் தண்டு

**கீழ்ப்பா(ய்)க் கயிறு**

பெ. சொ. தொ., தோணிப்பாயின் கீழ்ப்பகுதிக் கயிறு

**கீழ்வாடை**

பெ. சொ. தொ., வாடைக்கொண்டல் கீழ்க்காற்று (ம. த. பே.)

**கிளிபார்**

பெ. சொ. தொ., Kili Par; Kili—the name of a small fish (Parrot fish) Bank abounding in Parrot fish (J.H.)

**குஞ்சுவலை**

பெ. சொ. தொ., வலைவகை. Spawn Collection net

**குடைஞ்சதோணி**
பெ.சொ. தொ., ஒரே மரத்தில் தோணிபோல் குடையப் பட்ட மரக்கலம். Dug-out Canoes

**குடைஞ்சபடகு**
பெ.சொ.தொ., ஒரே மரத்தில் சிறுபடகு போன்ற அமைப் பில் குடைந்து ஆக்கிய படகு. Dug-out Canoes

**குடாத்தலைபார்**
பெ.சொ.தொ., The bank at the head of the bay (J.H.)

**குடாமுத்துபார்.**
பெ.சொ.தொ., Kudamuthu Par; Kuda-bay; Pearl Bay bank (J.H)

**குடிமகன்**
பெ.சொ., பரதவரின் ஊர்ப்பணி செய்யும் தொழிலாளர்; பரதவர் சமூகத்தின் ஒரு பிரிவினர்

**குடில்**
பெ.சொ., தொழில் முடிந்ததும் துடுப்பு, நீரிறைக்கும் கட்டை, கோல் ஆகியவற்றை வீட்டிற்குக் கொண்டு செல்வர். மழை, புயல் போன்ற காரணங்களால் பல நாட்கள் தொழிலுக்குப் போகாமலிருக்கும்போது வலை முதலானவற்றைக் கடற்கரையில் உள்ள குடிலில் போட்டு வைப்பர்.

**குண்டன் சுறா**
பெ. சொ., மீன்வகை. Carcharhinus limbatus

**குதிப்பு**
பெ. சொ., மீன்வகை. Lactarius Spp. (Big Jawed Jumper)

**குதிரைமுள்ளிச் சங்கு**
பெ. சொ. தொ., சங்குவகை. குதிரைபோன்ற நீண்ட அமைப்புடையதும் ஓட்டைச் சுற்றிலும் முள்போன்ற குமிழ் கள் உடையதுமான சங்குவகை

**குத்தி**
பெ. சொ., தங்குவலை போட்டு மீன் பிடிக்க ஆழ்கடல் போகும் பரதவர் கரை திரும்ப சில நாட்களாகும். அதற்குள் பிடித்த மீன் கெட்டுப் போகாமலிருக்க குடலை அப்புறப்

படுத்தி உப்பிட்டு வைப்பர். இப்படி பதம் செய்வதற்கு உதவும் கருவி

**குத்தித் தாங்குதல்**
தொ. பெ. சொ. தொ., கோலால் ஊன்றிக் குத்திப் படகைத் தள்ளுதல்

**குத்து வலை**
பெ. சொ. தொ., வலைவகை. பொடி மீன், பொடி நாய் பிடிக்க இவ்வலை பயன்படுத்தப் படுகிறது.

**குப்பம்**
பெ. சொ., மீனவர் வாழ்விடம். பரதவர் கிராமம் (த. மொ. அ.) Fishing hamlet

**குப்பி**
பெ. சொ., புட்டி, போத்தல், சில இடங்களில் பிளாஸ்க் எனும் பொருளிலும் வழங்கப்படுகிறது. Bottle; Flask

**குமிக்கிறது**
தொ. பெ. சொ., குவித்தல். உப்பை அம்பாரமாகக் குவித்தல்

**குமுளம்பார்**
பெ. சொ. தொ., Probably this is the bank abounding in hemispherical stones 'Kumulam' a blister like swelling; is applied to the hemispherical masses of Astraid Corals so common on certain sandy oyster banks (J. H)

**குரங்கனி சுறா**
பெ. சொ., சுறாமீன் வகை. இதைப் பார்ப்பது அபசகுனம் (தீய நிமித்தம்) என்பர் பரதவர்

**குரங்கு சுறா**
பெ. சொ. தொ., மீன்வகை. சுறா இனம். பேச்சு வழக்கில் 'கொரங்குச் சுறா' என வழங்கப்படுவது. Carcharhinus Melonopterus

**குரவை**
பெ. சொ., மீன்வகை (த.மொ.அ.)

**[illegible]ட்டா**
பெ. சொ., மீன்வகை

**குருவிச் சங்கு**

பெ. சொ. தொ., சங்குவகை. மிகச் சிறிய அளவிலான சங்கு

**குருவித் திருக்கை**

பெ. சொ. தொ., மீன்வகை. Aetomylus maculatus; Nottled eagle Ray

**குருக்ஸியன் பார்**

பெ. சொ. தொ., Bank of the Cross. Kross (Curusu) a corruption of the Portuguse Cruz, Cross (J.H.).

**குருக்ஸியன் துண்டு பார்**

பெ. சொ. தொ., Small Cruxian Bank (J.H.)

**குழாய்ச் சங்கு**

பொ. சொ. தொ., சங்கு வகை. மிகவும் சிறிய சங்கு. Chank undersized

**குழி வலை**

பெ. சொ. தொ., வலை வகை. இவ்வலை கரையில் இருந்தே மீன் பிடிப்பதற்குப் பயன்படுகிறது. ஓரடி அகலம், ஓரடி நீளத்திற்குச் சிறுசிறு பைகளாக இவ்வலை அமைந்திருக்கும். பைகள் குழிபோன்ற அமைப்பினை உடையன. இவ் வலைப்பை திறந்திருப்பதற்குத் தோதாக ஒவ்வொரு பையின் வாய்ப் புறத்தின் குறுக்கிலும் ஒருகழி கட்டப்பட்டிருக்கும். இக்கழிக்குக் 'கடுப்புக்கழி' என்பது பெயர். இக்கழி ஓரடி நீளம் கொண்டதாகும். இவ்வாறு நூற்றுக்கு மேற்பட்ட பைகள் நீண்ட நீண்ட கயிற்றினால் கீழும் மேலும் இணைக்கப் பட்டிருக்கும். இருவர் இரு பக்கத்திலும் இருந்து கொண்டு வலையைப் பற்றி இழுத்துச் செல்வர். குறுக்கே ஓடி வருகின்ற மீன்கள் வலைக் குழிகளில் அகப் பட்டுக் கொள்ளும். பொதுவாக வெள்ளம், நீரோட்டத் திற்கு எதிர்த்திசையில் வலை இழுக்கப்படும்.

**குளிகல்**

பெ. சொ., சங்கு, முத்துக் குளிப்போர் வள்ளத்திலிருந்து கடலுக்குள் குதிக்கும்போது அடிமட்டத்தை விரைவாக அடைவதற்காகக் காலில் 10 அல்லது 12 கிலோ எடை யுள்ள கல் அல்லது எடைக்கல் கட்டியிருப்பர். இதற்குக் குளிகல் என்று பெயர். குளியாள் கடல் அடி மட்டத்தை அடைந்ததும் சங்கேதமாய் கயிற்றை அசைக்க வள்ளத்

திலிருக்கும் மறு ஷிப்ட் தொழிலாளர்கள் கயிற்றுடன் கட்டப்பட்ட குளிகல்லை விரைந்து மேல் இழுத்து வள்ளத்தில் வைப்பர். இவ்வாறு ஒவ்வொரு முறை கடலுள் இறங்கும்போதும் இக்கல் பயன்படுத்தப் படுகிறது.

**குளிகாரன்**

பெ. சொ., வி. அ. பெ., சங்கு, முத்து ஆகியன குளித் தெடுப்பவர். (த. மொ. அ.)

**குளியன்**

பெ. சொ., வி. அ. பெ., பார்க்க—குளிகாரன்

**குளியோடிகள்**

பெ. சொ., குளியர்

**குள்ளக் கெண்ட**

பெ. சொ. தொ., மீன்வகை. Barbus Stigma

**குள்ளப்பார**

பெ. சொ. தொ., மீன்வகை. Caranx leptolepis

**குறுக்குவிசிப்பலகை**

பெ. சொ. தொ., வள்ளத்தின் குறுக்கு வாட்டத்தில் அமைக்கப்பட்டிருக்கும் மரப்பலகை. கடல் தொழிலாளர் அமர்வதற்கும் பிற செயல்களுக்கும் பயன் படுவது. Thwart

**குன்னு வாடை**

பெ. சொ. தொ., வடமேற்குத் திசையிலிருந்து தென் கிழக்குத் திசை நோக்கி வீசும் மிகக் குளிர்ந்த காற்று

**கூச்சம்**

பெ.சொ., பெரிய பாய்மரத்தை நடுவதற்காக வள்ளத்தின் அச்சில் அல்லது அடித்தளத்தில் அமைக்கப்பட்ட குழி போன்ற அமைப்பு

**கூடை**

பெ.சொ., பனம்பாய், பனைநார் ஆகியவற்றால் செய்யப் பட்டது. மீன் அள்ளவும் சுமக்கவும் பயன்படும் பெட்டி

**கூட்டுவெள்ளி**

பெ.சொ.தொ., இரவுக்காலங்களில் கூட்டமாக வெளிச்சம் தரும் விண்மீன் தொகுதி. 'வெள்ளி' எனும் சொல் பரதவரிடையில் 'நட்சத்திரம்' எனும் பொருள் தருவதாகும்.

**கூதல் காத்து**

பெ.சொ.தொ., குளிர்காற்று

**கூத்தாடியார்பார்**
பெ. சொ. தொ., Kuthadiyar par; Dancer Bank; Kuthadiyar—a dancer (J.H.)

**கூம்பு**
பெ.சொ., பாய்மரம் (மதுரைக் காஞ்சி. 377)

**கூலிமடி**
பெ.செ.தொ./வி.அ.சொ.பெ., கூலிக்காக மீன்பிடி தொழில் செய்யும் பரதவர்

**கூலிவலை**
பெ.சொ.தொ., வலைவகை; சின்னக்கூனி, நெத்திலி போன்ற சிறு மீன்களைப் பிடிக்க இவ்வலை பயன்படுகின்றது. வலைக்கண் மிகச் சிறியது. நெல் அளவு கொண்டது; வலையின் கடைசிப் பகுதி சிறிய நீண்ட பைபோல அமைந்திருக்கும். இவ்வலையின் வாய்ப்பகுதி அகன்றும் இடைப்பகுதி சிறுத்தும் அடிப்பகுதி பெருத்துமிருக்கும்.

**கூறப் பாய்**
பெ.சொ.தொ., கூறைப்பாய். தோணிப்பாய் (த.மொ.அ.)

**கூறி**
பெ.சொ., மீன்வகை. Acanthopagrus berda

**கெசம்**
பெ.சொ., ஆழம். இருண்மை நிறைந்த பேராழம். கசம்—கயம்; கயமூழ்கு மகளிர்—சான்றோர் சொல்லாட்சி

**கெடமால் கட்டை**
பெ.சொ.தொ., வலையின் மேல்புறம் கட்டப்பட்ட மிதப்புக் கட்டைகளுள் ஒன்று. தலைவலைக்கட்டை, தொங்கு வலைக்கட்டை, மோப்புக் கட்டை என்பன பிற.

**கெண்டை**
பெ.சொ., மீன்வகை. Carp

**கெமிகல் உப்பு**
பெ.சொ.தொ., கெமிக்கல்—ஆங்கிலச்சொல். சோடியம் குளோரைடு மட்டும் தனியாக உண்டாகும்படி ஆக்கப்படும்

உப்பு. தொழிற்சாலைகளுக்குப் பயன்படுவது. Chemical Salt

**கெவ்வுதல்**
தொ.பெ.சொ., வலைகளை இழுத்தல். பொதுவாக 'வலை' எனக் கூறப்படுவது பல துண்டுவலைகளின் இணைப் பாகும். ஒரு துண்டுடன் இன்னொரு துண்டை இணைப் பது 'கெவ்வுதல்' எனப்படும். 'கௌவுதல்' எனும் சொல் லின் திரிபாகலாம்.

**கெழுது**
பெ.சொ., மீன்வகை

**கெழுத்தை**
பெ.சொ., மீன்வகை. விஷமுள் உடைய மீன். கெழுத்தி மீன்போலவே இதுவும் விஷமுள்ளைப் பயன்படுத்தித் தற்காத்துக் கொள்ளும். கடலின் அடியில் வளை தோண்டி வாழும் இயல்பினது என்பர் பரதவர்.

**கெளால்**
பெ. சொ., வள்ளம் கடலில் செல்லும்போது காற்று வீசும் திசைக்கு ஏற்ற கோணத்தில் நிறுத்தப்பட்டிருக்கும் பாய் மரத்தின் எதிர்திசை. கீழ்திசை. கீழ் அல்—கீழல்—கிழல்—கெழல்

**கெளுத்தி**
பெ.சொ., மீன்வகை. Arius Sena; Cat fish

**கையசப் பலகை**
பெ. சொ. தொ., வள்ளத்தின் குறுக்குவாட்டில் கடல் தொழிலாளர் அமர்வதற்கும் பிற செயல்கள் செய்வதற்கும் ஏற்ற பலகை. குறுக்கு விசிப் பலகை போன்றது. குறுக்குப் பலகைகள் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு பெயர் உண்டு.

**ங்கவலை**
பெ.சொ., வலைவகை. சிறுவலை

**கொக்கராஞ்சி**
பெ.சொ., கனவா மீனின் முதுகு ஓடு

**கொக்கிக் கயிறு**
பெ. சொ.தொ., மீன்பிடி கருவி. தூண்டில் முள் கோக்கப்பட்ட நீளக் கயிறு.

**கொச்சவாடை**

பெ.சொ.தொ., மீன் அழுகியதால் உண்டாகும் நாற்றம்

**கொடி மப்பு**

பெ.சொ.தொ., மப்பு—மேகம், கொடி (தாவரவகை) போன்று நீளமாகக் காட்சிதரும் மேகம். மேகம் கொடி கொடியாகக் காட்சி தந்தால், கடுமையான காற்று உடனே தோன்றும் என்பர் பரதவர். கடுங்காற்றிற்கு அறிகுறி கொடி மப்பு.

**கொடுக்குமால்**

பெ.சொ.தொ., கடல் கலத்தின் முன் பகுதியில் பாது காப்புக்காக அமைக்கப்பட்ட முக்கோணம் போன்ற காப்புப் பகுதி. Jib

**கொடுவலை**

பெ. சொ. தொ., வலைவகை. பிடித்த மீனைப் போட்டு வைக்க உதவும் கயிற்றுவலையால் ஆன பை போன்ற அமைப்புடையது

**கொடுவா**

பெ. சொ., மீன் வகை. Ambassis dayi; Glassy perchlet

**கொட்டறா**

பெ. சொ., மீன்வகை. Panaeus monodon

**கொட்டறால்**

பெ. சொ., மீன்வகை. Panaeus monodon

**கொட்டுவலை**

பெ. சொ. தொ., வலைவகை. வலைக்கண் ஒரு அங்குலம் உடையதாயிருக்கும். 150 அல்லது 200 அடி நீளம் கொண்டது. இவ்வலையை இறக்கிய பின்னர் வலைக்கு எதிர்திசையில் இருந்துகொண்டு பரதவர் தண்ணீரைத் தடிகொண்டு அடிப்பர். இப்படி அடிப்பதால் ஓடுகிற மீன்கள் இவ்வலைப் பக்கம் ஓடி அகப்பட்டுக் கொள்ளும் என்பர்.

**கொண்டல்**

பெ. சொ., கிழக்கு திசையிலிருந்து வீசும் காற்று. கீழ்க் காற்று (த. மொ. அ.)

**கொண்டவலை**
பெ. சொ. தொ., வலைவகை. இழுவலையின் மறுபெயர் Dragnet

**கொண்டிப்பாறை**
பெ. சொ. தொ., மீன்வகை. Carangoides armatus

**கொண்டுவலை**
பெ. சொ. தொ., வலைவகை. பரதவர் தமது சிறு பிள்ளைகளுக்குப் பயிற்சிக்காக முதலில் இவ்வலையைக் கொடுத்தே பழக்குவர். இச்சிறுவர்கள் முதலில் இவ்வலைகளைப் பயன்படுத்தி இறால் மீன் பிடிப்பர். வலைக்கண் மிகச் சிறியது. வலையின் நீளம் 2 அல்லது 3 அடி முடில் 10 அடிவரை இருக்கும். வலையை விரிக்க [வசதிப்படும்படியாக 'கடுப்புக் கழிகள்' எனும் குறுக்குக் கழிகளைக் கட்டியிருப்பர்.

**கொத்தறல்**
பெ. சொ. தொ., ஒருவகை அறல்மீன். கூந்தல் போன்று வரிகள் உடைய மீன்

**கொத்திப் புரட்டுதல்**
தொ. பெ. சொ. தொ., களியடித்தபின் மண்வெட்டியால் அளத்துடன் கலக்கும்படிக் களியைக் கொத்திப் புரட்டுதல். உழவு போடுவதற்கு முந்திய செயல்

**கொத்துப்பலகை**
பெ. சொ. தொ., பாத்தியில் படிந்திருக்கும் உப்பை வாருவதற்கு வசதியாகக் கொத்தும் பலகை

**கொப்புளிச் சுறா**
பெ.சொ.தொ., மீன்வகை. Carcharhinus melonopterus

**கொமரப்பாரை**
பெ. சொ. தொ., மீன்வகை. Caranx nigrecens; Horse mackerel

**கொம்பன் சுறா**
பெ. சொ. தொ., சுறாமீன் வகை. தலையில் சம்மட்டி போன்ற அகன்ற உறுப்பைப் பெற்றிருப்பது (அ. சி.)

**கொம்பிருக்கை**
பெ. சொ., கட்டுமரத்தின் ஓர் உறுப்பு

**கொம்பு**
பெ. சொ., கட்டுமரத்தின் ஓரப்பகுதியில் உள்ள மரம்

**கொலரிக்காத்து**
பெ.சொ.தொ., குளறிக்காற்று. சீரில்லாமல் விட்டு விட்டு அடிக்கும் காற்று

**கொளிளிமீன்**
பெ.சொ.தொ., மீன்வகை

**கோசு[1]**
பெ.சொ., பாயின் கீழ்ப்புறம். கலத்தின் ஒரு பக்கம் (த.மொ. அ.)

**கோசு[2]**
பெ.சொ., முன்பக்கம் கட்டும் கயிறு

**கோசுவாரி**
பெ.சொ., பாய்மரத்தின் கீழ்புறத்தில் பாயைக் கட்ட பயன்படும் குறுக்குவாட்டக்களி

**கோடு போடுதல்**
தொ.பெ.சொ.தொ., உப்புவாரும் சமயத்தில் கடினமாக இறுகிய உப்புத்தளத்தை நெகிழ்விப்பதற்காகக் கோட்டுப் பலகையால் கொத்துவர். இக்கடினமான வேலைக்குப் பிரதியாக ஒரு எளிமையான வேலையைச் செய்யலாம். கோட்டுப்பலகையால் பாத்தியின் குறுக்கிலும் நெடுக்கிலும் தினசரி கோடு போட்டு வைத்திருந்தால் உப்பை இலேசாக அள்ளிக் கொள்ளலாம்.

**கோடை**
பெ.சொ., மேற்குத் திசையிலிருந்து வீசும் காற்று

**கோடைக் காத்து**
பெ.சொ.தொ., தென்மேற்குத் திசையிலிருந்து நேர் கிழக்குத் திசை நோக்கி வீசும் காற்று

**கோட்டுப் பலகை**
பெ.சொ.தொ., மரப்பல் அமைந்த வாருபலகை

**கோட்டை**
பெ.சொ., சிப்பியின் முகத்தலளவு. 112 படி கொண்டது

**கோட்டமால்**
பெ.சொ.தொ., வலைகளை வைத்துக்கட்டும் பெரிய வலைப்பை

**கோணாவலை**

பெ.சொ.தொ., வலைவகை. இறால் மீன் பிடிக்கப் பயன் படும் வலை. சுண்டுவிரல் பருமனைவிட நுண்ணிய கண் கொண்டது. பெரிய பை போன்ற அமைப்புடையது. இவ்வலையின் வாய்ப்பகுதி 20 அடி அகலக் கயிற்றால் பிணிக்கப்பட்டிருக்கும். இறால்மீன் கூட்டங்கூட்டமாக வரும். இரவு நேரங்களில் பரதவர் இரு தோணிகளில் எதிர்த் திசையில் வலை போட்டு இழுப்பர். பொதுவாக இவ்வலை இரவு நேரங்களில் பயன்படுத்தப்படுகிறது.

**கோரை**

பெ.சொ., கடல் தாவரம். Nutgrass

**கோலா**

பெ.சொ., மீன்வகை. Caucila

**கோலாசுறா**

பெ.சொ.தொ., மீன்வகை. Carcharhinus macloti; Dog Shark

**கோலாச்சி**

பெ.சொ., மீன்வகை, (த.மொ.அ.)

**கோலாமரம்**

பெ.சொ.தொ., கோலாமீன் பிடிக்கச் செல்லும் மரம்

**கோலாவலை**

பெ.சொ.தொ., வலைவகை. ஆழ்கடல் சென்று காவாளைப் பூண்டு, தாழை ஆகியவற்றைப் பயன்படுத்திக் கோலாமீன் பிடிப்பது இப்போது குறைந்து வருகிறது. தற்போது 'கோலாவலை' என்ற வலையையே கோலா பிடிக்கப் பயன்படுத்துகின்றனர். வலைக்கண் அரை அங்குல அளவினது. வலையின் அகலம் 10 அடி நீளம் 500 அடி. வலையின் மேல்புறம் மிதப்புக் கட்டைகளும் கீழ்ப்புறம் அளவான கற்களும் கட்டப்பட்டிருக்கும்.

**கோல்**

பெ.சொ., கட்டுமரத்தைத் தள்ளப் பயன்படும் கோல்

**கோவஞ்சி**

பெ.சொ., சங்கு வகை

**கோவலை**

பெ.சொ., வலைவகை. கடல் நீரோட்டம், ஆற்று நீரோட் டம், கழிமுகம் ஆகியவிடங்களில் இவ்வலை பயன்படுத்தப்

படுகிறது. வலைக்கண்ணி சிறிய அளவினதாக அமைந் திருக்கும். வலை அகலம் 10 அடி, நீளம் 15 அடி. எல்லா வலைகளிலும் உள்ளது போலவே மேல்காக் கயிறு கீழ்க்காக்கயிறு இதற்கும் உண்டு. 10 அல்லது 20 துண்டு வலைகளை ஒன்றாக இணைத்துக் கோவலை உண்டாக்கப் படுகிறது.

**கோவில் புடித்த பத்துபார்**
பெ.சொ.தொ., Kovil Puditha Pattu Par; Kovil—Church; Bank in 10 fathoms having a Church as the leading mark on shore (J.H.)

**கோழிமீன்**
பெ.சொ.தொ., மீன்வகை. Acanthurus Spp; Surgeon fish

**கோனிமே மறு**
பெ.சொ.தொ., மேற்குத் திசையிலிருந்து வடகிழக்குத் திசைநோக்கி ஓடும் நீரோட்டம்

**சங்கரா**
பெ. சொ., மீன்வகை. Gourami; Osphronemus

**சங்கு**
பெ. சொ., இவை நத்தைகளைப்போல் இரண்டு மூடி களைக் கொள்ளாமல் ஒரே ஓடு உள்ளனவாக இருப்பன. இவற்றில் சிறியது கடுகின் அளவும் பெரியது ஓர் அடிக்கு மேலும் இருக்கின்றன. சங்குகள் முட்டையிடும் போது முட்டைகளை அடுக்காக்கி அவற்றிற்குக் காப்பாக ஒரு கூட்டைக் கட்டுகின்றன. அதில் அச்சங்குப் பூச்சிகள் வளர்ந்து தாமே கூட்டைவிட்டு வெளிவருகின்றன. இவ் வினத்தில் பலவகை உண்டு. பலகறை, இராவணன் விழி, சொறி சங்கு, பல்பப் பூச்சி எனப் பலவகை உண்டு. இது முதுகெலும்பு இல்லாத பிராணி வகையைச் சேர்ந்தது. வலம்புரிச் சங்கே விசேஷம். இதன் ஓட்டை மாமிசத்தைப் போக்கி பானபாத்திரமாகவும் ஊது கருவியாகவும் உபயோ கிப்பர். இப்பி 1000 சூழ்ந்தது இடம்புரிச் சங்கு. இடம்புரி 1000 சூழ்ந்தது வலம்புரி. வலம்புரி 1000 சூழ்ந்தது பாஞ்சசன்யம் (அ.சி.). (1000 எனும்

எண்ணிக்கை நம்பிக்கையாகலாம்—ஆய்வாளர்) எழுத்தாணிச் சங்கு, ஐவிரலிச் சங்கு, குதிரைமுள்ளிச் சங்கு, கோவஞ்சி, சப்பாத்தி, பால் சங்கு, பிள்ளையார் சங்கு, புள்ளிகௌடா, புறாமுட்டை, முள்ளுச் சங்கு, யானை முள்ளிச் சங்கு, வலம் புரி, வாழைப்பூச் சங்கு, வெள்ளைப் பூண்டுச் சங்கு என்பன இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களில் கிடைப்பன. Chank

**சங்கு அறுக்கிறது**

தொ. பெ. சொ. தொ., சங்கு கோயில்களிலும் சமயச் சடங்குகளிலும் ஊதுகருவியாகவும் தனியார் வீடுகளில் விசேசமான பூசைக்குரிய பொருளாகவும் பயன்படுவது மட்டுமல்லாது மகளிர் அணிவதற்குரிய வளையல், காதணி போன்ற அணிகலன்களாகவும் அறுத்து வடிவமைக்கப் படுகின்றன. சங்கறுத்து தொழிற் செய்வோர் இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள மண்டபத்திலும் மேற்கு வங்காளத்திலும் வாழ்கின்றனர். சங்குக் கண் (நாகணம்) ஊதுபத்தி செய்யவும் சங்கின் கழிவுகள் பெயிண்ட், எனாமல், ஸ்நோ, பாலிஷ் பவுடர், உயர்ரக சுண்ணாம்பு ஆகியன செய்யவும் பயன்படுகின்றன.

**சங்கு அரித்தல்**

தொ. பெ. சொ. தொ., சங்கு குளிக்கும் பரதவர்கள் கடலடிக்குச் சென்று சங்கெடுத்தல்

**சங்கு கழித்தல்**

தொ. பெ. சொ. தொ., முதலாளர் சங்கு குளிக்கும் தொழிலாளரிடமிருந்து தரங்குறைந்த சங்குகளை ஏற்க மறுத்துக் கழித்தல்; சுறாக்கடி, சொரி, நண்டுகடி எனத் தரங்குறைந்த சங்குகளைக் குறிப்பர்

**சங்குக் கிடங்கு**

பெ. சொ. தொ., சங்குச் சேமிப்புக் கிடங்கு. Chank godown

**சங்கு குளி சீசன்**

தொ. பெ. சொ. தொ., சங்கு குளிக்கத் தோதான காலம்; ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட காலத்தில்தான் சங்கு குளிப்பர். தூத்துக்குடியில் ஒரு காலம் சீசன். இது முடிந்ததும் திருச்செந்தூர் பகுதியில் 'சீசன்' தொடங்கும். மண்ட

பம், இராமேஸ்வரம் பகுதிகளில் ஒரு குறித்தகாலம் உண்டு. சேசன்—ஆங்கிலச் சொல்

**சங்கு குளிப்பு**

தொ. பெ. சொ. தொ., இராமநாதபுரம் மாவட்டத்தில் 3000 பரதவர்களும் திருநெல்வேலி மாவட்டத்தில் 2000 பரதவர்களும் இத்தொழிலில் ஈடுபட்டுள்ளனர். ஐப்பசி மாதம் தொடங்கி சித்திரை மாதம் முடிய 7 மாதங்கள் இத் தொழிலுக்குரிய காலமாகும். சங்கு குளிக்கும் பருவ காலமே தமிழ்நாட்டின் வடகிழக்குப் பருவமழை கால மாகும். வள்ளம் ஒன்றிற்கு பத்துபேர் வீதம் சங்கு குளிக்கச் செல்கின்றனர். முதல் 5 பேர் கடலில் இறங்கிச் சங்கு குளிக்கும்போது மறு 5 பேர் வள்ளத்தி லிருந்து கொண்டு இத்தொழிலுக்குரிய உதவிகரமான காரியம் பார்த்துக் கொண்டும், உள்ளிறங்கிய குளியர்கள் மேல் வருவதைக் கண்காணித்துக் கொணடும் இருப்பர் Chank fishing

**சங்கு குளிப்பவர்**

வி. அ. பெ , பாண்டியர் காலத்தில் தண்டனை அடைந்த குற்றவாளிகளே சங்கு, முத்து குளிப்பவர்களாக இருந் தனர். தற்போது இத்தொழிலைச் செய்பவர்கள் பரதவர் கள். Chank diver

**சங்குறைய பத்துபார்**

பெ. சொ. தொ., Sankuraiya Pattu Par; San—Span; Kuraiya-less; Short of; Bank where depth is a foot less than 10 fathoms (J. H.)

**சங்குக் கூலி**

பெ. சொ. தொ., சங்கு குளியர்கள் கரைக்குக் கொணரும் சங்குகளை மீன்வளத்துறையினர் (சங்குப்பி ரிவினர்) பெற்றுக்கொண்டு அவற்றின் தரம், சுற்றளவு, எண்ணிக்கை ஆகியனவற்றின் அடிப்படையில் கூலி தருகின்றனர். $2\frac{1}{4}$ அங்குலச் சுற்றளவிற்கு உட்பட்டனவும் பிளவு, ஓட்டை ஆகிய குறை உடையனவும் சொத்தைச் சங்காகத் தள்ளப் படும். $2\frac{1}{4}$ அங்குலத்திற்கு மேல் $2\frac{1}{2}$ அல்லது $2\frac{3}{4}$ அங்குலத் திற்குள் சுற்றளவுள்ள சங்கு ஒன்றுக்கு ரூ. 2-75-வும் $2\frac{3}{4}$ அங்குலச் சுற்றளவுக்கு மேற்பட்ட சங்கு ஒன்றுக்கு ரூ. 8-50 உம் கூலியாக வழங்கப்படும்.

**சங்குக்கொட்டான்**
பெ. சொ. தொ., சங்கு எடுத்துச் செல்லும் பெட்டி

**சங்குப் பூச்சி**
பெ. சொ. தொ., சங்கு ஓட்டினுள் இருக்கும் உயிரினம்

**சங்குச்சதை**
பெ. சொ. தொ., சங்கு குளியர்கள் மீன்வளத் துறையின ரிடம் சங்குகளை ஒப்படைக்கும் முன்னர் அவற்றின் உட் புறத்திலுள்ள தசைப் பகுதியை வெளிப்படுத்தி வைத்துக் கொள்வர். இது சிறுசிறு துண்டுகளாக்கப்பட்டு உலர்த்தப் படும். உலர்த்தப்பட்ட இத்துண்டுகள் எண்ணெயில் பொரிக்கப்பட்டு சுவையான உணவு வகையாக உட் கொள்ளப்படுகிறது.

**சங்குச் சலாபம்**
பெ. சொ. தொ., சங்குக்குழி (த.மொ. அ.)

**சங்கு நண்டு**
பெ. சொ. தொ., சங்கு வகை

**சங்கு நிலம்**
பெ. சொ. தொ., சங்குப்படுகை. சல்லி, பிறால் எனும் மறு பெயர்களும் உண்டு

**சங்கு படுகை**
பெ. சொ. தொ., கடலடியில் சங்குகள் நிறைந்திருக்கும் இடம். Chank bed

**சங்கு புரி**
பெ. சொ. தொ., சங்கில் அமைந்துள்ள வரிகள் (த. மொ. அ.)

**சங்கு புஷ்பம்**
பெ. சொ. தொ., ஞாழல் எனும் கடற்கரைத் தாவரம் (த. மொ. அ.)

**சங்கு மணி**
பெ. சொ. தொ. சங்கால் செய்யப்பட்ட மணி, ஆபரணம் (த. மொ. அ.)

**சங்குமால்**
பெ. சொ., சங்குக் கிடங்கு. Chank godown

**சங்கு முகம்**
பெ. சொ., ஆறு கடலுடன் கலக்குமிடம். சங்கமத் துறை

**சங்கு முத்து**
பெ. சொ. தொ., சங்கின் முத்து (த.மொ.அ.)

**சங்கு வெள்ளை**
பெ. சொ. தொ., சங்கு சுண்ணக் காறை (த. மொ. அ.)

**சங்குளி**
தொ. பெ. சொ. தொ., சங்கு குளித்தல் எனும் சொற்களின் மரூஉ. இராமேஸ்வரம் பகுதியில் ஜனவரி தொடக்கம் மார்ச்சு முடியவும், மண்டபம் கேம்ப், தென்வெடலைப் பகுதியில் ஆகஸ்ட் தொடக்கம் டிசம்பர் முடியவும் பெரிய பட்டினம், கீழக்கரை பகுதியில் செப்டம்பர் தொடக்கம் ஜனவரி முடியவும் சங்கு குளிக்கப்படுகிறது. பொதுவாகத் தமிழ் மாதங்கள் ஐப்பசி தொடக்கம் சித்திரை முடிய கிழக்குக் கடற்கரைப் பகுதி சங்கு குளிப்பதற்குரிய அருமையான பருவகாலமாகும். ஒரு நாளைக்கு ஒரு தொழிலாளி ஏறத்தாழ 30 முறைகள் சங்கு குளிப்பார்.

**சடையன்**
பெ. சொ., மீன்வகை

**சண்டு அரிதல்**
தொ. பெ. சொ. தொ., அரும்பு அரிதலுக்கு உள்ள மறு பெயர்

**சந்தமரம் புடித்த பார்**
பெ.சொ,தொ., சந்தை மரம் பிடித்த பார். Sandamaram Piditha Par; Sanda-a corrupt form of Santai or Chantai-Market; Maram-tree; piditha-touching i.e. indicating as does a land mark. Bank where land mark is a tree near a market (J. H.)

**சந்திர வட்டம்**
பெ. சொ. தொ., மாலை நேரத்தில் வானில் சந்திரனைச் சுற்றி ஒரு வட்டம் காணப்படும். இவ்வட்டம் 'சந்திர வட்டம்' எனப்படும். சந்திரவட்டம் காணப்படுதல் அடை மழைக்கு அடையாளம் என்பர் பரதவர்

**சப்பாத்தி**
பெ. சொ., சங்கு வகை

**சப்பாத்திச் சங்கு**
பெ. சொ. தொ., சங்கு வகை. அகன்ற பெரிய சங்கு

**சப்பைத் திருக்கை**
பெ. சொ. தொ., மீன்வகை. Aetomylus nichofii; Eagle Ray

**சமோட்டி**
பெ. சொ., 'சம்பான் ஓட்டி' எனும் சொற்களின் சேர்க்கை அல்லது திரிபு. 'தலைவன்' எனும் பொருள் தருவது

**சம்பா வியாபாரம்**
பெ. சொ. தொ.. கருவாடு வியாபாரம்

**சம்பானோட்டி**
பெ. சொ. தொ., படகோட்டுபவன் (த.மொ.அ.)

**சம்பான்**
பெ. சொ., படகு (த. மொ. அ.)

**சம்பான் காரர்**
பெ. சொ., படகுக்காரர் (த.மொ.அ.). படகின் உரிமை யாளர்

**சம்பை**
பெ. சொ., மீன் வியாபாரி

**சம்மாடி**
பெ. சொ., வள்ளத்தின் தலைவர். சம்மாட்டி, சம்மாடி— இரண்டும் ஒரு பொருள் குறிப்பன

**சம்மாட்டியார்**
பெ. சொ., வள்ளத் தலைவர். Sammatti

**சம்மாட்டி**
பெ. சொ., கட்டுமரச் சொந்தக்காரன்; வள்ள உரிமை யாளன்

**சரக்கு இறக்கறது**
தொ. பெ. சொ. தொ., கப்பலிலிருந்து தோணிக்கும் தோணியிலிருந்து துறைமுகத்துக்கும் சரக்கை இறக்குதல்

**சரக்கு ஏத்தறது**
தொ. பெ. சொ. தொ., துறைமுகத்திலிருந்து தோணிக்கும் தோணியிலிருந்து கப்பலுக்கும் சரக்கை ஏற்றுதல்

**சரக்கு ஏற்றிப் பறித்தல்**

தொ. பெ. சொ. தொ., ஆழமில்லாத செயற்கைத் துறை முகங்களுக்குச் சரக்கேற்றிய கப்பல் வரவியலாது. ஆகவே சில கி. மீ. தள்ளி ஆழ்கடல் பகுதியிலேயே நிற்கும். அக் கப்பலிலிருந்து சரக்கை இறக்கித் துறைமுகத்திற்கு கொண்டு வரவேண்டும். அதுபோலவே துறைமுகத்திலிருக்கும் சரக்கைக் கப்பலுக்குக் கொண்டு சென்று ஏற்ற வேண்டும். இச்செயல்கள் இப்படிப்பட்ட நிலைமையில் பெருந் தோணி கள் மூலமே நடக்கும். இதற்குச் 'சரக்கு ஏற்றிப் பறித்தல்' என்று பெயர். (உதாரணம்: செயற்கைத் துறைமுகமான தூத்துக்குடி துறைமுகம்.)

**சரக்குப் பறித்தல்**

தொ. பெ. சொ. தொ., சரக்கு இறக்குதல். மேற்குறிப்பு காண்க

**சலங்கைக்காரர்**

பெ. சொ., இந்து சமயத்தைச் சேர்ந்த பரதவரில் ஒரு பிரிவினர்

**சரடுசாம்பி**

பெ. சொ. தொ., நூல் கப்பியல், சரடு—நூல். சாம்பி— கப்பியல் (த. மொ. அ.)

**சலாபத்துறை**

பெ. சொ. தொ., முத்துத்துறை. Pearl Camp

**சலாபம்**

பெ. சொ., முத்துக் குளித்தல் (க. த. அ.)

**சலுத்து**

பெ. சொ., பருமலையையும் பாய் மரத்தையும் சேர்த்துக் கட்டும் கயிறு. சலவர்—பரதவர், நெய்தல் நில மக்கள் (ம.த. பே.). பரதவர் பயன்படுத்தும் கயிறு எனும் பொரு ளில் இச்சொல் உருவாகியிருக்கலாம்

**சல்லி நிலம்**

பெ. சொ. தொ., கடலடிப் படுகையில் பொடி கற்கள் நிறைந்த பகுதி. சங்கு உற்பத்திக்கு ஏற்ற இடம். சிறு மணல் பகுதிகளைவிட சல்லி நிலமே சங்குகளின் அமோக உற்பத்திக்கு ஏற்ற இடமாகும்.

**சவருக்குப் போதல்**

தொ. பெ. சொ. தொ., நம் நாட்டில் உற்பத்தியாகும் பொருள்களை வெளிநாடுகளுக்கும் (சிறப்பாக கிழக்காசிய நாடுகளுக்கும்) தமிழ்நாட்டில் கிடைக்கும் பொருள்களை கேரளம், கர்நாடகம், மகாராட்டிரம், குஜராத் போன்ற மாநிலங்களுக்கும் கடல் வழியாக ஏற்றிச் சென்று கொடுத்து விட்டு ஆங்காங்கு கிடைப்பனவற்றை ஏற்றிக் கொண்டு வருதல். வீட்டுக் கூரைக்குரிய ஓடுகள், மங்களூர் ஓடுகள், உப்பு, சட்டிப்பானை, கருவாடு, வெல்லம், வெங்காயம் ஆகியன இத்தொழிலில் பரிவர்த்தனை செய்யப்படும் பொருள்களாகும்.

**சவுட்டுமிதி**

பெ. சொ. தொ., அளத் தயாரிப்பிற்காக உழவுபோட்ட பின்னர் இருக்கும் சிறு சிறு களிமண் கட்டிகளை காலால் மிதித்தல்

**சவ்வாவாரி**

பெ. சொ. தொ., வள்ளத்தில் பாய் உயர்த்திய பின்னர் அப்பாய் ஆடாமல் நேராகவும் விறைப்பாகவும் இருக்கும் பொருட்டுக் கயிற்றால் பிணைத்து வைப்பர். இப்படிப் பிணைப்பதற்கு வசதியாக அமைக்கப்பட்டிருக்கும் பலகை அல்லது கழி

**சன்னக் கெண்டைவலை**

பெ. சொ. தொ., வலைவகை. சன்னமான சிறு மீன்கள் பிடிப்பதற்கு பயன்படுத்தப்படும் வலை. பாச்சு வலை அமைப்பில் இருப்பது

**சாடிக்காரன்**

பெ. சொ., பர்லாமீனின் மறுபெயர், குழூஉக்குறி

**சாடிப்பானை**

பெ. சொ., கோலாமீன் பிடிக்கச் செல்வோர் திரும்பி கரைக்கு வரச் சில நாட்களாகும். அதுவரைக் கெட்டுப் போகாதிருக்கும்படிப் பக்குவமாகச் சமைக்கப்படும் உணவுக்கு 'சாடிப்பானை' என்பது பெயர்.

**சாணிக்கெண்டை**

பெ. சொ., மீன் வகை. Barbas Sarana

**சாதா(ரண) படகு**

பெ. சொ. தொ., Plank Built Boat

**சாந்தமகோயில் புடித்தபார்**

பெ. சொ. தொ., சாந்தமகோயில் பிடித்தபார். Sandama coil- St. Mary's Church; Sandama, holy or blessed mother; i. e. St. (Sancta Maria) Kovil—Church, Bank touching St. Mary's Church; i. e. where st. Mary's Church is principle bearing (J. H.)

**சாளமீன்**

பெ. சொ., மீன் வகை

**சாளவலை**

பெ. சொ. தொ., வலைவகை

**சிக்குவலை**

பெ. சொ. தொ., வலைவகை. Trap net

**சிங்கிறால்**

பெ. சொ., மீன்வகை. பெரிய மீன். Cray fish. Lobster

**சித்தலை**

பெ. சொ. தொ., சிற்றலை. Wavelet

**சிப்பி**

பெ. சொ., கிளிஞ்சல், செல் என்ற சொற்களின் மாற்றுச் சொல். சுண்ணாம்பு தயாரிப்புக்கு உதவும் மூலப்பொருள்

**சிப்பி மீன்**

பெ. சொ., மீன்வகை. Cuttle fish

**சிப்பி மொட்டி**

பெ. சொ. தொ., கிளிஞ்சல் வகை

**சிம்மிச்சங்கு**

பெ. சொ. தொ., சங்கு வகை

**சிரட்டைச் சங்கு**

பெ. சொ. தொ., சங்கு வகை. சைவ ஆண்டிகள், பிச்சைக் காரர்கள் பிச்சை ஏற்கப் பயன்படுத்துகிற பெரிய அளவிலான சங்கு. திருவோட்டுச்சங்கு எனும் பெயரும் உண்டு.

**சிலாபம்**

பெ. சொ., 'சிலம், இலாபம்' எனும் சொற்களின் சேர்க்கை. சிலம்—கடல் செல்வம்; உப்பு, மீன், முத்து ஆகியன. பின்னர் இச்சொல் முத்துக் குளிப்பை மட்டும் குறிப்பதாக வழக்கில் அமைந்தது (ம.த.பே.)

**சிவப்பு நண்டு**
பெ. சொ. தொ., கடற்கரையோரமாகக் காணப்படும் ஒரு நண்டு வகை. நிறத்தால் பெற்ற பெயர்.

**சிறுமரம்**
பெ. சொ. தொ., சிறுபாய் மரம். Jigger

**சின்ன இறால்**
பெ. சொ. தொ., மீன்வகை. பொடிமீன்

**சின்னக் குன்னக் கெண்டை**
பெ. சொ. தொ., மீன்வகை. Barbus Vittatus

**சின்னக் கூனி**
பெ. சொ. தொ., 'சென்னாக்குன்னி' எனப் பேச்சுவழக்கில் அழைக்கப்படும் மீன்வகை

**சின்ன பாய்**
பெ. சொ. தொ., கலத்தின் சிறிய பாய்

**சின்ன மரம்**
பெ. சொ. தொ., பெரிய கட்டுமரத்திற்குத் துணையாகப் போகும் சிறிய கட்டுமரம்

**சிமான்பிள்ளை காத்தபார்**
பெ. சொ. தொ., Siman Pillai—a man's name; katha—guarded by; possibly this means the bank guarded by Siman Pillai (J.H.)

**சிரம் பாம்பு**
பெ. சொ. தொ., மீன்வகை. Anguilla bengalensis

**சிர் பாட்டன்**
பெ. சொ. தொ., காண்க : அறுன பாட்டன்

**சிலா**
பெ. சொ., மீன்வகை. Cybium guttatum

**சிலா பனந்தனை**
பெ. சொ. தொ., மீன்வகை. Cybium Spp.

**சிலை**
பெ. சொ., தோணி, வள்ளம் ஆகியவற்றில் பயனாகும் பாய் தைக்க உதவும் துணி

**சினி**
பெ. சொ., நங்கூரம்

**சீனிக்கயிறு**
பெ. சொ. தொ., நங்கூரக் கயிறு

**சீனிப்பலகை**
பெ. சொ. தொ., வள்ளத்தின் உறுப்பு

**சுக்காணி**
பெ. சொ., சுக்கானைப் பிடித்து வள்ளத்தை இயக்குபவர்

**சுக்கான்**
பெ. சொ., கடல்கலம் நீரில் இயங்குவதற்கும் திரும்புவதற்கும் உதவும் கருவி. Rudder

**சுக்கான் பிடி**
பெ. சொ. தொ., சுக்கானின் கைப்பிடி. Helm; Tiller

**சுணைக்கிறது**
தொ. பெ. சொ. தொ., பாத்திகளில் விட்ட உப்புநீரின் அடர்த்தி 23 டிகிரி ஆனதும் உப்பு படிதல்

**சுண்ணாம்பு**
பெ. சொ., சிப்பி, விரல் சல்லி, நுரைகல் ஆகியனவற்றைச் சுடுவதால் கிடைக்கும் ரசாயனப் பொருள்

**சுறும்பு**
பெ. சொ., மீன்வகை. Lactarius Spp.

**சுத்துப் பலகை பிடிக்கிறது**
தொ. பெ. சொ. தொ., உப்பளத் தயாரிப்பில் வாரு பலகையால் பாத்தியைச் சமப்படுத்துதல்

**சுத்துவலை**
பெ. சொ., வலைவகை: மீன்களைச் சுற்றி வளைத்துப் பிடிக்கும் வலை. Encircling net

**சுத்தைச் சங்கு**
பெ. சொ., 'சொத்தைச் சங்கு' என்பதன் பேச்சு வடிவம். Wormed Chank

**சுப்பி**
பெ. சொ., சிப்பி என்பதன் பேச்சு வடிவம்

**சுமப்படகு**
பெ. சொ. தொ., சுமைப் படகு. சரக்கேற்றப்பட்ட படகு. Barge

**சும்மாடு**
பெ. சொ., தலையில் ஏற்றப்படும் பளுவால் மண்டை நோகாமல் மெத்தென்று இருக்க வைக்கப்படும் (துணிச்) சுருணை. உப்புப் பெட்டி சுமக்க உதவும் பொருள்

**சுருக்கு ஒன்பது பார்**
பெ. சொ. தொ., Surukku Onbadu Par; Onbadu—a corrupt form of onpatu; Surukku—quickly; Bank falling quickly within 9 fathoms; i.e. a rapidly shelving bank; This is the case it is a narrow bank 5½ fathoms deep on the west side, 8 fathoms deep on the east (J.H.)

**சுரைப்பிள்ளை**
பெ. சொ. தொ., கடற்கரைப் பகுதியில் காணலாகும் ஒரு நெய்தல் நிலத்தாவரம்

**சுழல்**
பெ. சொ., நீர்ச்சுழல். Swirl

**சுழல் காத்து**
பெ. சொ. தொ., சுற்றிச் சுற்றி அடிக்கும் காற்று. Whirl wind

**சுழல் பலகை**
பெ. சொ. தொ., வள்ளத்தின் உள்ளுறுப்பு. Turn table

**சுழல் வலை**
பெ. சொ. தொ., வலைவகை. சுழன்று வளைத்து மீன் களைப் பிடிக்க வசதியான வலை

**சுழி**[1]
பெ. சொ., கடல் நீரோட்டத்தில் காணலாகும் சுழல்

**சுழி**[2]
பெ. சொ., சுண்ணாம்புக்கல். இராமேஸ்வரம் முதல் தூத்துக்குடி வரை விரவிக்கிடக்கும் மூலப் பொருள். பவள சுண்ணாம்புக் கல், நுரைகல் எனும் பெயர்களும் உண்டு.

**சுளிக்கி**
பெ. சொ., கூர்மையான முனையுடைய எறியுளி போன்ற கருவி

**சுறா**
பெ. சொ., மீன் வகை

**சுறாக்கடி**
பெ. சொ. தொ., கழிக்கப்பட்ட சங்கு. தரமற்ற சங்கு, சுறாவின் கடியால் பாதிக்கப்பட்ட சங்கு ஆகலாம்.

**சூட**
பெ. சொ., மீன்வகை. Kowala Coval; Kowala thoracata

**சூடை**
பெ. சொ. மீன்வகை. Clupea lile (White Sardine); clupea kanagurta (Indian sprat)

**சூர**
பெ. சொ., மீன்வகை

**சூரி மீன்**
பெ. சொ., மீன்வகை. Euthynnus abbeteratus

**சூரிய வட்டம்**
பெ. சொ. தொ., முற்பகலில் காலை 11 மணியளவில் சூரியனைச் சுற்றிக் காணப்படும் ஒரு வளையம்; கடல் தொழில் மேற்கொண்டு ஆழ்கடல் சென்ற பரதவர் இச் சூரிய வட்டத்தைக் கண்ட மாத்திரத்தில் விரைந்து கரைக்குத் திரும்புவர். ஏனெனில் இச்சூரிய வட்டமானது வரப் போகும் கடுமையான காற்றுக்கு ஓர் அறிகுறியாகும்.

**சூறாவளி**
பெ. சொ. தொ., சூறைவளி. சூறை—சூறையாடும் பெருங் காற்று. வளி—அளவு கடந்த காற்று. 65 மைல் வேகத் திற்கு மேற்பட்டது. Cyclone; Hurricane

**சூறை வேடன்**
பெ. சொ. தொ., சுறாவகை. இது அரிதாகக் காணப்படும் மீன். கடல் மட்டத்திற்கு மேல் எழும்பி வாய் திறக்கு மானால் பெரும்புயல் வரும் எனப் பரதவர் அறிந்து கொள்வர்

**சூறை**
பெ. சொ., மீன்வகை. Euthynnus abbeteratus

**செங்கெறா(ல்)**
பெ. சொ., மீன்வகை

**செட்டி**
பெ. சொ., இந்து சமயப் பரதவருள் ஒரு பிரிவினர்

**செதிள்**
பெ. சொ. தோல், பொருக்கு (த.மொ.அ.)

**செம்படக் கரை**
பெ. சொ. தொ., செம்படவர் வாழும் கடற்கரை

**செம்படக்கா**
பெ. சொ., மீன்வலை

**செம்படவன்** [1]
பெ. சொ., உள்நாட்டில் மீன் பிடிப்பவர். மீன் பிடித்தல், உலர்த்தல் தொழில் செய்வோர். பட்டினக்கரையில் வாழும் மீனவர் பரதவர். உள்நாட்டு நன்னீரில் மீன் பிடிப்பவர் செம்படவர் (அ.சி.) (பரதவர், செம்படவர் எனும் சொற்கள் மக்களிடையில் இப்படித் துல்லியமாக வழங்கப்படுவதில்லை—ஆய்வாளர்)

**செம்பரவன்** [2]
பெ. சொ., பரதவருள் ஒரு பிரிவினர்

**செம்மண்பட்டிபார்**
பெ. சொ. தொ., Semman Patti Par; Semman—red sand or earth; patti—hill, Red hill Bank; red hill is the bearing (J. H.)

**செம்மானம்**
பெ. சொ., வானம் சிவந்திருத்தல். காலையில் வானம் சிவந்து காணப்படின் பெருங்காற்று வீசும் எனவும் மாலையில் சிவந்து காணப்படின் பெருமழை பொழியும் எனவும் பரதவர் கூறுவர். 'காலைச் செம்மானம் காத்துக்கு, மாலைச்செம்மானம் மழைக்கு' என்பது பரதவர் பழமொழி.

**செயற்கை முத்து**
பெ. சொ. தொ., இயற்கையாக முத்து உண்டாகும் அறிவியல் முறையில் தயாரிக்கப்படும் செயற்கை முத்து, Artificial Pearl

**செயினத்து**
பெ. சொ., தொ. பெ. சொ., மழைக்குப் பின்னர் அளத்தைப் பழுது பார்த்து மறு வருட வாருமதலுக்குத் தயாராக்குதல்

**செலந்துளி**
பெ. சொ., மீன்வகை. Ambassis Commersoni (Glassy perchlet), Ambassis dayi (Glassy perchlet)

**செல்**
பெ. சொ., சிப்பி

**செவுள்**
பெ. சொ., மீனின் சுவாச உறுப்பு. Gill; Organ with which a fish breathes

**செவுள் வலை**
பெ. சொ. தொ., வலைவகை. Gill net

**செவ்வாயன் சங்கு**
பெ. சொ. தொ., சங்கு வகை. சிவப்பு நிறச் சங்கு. வண்ணத்தால் பெற்ற பெயர்

**செவ்வாளிக் கெண்டை**
பெ. சொ. தொ., மீன்வகை. Barbus Machecola

**சென்னவலை**
பெ.சொ.தொ., வலைவகை. சின்னவலை அல்லது சன்ன வலை

**சேதுகுறையபத்துபார்**
பெ.சொ.தொ., Sethukuraiya Pattu Par; Bank a little less than in 10 fathoms (J.H.)

**சேந்துவலை**
பெ. சொ. தொ., வலைவகை. படகிலிருந்து சேந்தி எடுக்கப் படும் வலை. Boat Seine

**சேல்மீன்**
பெ. சொ., மீன்வகை.

**சேறி**
பெ. சொ., மீன்வகை.

**சேறு**
பெ. சொ., கடல் ஓரத்தில் உள்ள நீர்க்கசடு. Addle

**சேறு கருத்தல்**
தொ. பெ. சொ. தொ., அளம் போட்ட ஓரிரு ஆண்டில் அளத்திலுள்ள களிமண் மிகவும் கருத்தல். சேறு கருப்ப தால் உப்புநீர் நிலத்தால் உறிஞ்சப் படாமல் தடுக்கப் படு கிறது.

**சைடு பூசுதல்**

தொ. பெ. சொ. தொ., சைடு—ஆங்கிலச்சொல்—பக்கம். உப்பள வரப்புகளின் ஓரங்களில் களிமண் பூசுதல்

**சைத் ஒன்பது பார்**

பெ. சொ. தொ., Saith onbadu Par; Saith—south (a local term derived from Portugeese) Southern Bank in nine fathoms (J.H.)

**சைத்குடா முத்துபார்**

பெ. சொ. தொ., Saith Kuda muthu Par; South Bank in the Pearl Bay

**சொட்டவாளை**

பெ. சொ. தொ., மீன்வகை. சொட்டைவாளை. Notopterus Spp.

**சொத்தைச் சங்கு**

பெ. சொ. தொ., 'சுத்தைச் சங்கு' எனப் பேச்சு வழக்கில் வழங்கப்படுவது. (அ) பிளவு, ஓட்டை ஆகியன உடையவை; (ஆ) $2\frac{1}{4}$ அங்குலச் சுற்றளவிற்கு உட்பட்டவை. Wormed Chank; Undersized

**சொறு**

பெ. சொ., கடல் உயிரினம்; சங்கு குளிப்பவர் உடலின் மேல் பட்டால் தாங்க முடியாதபடி வலியும் எரிச்சலும் உண்டாகும்.

**சொறி சங்கு**

பெ. சொ. தொ., சங்கு வகை. சங்கின் சுற்று வெளிப்புறம் வழுவழுப்பாக இல்லாமல் சொர சொரப்பாக இருக்கும் சங்கு

**சோகி துண்டு பார்**

பெ. சொ. தொ., Kanava Parakkum Sohi Thundu Par; Kanava—Cuttle fish; Parakkum—flying; Sohi—well dressed or adorned (J. H)

**சோத்துப்புட்டி**

பெ. சொ. தொ., கடல் தொழிலாளர் கட்டுச்சோறு எடுத்துச் செல்லப் பயன்படுத்தும் கோரையினால் ஆன பெட்டி

**சோத்து வெள்ளி**

பெ. சொ. தொ., இரவு வேளையில் சாப்பிடும் நேரம் காண்கிற விண்மீன். இரவு உணவு நேரம் வந்து விட்டதென்ப

தைக் கடலில் அறிந்துகொள்ள இவ் விண்மீனைக் கணக்காகக் கருத்தில் கொள்ளுதல்

**சோழகர காத்து**
பெ. சொ. தொ., சோழ—தெற்கு; கரைகாற்று—மேற்குக் காற்று; சோழக்கரைக் காற்று—தென்மேற்குத் திசையிலிருந்து வீசும் காற்று

**சோழவகொண்ட(ல்)**
பெ. சொ. தொ., சோழவம், சோளவம், சோனகம் எனும் சொற்கள் பரதவர் சமூகத்தில் தெற்கு எனும் பொருளில் வழங்கப்படுகின்றன. கொண்டல்—கிழக்குத் திசையிலிருந்து வீசும் காற்று; சோழவகொண்டல்— தென்கிழக்குத் திசையிலிருந்து வீசும் காற்று.

**சோளவபாரி**
பெ. சொ. தொ., சோளகக்கரை பார். Bank lying off the South Shore of Rameswaram; Solaka (Cholaka) —South; cholava probably a misprint for Cholakka which is the fishermen's term for south. 'Ten is the South of the landsman. (J.H.)

**சோளவலைக்கட்டை**
பெ. சொ. தொ., வலையின் முற்பகுதியில் கட்டப்பட்டிருக்கும் மிதப்புக் கட்டைகளுள் ஒன்று. தலைவலைக் கட்டை, தொங்கு வலைக்கட்டை, கெடமால்கட்டை, மோப்புக் கட்டை என்பன பிற மிதப்புக் கட்டைகளாகும்.

**சோனி**
பெ. சொ., கிளிஞ்சல் வகை

**சோனிச் சங்கு**
பெ. சொ. தொ., கிளிஞ்சல் வகை

**சோனகம்**
பெ. சொ., தென்கிழக்குக் காற்று

**சோனிவாரி**
பெ. சொ. தொ., தெற்குத்திசையிலிருந்து வடதிசை நோக்கி ஓடும் கடல் நீரோட்டம்

**சோனிமேமறி வெள்ளம்**
பெ. சொ. தொ., சோனிமேல் மறி வெள்ளம்; மேற்குத் திசையிலிருந்து வடகிழக்குத் திசை நோக்கி ஓடும் கடல் நீரோட்டம்

**சோனி வெள்ளம்**
பெ. சொ. தொ., தென் திசையிலிருந்து வடதிசை நோக்கி ஓடும் கடல் நீரோட்டம்

**சௌடிபார்**
பெ. சொ. தொ., Chowdi Par; Chodi Par—Chowdi Par; Ornamental Bank (J.H.)

**ஜாதித் தலைவன்**
பெ. சொ. தொ., பரதவர் குடியிருப்புகளில் குடியிருப்புக்கு ஒரு தலைவன் வீதம் இருப்பவர்கள். இவர்கள் அரசர்களுக்கு வருடாந்திர அன்பளிப்புகளை மட்டும் வழங்குவர். நாட்டின் மற்ற வரிகள் இவர்களுக்குப் பொருந்தாது. இவர்கள் தன்னிச்சையானவர்களும் அளவற்ற அதிகாரங் களை வகிப்பவர்களும் ஆவர். இவர்களுக்குக் குப்பம் முழுமையும் அடங்கிக் கட்டுப்பட்டே ஆக வேண்டும். (Madras Fisheries Bulletin, Vol. XVI)
(இக்காலத்தில் இப்படிப்பட்ட ஜாதித் தலைவர்கள் இல்லை. மேற்கண்ட செய்திகள் முற்காலத்துக்கு உரியவை. காரணம் கால வளர்ச்சியாகலாம்.)

**ஜிப்ஸம்**
பெ. சொ., சோடியம் சல்பேட். உப்பளங்களில் 15 டிகிரி முதல் 23 டிகிரி வரை படியும் இரசாயனப் பொருள். சிமிண்ட் தயாரிப்புக்கு உதவும் முக்கியமான மூலப் பொருள். அட்டு எனும் பெயரும் உண்டு.

**ஜிலேபி**
பெ. சொ., மீன் வகை

**ஸ்டீம்போட்**
பெ. சொ., ஆங்கிலம். Stream boat

**டாக்**
பெ. சொ., ஆங்கிலம். செயற்கைத் துறைமுகம். Dock

**டிகிரி**
பெ. சொ., ஆங்கிலம். Degree

**டிரால் நெட்**
பெ. சொ. தொ., ஆங்கிலம். விசைப்படகுகளில் இழுவை வலையாகப் பயன்படும் வலை. இவ்வலை கயிறு, தளை வலை, உடல்வலை, மடி எனும் நான்கு பிரிவாக அமைந் திருக்கும். மடியின் வடிவம் முக்கோணம்.

**டீசல் போட்**
பெ. சொ., ஆங்கிலம். டீசலால் இயங்கும் படகு. Diesel Boat

**டெக்**
பெ. சொ., ஆங்கிலம். கப்பல், படகு, லாஞ்சி ஆகியவற்றின் மேல் தளம். Deck

**தக்கை**
`பெ. சொ., வலை மிதக்க உதவும் பொருள்

**தங்கல்**
பெ. சொ., மீன்பிடி கருவி

**தங்காலம்**
பெ. சொ., மீன்பாடு மிகக் குறைந்த மாசி, பங்குனி மாதங் கள்; கடல் தொழிலாளரின் வறுமைக்காலம்

**தங்கு வலை**
பெ. சொ. தொ., மீன்பிடி பரதவர்கள் ஆழ்கடலுக்குச் சென்று ஒருவாரம் கடலிலேயே தங்கியிருந்து மீன்பிடிப்பர். இதற்குப் பயன்படும் வலை தங்கு வலை. தங்கு வலை கொண்டு மீன்பிடிக்கும் தொழிலர் இரவுக் காலங்களில் கிருஸ்து ராஜா தீவு, நல்ல தண்ணித்தீவு ஆகியவற்றில் ஓய்வெடுப்பர்.

**தங்கூசு**
பெ. சொ., வலை தயாரிப்புக்கு உதவும் கருவி

**தடச்சி**
பெ. சொ., வலை முடிக்கப் பயன்படும் தடித்த நூல். மறு வலையின் 'கண்' இந்நூலால் முடிக்கப் படுகிறது.

**தடிகாரன்**
பெ. சொ., பர்லா மீனின் மறுபெயர்; குழு உக்குறி; மிக அழகான வடிவம் கொண்டது. கோலா மீன்களை உண வாகக் கொள்ளும் இயல்பினது. இது நீந்தும் அழகைக் காண ஆயிரம் கண்களும் போதாதென்பர். இம்மீனைத்

தடியால் அடித்துக் கொன்று வேட்டையாடுவர். இக் காரணம் பற்றியே இம்மீனுக்கு (தடிகாரன்) எனும் குழூஉக்குறி உண்டானது. இதற்கு 'சாடிக்காரன்' எனும் பெயரும் உண்டு.

**தட்டப்படகு**
பெ. சொ. தொ., தட்டைப் படகு. Pontoon

**தட்டபைய வலை**
பெ. சொ. தொ., தட்டையான பை போன்ற வலை. வலை வகை. Flat trawl

**தட்டு**
பெ. சொ., அளம். சிறு அளங்கள்

**தட்டுமடி**
பெ. சொ. தொ., கயிற்று நூலால் செய்யப்பட்ட வலை. முன்னாளில் இது மிகுதியும் பயன்பட்டது. தற்போது நைலான் முதலான செயற்கை இழை வலைகளின் வரத்தினால் வழக்கு ஒழிந்து போனது.

**தட்டுமேடு**
பெ. சொ. தொ., நெல் களமேடு போல உப்பு கொட்டி வைக்கப் பயன்படும் மேடான நிலம்.

**தண்டல்**
பெ. சொ., பணம் தண்டுபவர். பாக்கி வசூலிப்பவர்

**தண்டலாளி**
பெ. சொ., பார்க்க—தண்டல். Tindal

**தண்டிக்கா**
பெ. சொ., தோணியில் வலிக்கப் பயன்படும் தண்டு

**தண்டு**
பெ. சொ., துடுப்பு

**தண்டுக்காரன்**
பெ. சொ., கலத்தை இயக்க தண்டு பிடிப்பவன். கொம்பால் கட்டுமரத்தைச் செலுத்துபவன்

**தண்டு வலித்தல்**
தொ. பெ. சொ. தொ., கலமியங்கத் துடுப்புப் போடுதல்

**தண்ணீர் அற ஒடுதல்**
தொ. பெ. சொ. தொ., கடல் நீர், கரைப் பகுதிகளில் அஷ்டமி, இருட்டு அமாவாசை, பௌர்ணமி காலங்களில்

மேல் ஏறும். முக்கால் மணி நேரத்திற்கு ஒருமுறை ஏறு வதும் இறங்குவதுமாக இருக்கும். இவை முடிந்ததும் கடல் நீர் மீண்டும் பழையபடி முன்னிருந்த இடத்திற்கே ஓடி விடும். இவ்வாறு ஓடுதலை 'தண்ணி அற ஓடுதல்' என்பர்.

**தண்ணி கழித்தல்**
தொ. பெ. சொ. தொ., உப்பு நீரின் அடர்த்தி 29 டிகிரி கடந்ததும் பாத்திகளிலிருந்து நீரை வெளியேற்றுதல்.

**தண்ணிகாட்டம் ஏறுதல்**
தொ. பெ. சொ. தொ., உப்பு நீரின் அடர்த்தி மேன்மேலும் கூடுதல்

**தண்ணி குத்துறது**
தொ. பெ. சொ. தொ., தொட்டானிலிருந்து உப்புநீரை பாத்திக்குத் திறந்து விடுதல்

**தண்ணிபன்னா**
பெ. சொ. தொ., தண்ணீர்ப் பன்னா. மீன்வகை

**தண்ணிபோட்டு மிதித்தல்**
தொ. பெ. சொ. தொ., உப்பளத் தயாரிப்பிற்காகப் பாத்தி யில் உழப்பு முடிந்ததும் தண்ணீர் விட்டு அடுக்கடுக்காக மிதித்தல்

**தண்ணி மாத்துறது**
தொ. பெ. சொ. தொ., கருவாடு தயாரிப்பில் பயன்படும் சிமிண்ட் தொட்டியில் ஊறப்போடும் மீனைத் தினந் தோறும் அள்ளிக் கொண்டிருந்தாலும் உப்பு நீரைத் தின மும் மாற்ற மாட்டார்கள். ஏழு நாட்களுக்கு ஒரு முறை மட்டும் பழைய நீரை வெளியேற்றி அடியில் உள்ள உப்பை அள்ளி அப்புறப்படுத்திச் சுத்தம் செய்த பின்னர் புது நீர் விட்டு உப்புப் போடுவார்கள். இது தண்ணீர் மாற்றுதல் எனப்படும்.

**தரகர்**
பெ. சொ., விற்பவர்-வாங்குபவருக்கிடையில் வணிகம் நடக்க முயற்சி மேற்கொண்டு அதற்குக் கூலியாகப் பொருள் பெறுபவர். பரதவர் சமூகத்தில் மீன் தரகர் முக்கிய பங்கு வகிக்கிறார்.

**தரவை**
பெ. சொ., உப்பங்கழி

**தராசு வெள்ளி**
பெ. சொ. தொ., வானின் தென் பகுதியில் காணலாகும் இரு விண்மீன்களைத் 'தராசு வெள்ளி' என்பர்

**தருவை**
பெ. சொ., நீர் நிலை

**தலைப் பலகை**
பெ. சொ. தொ., கலத்தின் முன்பகுதியில் உள்ள சுக்கான் பலகை

**தலைப் பெட்டி**
பெ. சொ. தொ., தாழை ஓலையினால் செய்யப்பட்ட தலைத் தொப்பி

**தலையாக்கோல்**
பெ. சொ. தொ., தோணியின் முன்பகுதியிலிருந்து குத்தித் தாங்கும் கோல்

**தலைவலைக் கட்டை**
பெ. சொ. தொ., வலையின் மேற்பகுதியில் கட்டப்பட்டிருக்கும் பல மிதப்புக்கட்டைகளுள் ஒன்றின் பெயர்

**தவளைப் பாசி**
பெ. சொ. தொ., தெப்பங்களில் படியும் ஒருவகைப் பாசி

**தவளைமீன்**
பெ. சொ. தொ., மீன்வகை. தவளைக்குஞ்சின் உருவம் போல இருக்கும் மீன். இதன் கண்கள் வலப்பக்கத்தில் அமைந்திருக்கும் (அ. சி.)

**தளம் வச்சிவாருதல்**
தொ. பெ. சொ. தொ., ஏற்கனவே பாத்தியில் படிந்திருக்கும் உப்பை அள்ளாமல் அதனையே தளமாக்கி அதன் மேல் படியும் சுத்தமான உப்பை அள்ளுதல்

**தனித்தூண்டில்**
பெ. சொ. தொ., மீன்பிடி கருவி. Casting line

**தனியறை**
பெ. சொ. தொ., லாஞ்சி போன்ற இயந்திரப் படகுகளில் இயக்குநர் அமர்வதற்குரிய அறை. Cabinet

**தன்னுவத்தை**
பெ. சொ., சிற்றோடம்; சிறிய தோணி (ம. த. பே.)

**தாங்குதல்**
தொ. பெ., தோணி, வள்ளம் போன்ற கலங்களில் இருந்து கொண்டு கோலால் குத்தித் தாங்குதல். கலத்தை முன் னோக்கிச் செலுத்தச் செய்யப்படும் முயற்சி.

**தாச்சிக்கண்ட**
பெ. சொ., மீன்வகை; (மணிமேகலைக் காப்பியத்தில் கூறப்பட்டுள்ள திட்டிவிடங்களைப் போல) பார்த்த மாத்திரத்தில் உயிருக்கு ஆபத்து என்பர். கரு நிறம் உடையது. 1 அல்லது 2 முழ நீளம் கொண்டது; கட்டு மரம், வள்ளம் ஆகிய கலங்களின் குறுக்கே பாயும் இயல் பினது. இம் மீனின் மீதுள்ள நீர் நம்மீது தெளித்தாலும் மரணம் என்பர். பரதவர் இம்மீனுக்கு மிகவும் அஞ்சுவர்.

**தாச்சில்**
பெ. சொ., ஆழ்கடல்

**தாட்டு**
பெ. சொ., தேங்காய் நாரினால் சிறுசிறு கண்ணிகள் அமையப் பின்னப்பட்ட பாய். உலர் மீன் உலர்த்தப் பயன் படும் பாய்.

**தாண்டு போச்சி**
தொ. பெ. சொ. தொ., தோணி, படகு, வள்ளம் ஆகியன கடலில் கவிழ்ந்துவிட்டால் 'தாண்டு போச்சு' என்பர். வள்ளம் தாண்டு போச்சு—உதாரணம்

**தாமணி**
பெ. சொ., பல தூண்டில்கள் கோக்கப்பட்ட கயிறு. இது இருவகைப்படும். 1. சின்னதாமணி; 2. பெரியதாமணி அளவில் சிறிய தூண்டில்கள் கோக்கப்பட்டிருப்பின் அது சின்னதாமணி என்றும் பெரிய தூண்டில்கள் கோக்கப் பட்டிருப்பின் அது பெரியதாமணி என்றும் வழங்கப்படும். நீண்ட வலுவான கயிற்றில் தூண்டில்களைக் கோத்து முதல் நாள் இறக்கி மறுநாள் கிளப்புவர். வழக்கம் போலத் தூண்டில் முள்ளில் இரை சேர்க்கப் பட்டிருக்கும். தாமணி —கயிறு, தாம்பு, வடம், புரி (ம. த. பே.)

**தாமதம்**

பெ. சொ., பெருவலையின் ஓர் உறுப்பு. தாமம்—அணை கயிறு. கயிறு (ம. த. பே.)

**தாமாங் கயிறு**

பெ. சொ. தொ., தோணிப்பாயின் பின் பக்கத்துக் கீழ்ப் பகுதிக் கயிறு தாமான் கயிறு. தாமான்—கப்பற்பாயின் பின்பக்கக் கயிறு (ம. த. பே.)

**தாமாவாரி**

பெ. சொ. தொ., பாயின் பின்புறத்தில் கட்டப்பட்டிருக்கும் பலகை. வள்ளத்தின் துணை உறுப்பு

**தாமானிலே வருதல்**

தொ. பெ. சொ. தொ., காற்றுப் போக்கிலே கலம் ஓடுதல். ஓடு நீரில் கப்பல் ஓடுதல் (ம. த. பே.)

**தாமான்**

பெ. சொ., கடல் ஊர்தியின் பின்பக்கத்துக் கயிறு (த. மொ. அ.)

**தார்ப்பூச்சு**

பெ. சொ. தொ., வள்ளம், தோணி ஆகியன கட்டி முடிக்கப்பட்டவுடன் மரத்தடிகளுக்கிடையில் உள்ள ஓட்டைகளை பிசின் கலந்த நூல் பிரிகளால் அடைப்பர். இதன் மேல் உருக்கப்பட்ட தார் பெயிண்ட் போலப் பூசப் படும். நீரில் புழங்கப்படும் மரமாதலால் மரம் நீரை உறிஞ் சாமல் இருக்கவும் நீரால் உளுத்துப் போகாமல் நீண்டநாள் உழைக்கவும் தார்ப்பூச்சு பாதுகாப்பிற்காகப் பூசப்படு கிறது.

**தாவுகல்**

வி. அ. பெ. சொ. தொ., கடலுக்கடியில் ஆழத்தையும் பார் (பாறை) இருப்பிடத்தையும் அறிய பரிசோதனை செய்யும் கயிறு. இக்கயிற்றின் இறுதியில் சிறு கல் முடியப்பட் டிருக்கும்.

**தாவுதல்**

தொ. பெ., தோணியில் துடுப்புக் கொண்டு தள்ளுதல்

**தாழ்வலை**

பெ. சொ. தொ., வலைவகை, Bottom net

**தாழை**
பெ. சொ., கடற்கரைத் தாவரம். தாழை ஓலையினால் பெட்டி, தலைக்குத் தொப்பி ஆகியன பரதவர் முன்னாளில் செய்து கொள்வர். கோலா முதலான மீன்களைப் பிடிக்கத் தாழை போன்றவற்றைக் கடலில் போடுவர். காண்க—கோலா

**திடீர்ப் புயல்**
பெ. சொ. தொ., திடீர்—எதிர்பாராமல். எதிர்பாராமல் வீசும் புயல் காற்று. Squall

**திமிங்கலம்**
பெ. சொ., மீன்வகை. Whale

**திராவுதல்**
தொ. பெ. சொ., படகில் துடுப்புப் போட்டுத் தள்ளுதல்

**திருக்கை**
பெ. சொ., மீன்வகை. இது தட்டையான அகன்ற உருவமுள்ள பிராணி. கோணம் போன்ற முகத்தின் கீழ்ப்பாகத்தில் வாயும் மேற்பாகத்தில் கண்களும் பெற்றிருக்கும். இதன் வால் 1 அடி முதல் 12 அடிவரை நீண்டு சாட்டைபோல் இருக்கும். இதன் இரண்டு பக்கங்களிலும் இறக்கை போன்ற உறுப்பு உண்டு. இதனால் இது நீரில் தாவிச் செல்லும். இதனை வவ்வால் மீன் என்பர். இவ்விடத்தில் கழுகுத் திருக்கை, கொடுக்கு வால் திருக்கை, சாரத்திருக்கை உண்டென்பர். புட்டிமீன்-இது திருக்கையின் பேதம். புட்டியைப் போல் உருவம் உள்ளது (அ.சி.) Aetobatus flagellum (spotted eagle Ray), Aetobatus narinari

**திருக்கை வலை**
பெ. சொ. தொ., வலைவகை. வலுவான, தடித்த நைலான் கயிற்றால் செய்யப்பட்டது. சுறாமீன் பிடிக்கவும் திருக்கை மீன் பிடிக்கவும் இவ்வலையைப் பயன்படுத்துவர். வலைக் கண் அரை அடி அகலம் கொண்டது. வலை அகலம் 10 அடி; நீளம் 300 அல்லது 400 அடி. இவ்வலை துவர்ச்சாயம் தோய்க்கப்பட்டிருக்கும். பிறவலைகளில் கட்டப் பட்டிருப்பது போல கீழ்ப்புறத்தில் கற்கள் கட்டப்பட்டிரா. இவ்வலையை முதல் நாள் கடலில் இறக்கி மறுநாள் எடுப்பர்.

**திருச்செந்தூர் பூந்தோட்டபார்**

பெ. சொ. தொ., Tiruchendore Punthotta Par; Punthottam—Flower garden; probably so named on account of some pretty species of sea-weed or other marine organism found on this Bank; Tiruchendur flower garden bank (J.H.)

**தில்லை நண்டு**

பெ. சொ. தொ., தில்லைக் காட்டுப் பகுதிகளில் வாழும் ஒருவகை நண்டு. தில்லை—ஒருமரம் (ம.த.பே.)

**தில்லை மரம்**

பெ. சொ. தொ., ஒரு வகை மரம் (ம.த.பே.)

**துடுப்பு**

பெ. சொ., தண்டு

**துடுப்பு அழுகல்**

தொ. பெ. சொ. தொ., மீனுக்கு உண்டாகும் நோய். மீனின் துடுப்பு அழுகுதல். Finrot

**துணைச் சுவாசம்**

பெ. சொ. தொ., முத்து, சங்கு குளிப்பவர்கள் நவீன சுவாசக் கருவி மூலம் கடலின் அடியில் சுவாசித்தல். Accessory respiration

**துண்டுதடி[1]**

பெ. சொ. தொ., பாய் மரத்தடி விழுந்து விடாமல் இருக்க முட்டுக் கொடுக்கப் பயன்படும் சிறுதடி

**துண்டுதடி[2]**

பெ. சொ. தொ., பர்லா முதலான மீன்களை அடித்துக் கொல்லப் பயன்படும் சிறு தடி

**துண்டு பார்**

பெ. சொ. தொ., Tundu Par; Small bank (J. H.)

**துப்ப கூனி**

பெ. சொ., மீன்வகை. Aetomylus nichofii (Eagle Ray)

**தும்பி**

பெ. சொ., மீன்வகை (அ.சி.)

**தும்பிலி**
பெ. சொ., ஒருவகை மரம் (த.மொ.அ.)

**துராட்(டு)**
பெ. சொ., பெரும்பை வலையின் மேற்பகுதிக்கும் மடிக்கும் இடையே உள்ள மால். Throat

**துவர் வைத்தல்**
தொ. பெ. சொ. தொ., வலைக்குச் சாயம் ஏற்றுதல். புளியங் கொட்டைத் தோல் மூலம் தயாரிக்கப்படும் துவர்ச்சாயத்தில் வலை தோய்க்கப்படுவதால் வலை உறுதிப்படும்; நிறம் பெறும். புளியங்கொட்டைத்தோல் எளிதில் கிடைக்கக் கூடிய விலையற்ற கச்சாப் பொருள். இது உறுதி ஊட்டுவது. பள்ளர்கள் தமது தோற்கருவி களுக்குப் புளியங்கொட்டைப் பசையினால் உறுதி ஊட்டு தல் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

**துவி**
பெ. சொ., சுறாவகை. மீன்களின் இறக்கை, செதில், வால் போன்றன 'துவி' எனப்படும். இதன் மறுபெயர் 'பீலி'. இது விலை மிகுந்தது. ஜப்பான், மலேசியா ஆகிய கீழ்நாடு களுக்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது. இது அந்நியச் செலா வணியை ஈட்டித்தரும் ஏற்றுமதிப் பொருளாகும். (திருநெல்வேலி மாவட்டத்தின் தென்பகுதியில் கத்தோ லிக்க ஆலயங்களுக்கும் பரதவர்களுக்குமிடையில் 'தனிக் குத்தகை' காரணமாக அண்மையில் ஒரு பெரும் போராட் டம் வெடித்தது. இப்போராட்டத்தை மையமாக்கி திருமதி ராஜம் கிருஷ்ணன் 'அலைவாய்க் கரையில்' எனும் சமூக நாவலை உருவாக்கியுள்ளமை கவனிக்கத் தக்கது.)

**துள்ளுகெண்டை**
பெ. சொ. தொ., மீன்வகை. Chanos chanos

**துறிஞ்சில்**
பெ. சொ., மீன்வகை. Albizzia amara

**துறை**
பெ. சொ., மீன்பிடி கலங்களாகிய படகு, வள்ளம் ஆகியன நிற்குமிடம்

**துறைமுகம்**
பெ, சொ., பெரிய கடல் கலங்கள் நிற்குமிடம். Harbour

**தூண்டில்**
பெ. சொ., மீன்பிடி கருவி

**தூண்டில் இரை**
பெ. சொ. தொ., மீனவர் பெரிய மீன்களைப் பிடிக்கத் தூண்டில் கொக்கியில் சிறு மீன், மண்புழு போன்ற வற்றைச் செருகிக் கடலில் வீசி எறிவர். இவற்றை உண் பதற்கு ஆசைப்பட்டு வரும் மீன்கள் கொக்கியை விழுங்கி மீள முடியாமல் அகப்பட்டுக் கொள்ளும். இதற்குப் பயன் படுவது தூண்டில் இரை. Bob

**தூண்டில் இரை மீன்**
பெ. சொ. தொ., பார்க்க—தூண்டில் இரை. Fish Bait

**தூண்டி(ல்) மரம்**
பெ. சொ. தூண்டில் போட்டு மீன் பிடிக்கக் கடலுக்குப் போகும் மரம். மரம்—கட்டு மரம்

**தூண்டில் மீன் பிடிக்கிறது**
தொ. பெ. சொ. தொ., தூண்டிலை மீன்பிடி கருவியாகக் கொண்டு மீன் பிடித்தல். Line fishing

**தூண்டில் மீன் பிடிக்கிறவர்**
வி. அ. பெ. சொ. தொ., தூண்டிலால் மீன் பிடிப்பவர். Angler

**தூண்டில் முள்**
பெ. சொ. தொ., மீன்பிடிக்கப் பயன்படும் தூண்டிலின் நுனியில் பொருத்தப்பட்டிருக்கும் முள். Fish hook

**தூத்துக்குடி கோடபார்**
பெ. சொ. தொ., Tuticorin Coda Par; The Bank off Tuticorin Bay. Kuda—bay; primarily a cavity or hollow (J. H.)

**தூம்பு கட்டைச் சட்டம்**
பெ. சொ. தொ., வள்ளத்தில் உள்ள ஒருவகைச் சட்டம். Out rigger boom

**தூரங்காசி**
பெ. சொ., கிளிஞ்சல் வகை

**தூரி**
பெ. சொ., மீன் பிடிக்கும் வலை. வாய் அகன்றும் அடி சிறுத்தும் அடிப்பாகம் திறக்க இயல்வதாகவும் உள்ளது. நீரோட்டத்தில இது மீன் பிடிக்கப் பயன்படுகிறது.

**தூரிவலை**

பெ. சொ. தொ., வலை வகை. Trawl net

**தூரி**

பெ. சொ., புளியங்கொட்டைத் தோலிலிருந்து தயாரிக்கப் படும் சாயம். வலைக்கு நிறமும் உறுதியும் ஊட்ட இச்சாயத் தில் வலை தோய்க்கப்படும். தூர்-சேறு, மண்டி (ம.த.பே.) கெட்டியான சாயக்குழம்பு

**தூர்வாட்டில் வருதல்**

தொ. பெ. சொ. தொ., வள்ளம் முதலான கடல் கலத்திற்கு அண்மையில் மீன் துள்ளித் துள்ளி வருதல்

**தெப்பம்[1]**

பெ. சொ., கடல் கலம்

**தெப்பம்[2]**

பெ. சொ., உப்பளப் பாத்தி

**தெம்மா ஒழினி வெள்ளம்**

பெ. சொ. தொ., தென்கிழக்குத் திசையிலிருந்து வட மேற்குத் திசை நோக்கி ஓடும் கடல் நீரோட்டம்

**தெய்வயானை தண்ணீர் வாங்குதல்**

தொ. பெ. சொ. தொ., வாடைக்காலத்தில் கடலின் மேல் குறிப்பிட்ட இடத்தில் கருத்த மேகம் திரண்டு காணப் படும். நிலையாக நிற்கின்ற இம்மேகத்திடமிருந்து விழுது களைப் போல் கோடு கோடாக மேகங்கள் கடலைத் தொடும். இக்கடற் பகுதியில் கிட்டத்தட்ட 1000 அடி பரப் பளவுக்குக் கடல்நீர் கொந்தளிக்கும். இதில் கடல் கலங்கள் சிக்கினால் பாய்மரம் கிழிந்து உயிருக்கு ஆபத்து ஏற்படும். மழையைத் தரும் தெய்வயானை நீரைக் கடலிலிருந்து முகந்து செல்கிறது எனப் பரதவர் நம்புகின்றனர்.

**தெரவாங்கனை**

பெ. சொ., மீன்வகை

**தெவிவலை**

பெ.சொ.தொ., வலை வகை

**தெளிவு[1]**

பெ. சொ., கடல்நீர் துல்லியமாகத் தெளிவுபட இருத்தல். இங்ஙனம் இருப்பின் குளியர்கள் சங்கு, முத்து ஆகியன குளிக்கக் கடலில் இறங்க மாட்டார்கள். காரணம்—ஆடா

திருக்கை, சுறா போன்றவை எளிதில் மனிதர்களைக் கண்டு கொண்டு பாய்ந்து கடித்து ஆபத்தை விளைவிக்கும். மீன் பிடி தொழிலரும் 'தெளிவை' விரும்புவதில்லை. மீன்பாடு 'தெளிவு' காரணமாக மிகவும் குறைந்து விடுவது காரண மாகும்.

**தெளிவு**[2]
பெ. சொ., வலையின் கண்கள் சுருங்கி விடாமல் விரிந்து இருத்தல்

**தெளிவுத் தண்ணீர்**
பெ. சொ. தொ., நீர்த்தெளிவு. காண்க : தெளிவு[1]

**தென்னல்**
பெ. சொ., தெற்குத் திசையிலிருந்து வீசும் காற்று. திசையால் பெற்ற பெயர்

**தேக்கு**
பெ. சொ., வள்ளம், தோணி கட்டுவதற்குரிய தரமான மர வகை

**தேங்காய்ப்பாறை**
பெ. சொ. தொ., மீன்வகை. Caranx hippos

**தேச்சி விடறது**
தொ. பெ. சொ. தொ., உப்பைத் தளம் வைத்து வாரும் முறையில் முதலில் படிந்த உப்பை அளத்தோடு தேய்த்து விடுதல்

**தேரடி புடித்தபார்**
பெ. சொ. தொ., Teradi Piditha Par; Teradi Puditha Par; Ter—Car; Teradi—place where car is kept; i.e. Pagoda or temple; Bank having Tiruchendur Pagoda as land mark (J. H.)

**தேரி**
பெ. சொ., செக்கச் சிவந்த மணற் பாங்கான இடம். உவரி, மணப்பாடு பகுதிகளில் 200 அடி உயரத்திற்கு அமைந் திருக்கும் மணல்மேடு ('சோமலெ'). மணல் திட்டை (த.மொ.அ.)

**தேவிபார்**
பெ. சொ. தொ., Devi Par; Probably 'the Rani's bank. Devi a titular suffix to the names of the

Rani of Ramnad and of Madura; primarily the name of a Goddess (Siva's Wife) (J. H.)

**தேளி**

பெ. சொ., மீன்வகை

**தொங்குகயிறு**

பெ. சொ. தொ., வள்ளத்திற்கும் கடலில் இறக்கிய வலைக்கும் இடையில் தொங்கும் கயிறு. Hanging twine

**தொங்குவலைக் கட்டை**

பெ. சொ. தொ., வலையின் மேற்புறம் கட்டப்பட்டிருக்கும் மிதப்புக் கட்டைகளில் ஒன்று

**தொட்டாப்பு**

பெ. சொ., வலைத்துண்டம்

**தொட்டான்**

பெ. சொ., உப்பளத்தில் தெப்பத்திற்கும் பாத்திக்கும் இடையில் உள்ள நீர்த்தேக்கம்

**தொண்டை**

பெ. சொ., மீன்வகை

**தொழி**

பெ. சொ., பழைய முறையில் தயாரிக்கப்படும் உப்பள முறையில் இருக்கும் தொட்டானின் மறுபெயர்

**தொழில்**

பெ. சொ., பரதவர் சமூகத் தொழில். மன்னார் வளைகுடாப் பகுதியில் அமைந்த இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டக் கடற்கரைப் பரதவர் 85% மீன்பிடி தொழிலிலும் 15% சரக்கேற்றுதல், சரக்குப் பறித்தல், சவருக்குப் போதல் ஆகிய பிற தொழில்களிலும் ஈடுபட்டுள்ளனர். சங்கு, முத்துக் குளித்தல் மீன்பிடி தொழிலில் அடங்குவன. வணிகம் உப்பளத் தொழில் இன்ன பிற தொழில்களில் அடங்குவன.

**தொளுத்தை**

பெ. சொ., மீன் வகை. கடல் பரப்பில், பெருங் கூட்டமாக வயிரத் துண்டங்களின் தொகுதிபோல மின்னிப் பரவும். இம் மீனைக் காண நேர்ந்தால் கடல் கொந்தளிப்பு, புயல் ஆகியன உருவாகப் போகின்றன எனப் பரதவர் நம்புவர்.

**தொள்ளாளி**

பெ.சொ., மந்திரவாதி. தாயத்து முதலானவை செய்து தருபவர். மீன்பாடு குறைவாக இருப்பின் எச்சமயத்தைச் சார்ந்த பரதவராயினும் தொள்ளாளியிடம் சென்று தாயத்து பெற்று வந்து சடங்கு செய்வர். காண்க : கண் திருஷ்டி

**தொள்ளாயிரம்பார்**

பெ.சொ.தொ., Tholayiram Par; 900 Banks; A large bank characterised by numerous small patches of rock rising from a sandy bottom (J.H.)

**தோட**

பெ.சொ., தோடை. 'தோட' என்பவர் சங்கு குளிப்ப வர்களைக் கண்காணிப்பவர். தொழில் நுணுக்கம் அறிந்த வர். இப்படிப்பட்டவர்கள் இருவர் அல்லது மூவர் ஒவ் வொரு சங்கு குளி வள்ளத்திலும் இருப்பர்.

**தோடையன்**

பெ.சொ., 'தோட' எனினும் தோடையன் எனினும் ஒருவரே. மேற்குறிப்பு காண்க

**தோட்டுக் கணவா**

பெ.சொ.தொ., மீன்வகை. கணவாய் மீனின் இனம்

**தோணி**

பெ.சொ., கடலூர்தி. சரக்கு ஏற்றிச் செல்ல வாகானது. Water craft; canoe

**தோணி கழுவுதல்**

தொ.பெ.சொ.தொ., கடல் தொழில் முடிந்து கரை திரும் பியதும் அன்றன்றைக்குப் படிந்த சேறு, மீன் கவுச்சி (மீன் வாடை) போகுமாறு கழுவிச் சுத்தம் செய்தல். கட்டு மர மானால் அதன் கட்டை அவிழ்த்து ஒவ்வொரு தடியாகக் கரைக்குக் கொணர்ந்து சுத்தப் படுத்துவர்.

**தோணிக்காரன்**

பெ.சொ., சம்பானோட்டி (த.மொ.அ.)

**தோணி காவுதல்**

தொ.பெ.சொ.தொ., தொழிலுக்குப் புறப்படும்போது துண்டு தடிகளில் கயிற்றைக் கட்டி அதனூடே தோணி மரங்களைத் (கன்னாத் தோணி, கட்டுமரம்) தூக்கிச்

சென்று கரையோரம் வைப்பர். இது தோணி காவுதல் எனப்படும்.

**தோணிக்குப் பெயர் வைத்தல்**

தொ. பெ. சொ. தொ., தமது கலத்தை அடையாளம் காணுவதற்காகவும் தெய்வத்தின் பெயர் சூட்டப்பட்டிருப் பின் அபாயம் நேராது எனும் நம்பிக்கைக்காகவும் தோணிக் கும் இன்ன பிற கலங்களுக்கும் பெயர் சூட்டுவது வழக்கம். கலத்திற்குப் பரதவர் சூட்டும் பெயர்களுள் சில—அந்தோணியார், அல்லா, அன்னம்மாள், ஆரோக்கியமாதா, இராயப்பர், இன்னாசியார், சகாயமாதா, சன்பிரேஸியஸ் சந்தலேனாள், சந்தன்மாரி, சன் அருளப்பர், சன்சார்லஸ், சன்யாகப்பர், சிந்தா யாத்திரை மாதா, சின்னப்பர், சூசையப்பர், ஜார்ஜ், திரேசம்மாள், தோமையார், நாகூர் ஆண்டவர், பரலோக மாதா, பழனியாண்டி, பாத்திமா, பீட்டர்ஸ், பூண்டி மாதா, முருகன், மைக்கேல் சாலமன், ஓார்தம்மாள் ஆகியன. ஆபத்துக் காலங்களில் குட்டி யாண்டவர், பாவாடைராயன், முன்னோடும் பிள்ளை பெயர்களை உச்சரிப்பர். தேவ மாதா போன்ற சமயச் சார்பினைப் புலப்படுத்தும் பெயர் சூட்டுதலோடு 'வசந்தம்' 'விஸ்வநாத்' எனும் தனக்குப் பிடித்தமான அல்லது தன், தனது குடும்ப உறுப்பினரின் பெயர் சூட்டுதலும் உண்டு. (தினமணி 13-11-1983, பக். 6)

**தோணித்துறை**

பெ. சொ. தொ., தோணிகள் நிற்குமிடம். Ferry

**தோல் பாரை**

பெ. சொ. தொ., மீன் வகை. Chorinemus Sanctipetri, Butter fish

**நகர்ப்பாரி**

பெ. சொ. தொ., நகரை. ஒருவகை மீன் (த. மொ. அ.). Upeneus Sulphureus (yellow goat fish); Bank abounding in a fish called negarai, nagara the name of a fish (J.H.)

**நங்கூரக்கல்**

பெ. சொ. தொ., இரும்பால் ஆக்கப்படாத, கல் கட்டிய நங்கூரம். Killic

**நங்கூரத்தண்டு**

பெ. சொ. தொ., நங்கூரத்தைத் தாங்கியுள்ள இரும்புச் சங்கிலி. Shank

**நங்கூர மிதப்பு**

பெ. சொ. தொ., நங்கூரச் சங்கிலியில் பிணைக்கப் பட்டுள்ள மிதப்பு. Moorings

**நங்கூரம்**

பெ. சொ., கடல் கலத்தை ஆடாமல் அசையாமல் நிலை நிறுத்துவதற்காகக் கடலடியைக் கௌவிப் பிடித்திருக்கும் இரும்பாலான கொக்கி. Anchor

**நங்கூரம் பாய்ச்சுமிடம்**

பெ. சொ. தொ., நங்கூரத்தை இறக்கியுள்ள இடம். Anchorage

**நங்கூரவடம்**

பெ. சொ. தொ., நங்கூரத்தையும் கலத்தையும் இணைக் கும் வடம். Bridle

**நஞ்சுக்கான்**

பெ. சொ. தொ., கான்—கால்வாய். 29 டிகிரி அடர்த்தி யுள்ள உப்பு நீரைக் கழித்து நஞ்சுதண்ணீர்பாத்திக்கு அனுப்பப் பயன்படும் கால்வாய்

**நஞ்சுதண்ணீர் பாத்தி**

பெ. சொ. தொ., உப்புத் தயாரிப்பில் இறுதிக் கட்டமாகக் கழியும் நீரைத் தேக்கி வைக்கப் பயன்படும் பாத்தி. உப்ப ளங்களில் உப்பு விளைவித்த பின்னர் மீதி நீரை இப்படி தேக்குவர். உணவுக்குப் பயன்படுத்த முடியாத அளவுக்கு பல இரசாயனப் பொருட்கள் இதில் கலந்திருக்கும். இந்த உப்புநீர் நஞ்சு தண்ணீர் எனவும் இது தேங்கியுள்ள இடம் நஞ்சு தண்ணீர்ப் பாத்தி எனவும் வழங்கப்படும். இந்த் நீரின் அடியில் உண்டாகும் உப்பு, தோல் பதனிடும் உப்பா கவும் தென்னை போன்ற மரங்களுக்கு அடியிலிடும் உர உப்பாகவும் பயன்படுகிறது.

**நஞ்சுவாய்க்கால்**

பெ. சொ. தொ., நஞ்சுக்கான்

**நடுகடல்**

பெ. சொ. தொ., ஆழ்கடல்

**நடுகூடா முத்துபார்**
பெ. சொ. தொ., Nadu Kuda Muthu Par; Nadu—middle; Bank near the middle of the Pearl Bay (J. H.)

**நடுக்கட்டி**
பெ. சொ. தொ., வள்ளத்தின் நடுவில் உள்ள உள்ளுறுப்பு

**நடுக்கோல்**
பெ. சொ., கட்டுமரத்தின் அடிப்பகுதியிலிருந்து குத்தித் தாங்கும் கோல்

**நடுவுமலை பிடித்தபார்**
பெ.சொ.தொ., Naduvu malai Piditha Par; Naduvu-Central; malai—hill; Bank touching or on the bearing of a peak of the Western Ghates (J.H.)

**நடுவுல மரம்**
பெ. சொ. தொ., கட்டு மரத்தின் நடுமரம்

**நண்டு**
பெ. சொ., கடல் நண்டு. Crab

**நண்டுகடி**
பெ. சொ. தொ., தரமற்றது என முதலாளரால் கழிக்கப் படும் சங்கு

**நண்டுக் கண்ணி**
பெ. சொ. தொ., நண்டு பிடிக்கும் பொறி. Crab noose

**நண்டுக்கூடு**
பெ. சொ. தொ., நண்டைப் பிடித்துப்போட பயன்படும் குடுவை போன்ற கருவி. Crab pot

**நண்டு கட்டை**
பெ. சொ. தொ., கடலோரங்களில் உள்ள நண்டுகளைப் பிடிக்கப் பயன்படும் கருவி. நீண்ட கயிற்றில் சிறு மீன் களையும் இறந்த தவளைகளையும் கட்டி அக்கயிற்றைக் கடலில் போடுவர். பரதவச் சிறுவர்கள் பயிற்சிக் காகவும் இது பயன்படுதல் உண்டு. இந்த நண்டுக் கட்டையைப் போடப் போகிறவர் தனியே நீந்தியும் தனிக் கட்டைகளைத் துணைக்குக் கொண்டு நீந்தியும் கடலின் உட்பகுதியில் அலை இல்லாத இடத்தில் போடுவர். இதைப் போட்ட சிறிது நேரத்தில் மீண்டும் வட்ட வடிவமான

வாயோடு கூடிய பை போன்றிருக்கும் கச்சாவலையை எடுத்துச் சென்று நீந்திக்கொண்டே கயிற்றை மெல்லப் பற்றி கயிற்றில் கட்டப்பட்ட இரைகளைத் தின்று கொண்டிருக்கும் நண்டுகளைக் கச்சாவல்லையில் ஏந்திக் கொள்வர். தூண்டிலில் இரை தீர்ந்துவிட்டால் வேறு இரை கட்டுவர். பரதவச் சிறுவர்க்குக் கடல் நுணுக்கம், வெள்ளம் பற்றிய அறிவு, நீச்சல் பயிற்சி ஆகியன இதன் மூலம் கிடைக்கின்றன.

**நண்டுப் பரி**

பெ. சொ. தொ., நண்டுக் கூடு. Crab pot

**நண்டுவலை**

பெ. சொ. தொ., வலைவகை; வலையின் நிறம் வெண்மை; வலைக்கண் அரை அங்குல அளவினது. அகலம் 5 அடி; நீளம் 30 அடி; பல துண்டு வலைகள் இணைந்தது ஒரு நண்டு வலை. ஒரு கட்டு மரத்தில் சென்று தொழில் செய்ய 10 துண்டு வலைகள் போதுமானவை. இவ்வலையைக் கொண்டு தொழில் செய்ய இரு பரதவர் போதும். இவ் வலையில் மிகுதியும் பிடிபடுவது பொருவா எனும் மீனாகும். 'மேங்கா'வில் மிதப்புகளும் 'கீங்கா'வில் கற்களும் வழக்கம்போல் கட்டப்பட்டிருக்கும். அம்பது கட்(ை)ட வ(ை)ல, அறுவது கட்(ை)ட வ(ை)ல என மிதப்புக் கட்டைகளின் எண்ணிக்கையை வைத்து வலையின் பெருமை, சிறுமையைக் கூறுவர்.

**நரம்பு**

பெ. சொ., கனமான உறுதியான செயற்கை இழை; மீன் பிடிக்கப் பயன்படுவது; 100ஆம் நெம்பர், 70ஆம் நெம்பர் என நரம்பு வகைகளுக்குப் பரதவர் வைத்திருக்கும் பெயர்கள்.

**நல்ல தண்ணி தீவு**

இராமநாதபுரத்திலிருந்து 40 கி. மீ. தொலைவிலும் வாலி நோக்கத்திலிருந்து ஒரு மணி நேரப் பயண தூரத்திலும் நல்ல தண்ணித்தீவு உள்ளது; 100 ஹெக்டேர் பரப்பளவு உள்ளது; மீனவர்கள் தொழிலினூடே ஓய்வெடுக்கப் பயன்படும் இடமாக இத்தீவு அமைந்துள்ளது. இது ஒரு காலத்தில் இராமநாதபுரம் அரசருக்கு உரிமைப் பட்டதாக இருந்தது. சில தசாப்தங்களுக்கு முன்னர், மகமதிய வணிகர்

ஒருவருக்கு விற்கப்பட்டுவிட்டது. இங்கே ஒரு முனியசாமி கோயில் உள்ளது. கடல் கொந்தளிப்பில் அகப்பட்டுக் கொண்டு பிரார்த்தித்துத் தப்பிப் பிழைத்த மீனவர் நேர்ச்சைக் கடனாகக் கட்டியது இக்கோயில் என்பர். பக்கத்தில் உள்ள ஆலமரத்தில் நேர்ச்சைக் கடனாக பல மணிகள் கட்டப்பட்டுள்ளன. இத்தீவைச் சுற்றிலும் பவளப் பாறைகள் உள்ளன. இத்தீவில் குடிக்க நல்ல தண்ணீர் உள்ளது. (The Hindu, Sunday, October *21*, *1984*, P. *17*)

**நல்ல தண்ணீர் தீவு பார்**
*பெ. சொ. தொ.*, Nalla Thannir Tivu Par; Nalla Thannir-fresh water; nalla thanni tivu is a island in the Zamindari of Ramnad where excellent fresh water is obtainable from shallow wells (J.H.)

**நல்ல கணிசம்**
*பெ. சொ. தொ., மீன் படுவதற்குரிய தகுந்த நேரம்*

**நவரை**
*பெ. சொ., மீன்வகை (அ. சி.)*

**நறுக்குகொத்தா(ய்) கொத்துதல்**
*தொ. பெ. சொ. தொ., சண்டு அரிதலுக்கு வசதியாக உப்பளப் பாத்தியை மண்வெட்டியால் சிறுசிறு கொத்தாய்க் கொத்துதல்*

**நாகணம்**
*பெ. சொ., சங்கின் கண்*

**நாக்கு**
*பெ. சொ., மீன்வகை. மனிதனுக்கு உள்ளது போல் நாக்கு உள்ள மீன் (அ. சி.).* Brachirus Orientalis, Brachiras albomaculata, Brachirus Pan

**நாட்டார்**
*பெ. சொ., பரதவருள் ஒரு பிரிவினர்*

**நாட்டுப் படகு**
*பெ. சொ. தொ., மரபு வழிப்பட்ட, பழமையான கடல் கலம்.* Country craft

**நாட்டுமரம்**
*பெ. சொ. தொ., மரபு வழிபட்ட மரக்கலம்.* Indigenous craft

**நாமப் பள்ளி**

பெ. சொ., மீன் வகை. Epinephelus boenack

**நாமப்பாரை**

பெ. சொ., மீன் வகை. Caranx leptolepis

**நாயராட்சை**

பெ. சொ., ஞாயிற்றுக்கிழமை. பரதவர்க்கு ஞாயிற்றுக் கிழமை இரு வழிகளில் முக்கியத்துவமுடையது. 1. வார விடுமுறை நாள்; 2. பெரும்பாலோர் ரோமன் கத்தோலிக்க ராதலால் குடும்பத்தோடு தேவாலயங்களுக்குச் சென்று வழிபாடு செய்யும் நாள். 'மெனக்கி நாள்' என்றும் கூறு வர்.

**நாயிச்சுறா**

பெ. சொ. தொ., சுறா மீன்வகை. சுறா இனத்தில் மிகச் சிறியது. 4 அடி நீளம் வரை வளர்வது.

**நார்ப்பெட்டி**

பெ. சொ. தொ., மீன் எடுக்கப் பயன்படுத்தப்படும் பெட்டி

**நிலவு பதிதல்**

தொ. பெ. சொ. தொ., நிலவு கடற்பரப்பிலிருந்து வெளி யில் கிளம்புதல். முழு நிலவும் கடற் பரப்பை ஒட்டி நிற் கும் சமயம் நிலவு கடல்மேல் பதிந்தது போலத் தோற்ற மளிக்கும். 'நிலவு பதியற நேரமாச்சு' என்பர் பரதவர். இது நேரம் குறிக்கும் தொடர்.

**நாவாய்**

பெ. சொ., கடல் கலம். Vessel

**நாளி**

பெ. சொ., வள்ளத்தின் உள்ளுறுப்பு

**நிலைவலை**

பெ. சொ. தொ., வலை வகை. Setnet

**நீரோட்டம்**

பெ. சொ., கடல் நீரிடையில் கிழக்கிலிருந்து மேற்காகவும் வடக்கிலிருந்து தெற்காகவும் தனி ஆறுபோல் வேகத்துடன் ஓடும் நீரோட்டம். Current; Stream. (பார்க்க: கடலைக் கலக்கும் நீரோட்டங்கள், தினமணி சுடர், அறிவியல் இணைப்பு, சனிக்கிழமை, நவம்பர் 12, 1988, பக். 1, 3)

**நீர்க்கசடு**
பெ. சொ. தொ., தளதளப்பான சேறு. Addle

**நீர்த்துல்**
தொ. பெ., ஆழ்கடலுக்கு மீன் பிடிக்கச் செல்லுதல்

**நீர்நாய்**
பெ. சொ. தொ., கடல்வாழ் உயிரினம். Otter

**நீர்ப்பாசி**
பெ. சொ. தொ., கடல் தாவரம்

**நீர்ப்பாடு**
பெ. சொ. தொ., நீர்க்குறைவு (த. மொ. அ.)

**நீர்வாடு**
பெ. சொ., கடல் நீரோட்டம்

**நீலங்கல்லுபார்**
பெ. சொ. தொ., நீலம் கல் பார். Nilam—Blue; Kallu—Stone; Blue stone bank (J.H.)

**நுரகல்லு**
பெ. சொ. தொ., நுரைகல். கடலில் கிடைக்கும் சுண்ணாம்புக்கல். நுரை போன்ற அமைப்புடையது. பவளச் சுண்ணாம்புக்கல், சுழி எனும் பெயர்களும் உண்டு.

**நுழைப்பள்ளி**
பெ. சொ. தொ., பரதவருள் ஒரு பிரிவினர்

**நூங்கு**
பெ. சொ., கடல்வாழ் உயிரினம்; நண்டு இனம். பார்ப்பதற்கு 'இறால்' போலத் தோற்றமளிக்கும். 'இறால்' மிகுந்த விலை விற்பதனால் 'நூங்கு' இதனுடன் கலப்படம் செய்யப்படுவதாகச் சொல்கின்றனர். ஒரு சிலரே பேராசை காரணமாகச் செய்வதாகக் கூறப்படுகிறது.

**நூல்**
பெ. சொ., வலை பின்னுவதற்கு உதவும் மூலப்பொருள். பருத்தி நூல் அல்லது நைலான் நூல். Twine

**நூல் ஏணி**
பெ. சொ. தொ., நூலால் ஆகிய ஏணி

**நூல் முறுக்கி**
பெ. சொ. தொ., நூலை முறுக்கி உறுதிப் படுத்துவதற்குரிய கருவி

**நெஞ்சுரிச்சான்பார்**

பெ. சொ. தொ., Nenjurichan Par; Good for nothing bank; literally 'heart harrower'. Nenjurichan: Nenju—heart; Urichan—flayer or peeler (J. H.)

**நெருமான் கெளிறு**

பெ. சொ. தொ., மீன்வகை. Arius dussumieri

**நெட்டி**

பெ. சொ., மீனின் வயிற்றுக்குள் இருக்கும் காற்றுப்பை. 'பாளை' எனும் மறுபெயரும் இதற்கு உண்டு.

**நெத்திலி**

பெ. சொ., நெற்றிலி. மீன்வகை. Engraulis indicus (White bait)

**நெத்திலி வலை**

பெ. சொ. தொ., வலைவகை. நெத்திலி (நெற்றிலி) மீன் இவ்வலையில் மிகுதியும் பிடிபடும். வலைக்கண சிறிய அளவினது. வலையின் அகலம் 5 அடி

**நெய்ச்சீலா**

பெ. சொ. தொ., சீலா மீன்வகை. சுவையும் விலையும் மிகுந்தது

**நெருக்கு**

பெ. சொ., வள்ளத்தின் உள்ளுறுப்பு

**நேரம் வெள்ளை வைத்தல்**

பெ.சொ.தொ., மானம் கீழ்மாறு வாங்குதல்; இருளகன்று வெளிச்சம் புலப்படும் அதிகாலைப் பொழுது

**நேர்க்கச்சாங்காத்து**

பெ. சொ. தொ., நேர் தென்திசையிலிருந்து வடதிசை நோக்கி வீசும் கடற் காற்று

**நேர் கொண்ட காத்து**

பெ. சொ. தொ., நேர்கிழக்குத் திசையிலிருந்து மேற்குத் திசை நோக்கி வீசும் கடற்காற்று

**நேர் கோடைக் காத்து**

பெ. சொ. தொ., நேர்மேற்குத் திசையிலிருந்து கிழக்குத் திசை நோக்கி வீசும் கடற்காற்று

**நேர் பாட்டன்**

பெ. தொ., காற்று பலமாக அடிக்கும்போது வாயுவை பாட்டன் முறை கொண்டழைத்துப் பரதவர் கூவுவர். கடல் நீரை அள்ளிப் பாய்மேல் தெளித்து வணங்குவர். காண்க- ஆறுனபாட்டன்

**நேர் வாடைக் காத்து**

பெ. சொ. தொ., நேர் வடதிசையிலிருந்து தென்திசை நோக்கி வீசும் கடற்காற்று

**நைலான் வலை**

பெ. சொ. தொ., நைலான்—ஆங்கிலச் சொல். செயற்கை இழையால் ஆக்கப்பட்ட வலை. வலைவகை. Nylon yarn

**பகுறணை**

பெ. சொ., 'பௌர்ணமி' எனும் சொல்லின் பேச்சு வழக்கு. கடல் தொழிலில் இந்நாள் குறிப்பிடத் தகுந்தது.

**பச்சிலை அடித்தல்**

தொ. பெ. சொ. தொ., நீர்வாட்டம், மீன்பாட்டுப் பருவம் முதலானவை சரியாக இருந்தும் தொடர்ச்சியாகச் சில நாட்கள் மீன் சரியாகக் கிடைக்கவில்லையென்றால் வலைக்குச் சடங்கு செய்வார்கள். எருக்கன் இலை, பீக். கிளாத்தி ஆகியவற்றைக் கொத்தாகக் கொண்டு வந்து அவற்றால் வலைகளையும் வள்ளத்தையும் அடிப்பார்கள் இதற்குப் பச்சிலையடித்தல் என்பது பெயர்.

**பஞ்சலை**

பெ. சொ., மீன்வகை. Barbus Chrysopoma, Barbus Sarana

**படகு**

பெ. சொ., கடலூர்தி. Boat

**படகுக் கண் திறத்தல்**

தொ. பெ. சொ. தொ., வள்ளம் அல்லது படகை நாள் செய்து கடலில் தள்ளுவதற்கு கொஞ்சநேரம் முன்பு, அந்தப் படகைக் கட்டிய ஆசாரியைக் கூட்டி வந்து உளியினால் படகின் இருபக்கங்களிலும் 'கண்' போன்ற அமைப்பை வெட்டுவிக்கின்றனர். இப்படிக் கண் வெட்டுவித்தால் படகு விபத்துக்களில் சிக்காமல் இருக்கும் என நம்புகின்றனர். மனிதனுக்குக் கண் அவசியமாக இருப்பதைப் போலப் படகுக்கும் கண் அவசியம் என்பர், படகுக்

குக் கண் திறக்கும் நாளில் 'கொழுக்கட்டை' முதலான வற்றைச் செய்து படைப்பர். படகு கட்டிய ஆசாரிக்குப் புதுவேட்டி, துண்டு ஆகியன எடுத்துக் கொடுப்பர்.

**படகு திருப்பல்**

தொ. பெ. சொ தொ., பெரிய வலை 'வைப்பதற்கு' (கடலில் இளக்குவதற்கு) முன்னர் படகை நேர் கிழக்குத் திசையில் திருப்புதல்

**படகுத் துடுப்பு**

பெ. சொ. தொ., படகு நீரில் முன்னோக்கிச் செல்வதற்கு வாய்ப்பாக நீரைப் பின்னோக்கித் தள்ள உதவும் தட்டை யான ஒரு மரச்சட்டம். Oar, scull

**படகு நாள் செய்தல்**

தொ. பெ. சொ. தொடர். பரதவர்கள் புதிதாகச் செய்த தங்களின் தோணிகளை முதன்முதலாகக் கடலில் இறக் குவதற்குச் செய்யும் சடங்கு, 'நாள் செய்தல்' எனப்படும். நாள், நட்சத்திரம் முதலியவற்றை நல்ல ஜோசியரிடம் பார்த்துக் குறிப்பிட்ட நாளில் கடலில் இறக்குவதென முடிவு செய்து நாள் குறிப்பர். அந்தக் குறிப்பிட்ட நாளில் புனித மரியன்னை கோவிலுக்குச் சென்று அன்பளிப்பு களை வழங்கித் தங்களுக்காகப் பாதிரியாரிடம் வழிபாடு நடத்தச் சொல்வார்கள். அன்றைக்கே நெருங்கிய உறவி னர்கள், நண்பர்கள் எல்லோருக்கும் தெரிவித்து படகு இருக்கும் இடத்திற்குச் சென்று பொங்கல் வைத்து கடலை, சுண்டல் ஆகியன வைத்துப் படைப்பர். பின்னர் பரதவர் பலர் சேர்ந்து தோணியைக் கடலுக்குள் தள்ளிவிடுவர். இச்சடங்கின்போது பன்னீர் பாட்டில் உடைத்து நாள் செய்வர். உயிர்ப்பலிப் பழக்கம் கிருத்துவ தொடர்பால் பன்னீர் பாட்டில் உடைப்பதாக மாறிவிட்டது. இச் சடங்கைக் கூர்ந்து நோக்கினால் இரு சமயக் கலப்பையும் கவனிக்கலாம். பொங்கல் இடுவது இந்து சமய வழக்கம். பன்னீர் பாட்டில் உடைப்பது கிருத்துவ சமய வழக்கம்.

**படகு வலிக்கிறவர்**

வி. அ. பெ. சொ. தொ., படகு இயங்கத் துடுப்புப் போடு கிறவர். Sculler

**படிசு**

பெ. சொ., வீச்சு வலையின் ஓர் உறுப்பு

**படிப் புறப்படல்**

தொ. பெ. சொ. தொ., கலங்கள் கடல் அலைகளைத் தாண்டிச் செல்லுதல். கொந்தளிக்கும் கடலோரப் பகுதியைத் தாண்டி ஒரே நேரத்தில் தாவுகள் தள்ள, துடுப்புகள் வலிக்க, கோல்கள் குத்தித் தாங்க கலம் பயணம் புறப்படல்.

**படிவலை**

பெ. சொ., வலைவகை.

**படுகுழி**

பெ. சொ. தொ., கடற்பரப்பின் கீழ் இருக்கும் பேராழம். Abyss

**படுத்தமரைக்காரன் துண்டுபார்**

பெ. சொ. தொ., The small bank close to the Padutha marikan Par; Thundu-fragment i. e. small; marikan-maraikan (J.H.)

**படுத்த மரைக்காரன் பார்**

பெ. சொ. தொ., Bank whereon Marikan (a Musalman) was found lying (dead). Paduthiru—lying down. Marikan or Marikar—appended to Muhammadan names in a relic of an honorofic bestowed by the Portugeese upon prominent Muhammadans (J.H.)

**படுபாதாளம்**

பெ. சொ. தொ., கடற்பரப்பின் கீழ் 300 பாகத்தைக் காட்டிலும் ஆழமான பகுதி. 1 பாகம் — 6¼ அடி. 300 பாகம்-1875 அடி. படு பாதாளம்—ஏறக்குறைய 2000 அடிக்கு மேல் உள்ள ஆழமான பகுதி.

**படைக்காரன்**

பெ. சொ., கோலாமீனின் மறுபெயர்; குழூஉக்குறி. காண்க—கோலா

**பட்டங்கட்டிகள்**

பெ. சொ. தொ., ஜாதித் தலைவன். பரதவர் சமுதாயத்தில் இவர்கள் ஊர்த் தலைவர்கள் போன்றவர்கள். முன்னாளில் இவர்கள் முழு அதிகாரம் பெற்றிருந்தனர். இவர்களுக்கு அச்சமூகம் முழுவதும் பயந்து கட்டுப்படும்,

**பட்டறை**
பெ. சொ., தோணி செய்யப்படும் இடம்; செய்தபின் கடலில் இறக்குவதற்கு முன் நிறுத்தி வைக்கும் இடம்.

**பட்டன சுட்டான்**
பெ. சொ., மீன் பெயர்.

**பட்டி[1]**
பெ. சொ., சங்கு வகை. இராமநாதபுரம் மாவட்டக் கடற்கரைப் பகுதிகளில் கிடைப்பது. பலகறை எனும் சங்கு வகை (த. மொ.அ.)

**பட்டி[2]**
பெ. சொ., தோணியின் குறுக்கே உட்காரப் பயன்படும் பலகை

**பட்டிவலை**
பெ. சொ. தொ., வலைவகை. Pound net

**பட்டினவர்**
பெ. சொ., பட்டினம்—கடற்கரையில் அமைந்த நகரம். கடற்கரையிலிருந்து கொண்டு கடல் தொழில் செய்யும் நெய்தல் நில மக்கள். கரையில் வசிப்பவர் (பட்டினவர்—Tamil Studies—M. Srinivasa Aiyangar)

**பட்டினவன்**
பெ. சொ., பரதவருள் ஒரு பிரிவினர். நெய்தல் நில மக்கள் பரவர் (ம.த.பே.)

**பணிஞ்சிட்டுப் பருது**
தொ. பெ. சொ. தொ., மீன்கள் கடல் நீரின் கீழ் மட்டத்திலிருந்து கொண்டு வலைவீசும் போது அகப்படுதல்

**பண்டாரி**
பெ. சொ., மீன்வகை

**பண்ணாடித்தல்**
தொ. பெ. சொ., வலையின் குறிப்பிட்ட பகுதியைத் தட்டிக் காயப் போடுதல்; அடிமை வேலை செய்தல்

**பண்ணிக்குச்சுகளி**
பெ. சொ., கடற்கரையோர உப்பங்கழிகளில் வளர்கின்ற தாவரம்; ஒருவகை மரம். இம்மரம் அடுப்பெரிக்க விறகாகவும், வீடு கட்ட மரமாகவும் பயன்படுகிறது.

**பண்ணுபோட்டுக் காவுதல்**

தொ. பெ. சொ. தொ., கடல் தொழிலுக்குப் புறப்படுஞ் சமயம் தனித்தனியாக இருக்கும் கட்டுமரங்களைக் கரையோரம் தூக்கிச் சென்று அணைத்துக் கட்டவேண்டும். மரம் பளுவாக இருப்பதால் இருவர் இருவராகத் தோளில் போட்டுத் தூக்கிச் செல்வர். இப்படித் தூக்கிச் செல்வதை 'பண்ணு போட்டுக் காவுதல்' என்பர். 'மரங்காவுதல்' என்றும் சொல்வர்.

**பண்ணையன்**

பெ.சொ., உப்பளத்தில் தொழில் புரிபவர்

**பத்தரன்பார்**

பெ. சொ. தொ., பத்து அரை அன் பார். பத்தரையன்—பத்தரன். $10\frac{1}{2}$(fathom) bank; Pattu—ten; arai—half ((J.H.)

**பத்தார்**

பெ. சொ., வள்ளத்தின் உள்ளுறுப்பு

**பத்துகடை**

பெ. சொ., வலை வகை

**பத்துகட்டல்**

தொ. பெ. தொ., வலையை அளவு பார்த்துச் சீர் செய்து கட்டுதல்

**பத்துவளி**

பெ. சொ., பற்றுவாரி. முதலாளியர் சங்குகுளித் தொழிலாளர்க்குத் தொழில் சீசன் இல்லாத சமயங்களில் முன் பணமாகக் கொடுக்கும் கடன் தொகை.

**பந்தயப்படகு**

பெ. சொ. தொ., படகுவகை. அகலம் குறைந்த நீளம் மிகுந்த அலங்காரமான படகு. Streamlined boat; Yacht

**பந்துகட்டல்**

பெ. சொ. தொ., கடல் அலைகளின் மீது மிகவும் அரிதாகப் பாம்புகள் ஆணும் பெண்ணுமாக இணைந்து பந்துபோலத் திரண்டு நீர்மேல் மிதத்தல்

**பரண்டாவலை**

பெ. சொ. தொ., வலைவகை. 'பரண்டா' எனும் மீன் பிடிக்கப் பயன்படும் வலை

**பரதர்**

பெ. சொ., நெய்தல் நில மக்கள் (க. த. அ.), (அ. சி.). வணிகர், கடலோடிகள் (அரும்பதவுரை)

**பரதவர்**

பெ. சொ., நெய்தல் நில மக்கள், நுளையர் (க.த.அ., அ.சி.)

**பரமந்தூாடி**

பெ. சொ., சங்கு குளிக்கும் குளியர்களுக்குச் சங்கு படிந்து கிடக்கும் சங்குப் படுகைகளைக் காட்டிக் கொடுப்பவர்.

**பரவர்**

பெ. சொ., ஒரு ஜாதியார், வலைஞர் (க.த.அ.). பரவர்— வேள்விக்குடிச் செப்பேட்டுச் சொல்லாட்சி.

**பரி**

பெ. சொ., மீன் பிடிக்கும் கருவி. ஈர்க்கு, கோரை, பிரம்பு போன்றவற்றால் ஆக்கப்பட்டது. வாய் அகன்றும் அடி மூடப் பட்டும் தூரிபோன்ற அமைப்பில் இருப்பது.

**பரிசல்**

பெ. சொ., ஆளேற்றிச் செல்லும் தட்டைப் படகு; Coracle; Wherry

**பருமணி**

பெ. சொ. தொ., பெரிய உப்பு

**பருமல்**

பெ. சொ., படகில் பாயுடன் பிணைக்கப்பட்ட கம்பி. கப்பல் பாய், கட்டு மரம் (த.மொ.அ.)

**பருமை**

பெ. சொ., பாய்மேல் கட்டப்படும் மூங்கில் தடி

**பருவலை**

பெ. சொ. தொ., வலைவகை

**பருவாட்டில் வருதல்**

தொ. பெ. சொ. தொ., மீன் 'பொச பொச' வென்று கடலின் மேல் வெளி வருதல்

**பருவாளி**

பெ. சொ., தோணியின் உட்கருவி

**பரிலா**

பெ. சொ., மீன் பெயர். கோலா மீனை உணவாக உட்கொள்ளும் இயல்பின. 'தடிகாரன்' என்பது இதனைச் சுட்டும் குழூஉக்குறி. கோலா மீனுக்குப் பின்னாலேயே சுற்றும். காண்க—தடிகாரன்

**பரிவதுராச குலம்**

பெ. சொ. தொ., பரதவர் பொதுப் பெயர்

**பலகறை**

பெ. சொ., சங்குவகை

**பலவனாக்கு**

பெ. சொ., பலவை நாக்கு (பலகை நாக்கு?) துடுப்பு அல்லது தண்டு

**பலாச் சுறா**

பெ. சொ., சுறாவகை. மிகவும் கொடியது. இதற்குப் பாயும் உடல் வாகு மிகுதி. கலத்தின் அருகில் இது தென்பட்டாலே பரதவர் மிகவும் எச்சரிக்கை அடைவர். நல்ல உயர்சாதி நாய்கள் பாய்ந்து கவ்வுவது போல இது மனிதனைப் பாய்ந்து கவ்வும். மனிதரை உணவாகக் கொள்வதில் விருப்பம் மிகவுடைய மீன் இது.

**பல் சக்கரம்**

பெ. சொ. தொ., லாஞ்சிலிருந்து வலையை இளக்குவதற்கும் வாங்குவதற்கும் உதவும் பல் சக்கரம்

**பல்பப் பூச்சி**

பெ. சொ. தொ., சங்கு வகை. மிகச் சிறிய சங்கு

**பல்வாயன்**

பெ. சொ. தொ., சங்குவகை. சங்கின் உள் அமைப்புகள் பல் போன்று அமைந்திருப்பதால் உண்டான பெயர்

**பல்ஜிப்சம்**

பெ. சொ. தொ., நன்றாக விளைந்த ஜிப்ஸம். உப்பளத் தளத்தினுள் நீண்ட கூர்மையான பற்களைக் கொண்டு ஆழப் பதிந்தது. இலேசில் பிடுங்க முடியாதது.

**பவழம்**

பெ. சொ. பவழம், பவளம்—ஒரு பொருள் குறிப்பன. இது கடலில் பாறைகளைத் தமக்கு இடமாகக் கொண்ட பூச்சிகளின் உடற்கவசம். இது வெப்பமான பிரதேசங்

களின் கடற்பகுதிகளில் உண்டு. இது சுண்ணாம்புச் சத்தைக் கொண்டது. இப்பூச்சிகள் பவழத்தைக் கவச மாகக் கொண்டு தலையில் பல மலர்போல் உறுப்புகளை பெற்றிருக்கிறது. தனக்கு அபாயம் நேருகிறபோது கைகளை உள்ளிழுத்துக் கொள்கின்றன. இவை பல வகை யாகப் புற்றுகளாகவும் பூண்டுகள் போலவும் ஊர்ந்தும் இருந்தும் வளர்கின்றன. (அ. சி.)

**பவளம்**
பெ. சொ., பார்க்க—பவழம். Coral

**பவளச் சுண்ணாம்புக் கல்**
பெ. சொ. தொ., நுரைகல், சுழி எனும் பெயர்களுமுண்டு. சுண்ணாம்புத் தயாரிப்புக்கு உதவும் மூலப்பொருள்

**பவளச் சுண்ணாம்புப் பாறை**
பெ. சொ. தொ., பவளச் சுண்ணாம்பு பெரிய பாறைபோல் ஆகியிருத்தல். Coral rock

**பவளத்திட்டு**
பெ. சொ. தொ., பவளம்—கடல் வாழ் உயிரினமான ஒரு பூச்சியின் உடற்கவசம். இக்கவசங்களின் தொகுதி புற்று களாகவும் பாறைகளாகவும் திட்டுகளாகவும் வளர்ந்திருத் தல். Atoll

**பவளத்தீவு**
பெ. சொ. தொ., பவளப்பாறைகளால் ஆன தீவு

**பவளப்பாறைத் தொடர்**
பெ. சொ. தொ., பவளப் பாறைகள் நீண்ட தொடராக நீண்டிருப்பது. Coral reef

**பவளவேர்**
பெ. சொ. தொ., பவளத்தின் வேர்ப் பகுதி. Coral wort

**பறச்சேரிபத்தூர்**
பெ. சொ. தொ., Paracherry Pathoor; Paracherry Pattu Par; 'Pathoor' appears to be a misrendering for 'Pattu Par' the depth being 10 fathoms. Pathoor may also signify the 10 villages; but the context does not support this reading; 10 fathom bank off the Paraiah village (J.H.)

**பறச்சேரிபார்**

பெ. சொ. தொ., Paracherry Par; Cheri—village; Paraiyan, Paraiah—a drummer; the bank off the Paraiah village (J. H.)

**பறி**

பெ. சொ., மீன் வைப்பதற்குப் பயன்படுத்தும் பனை ஓலையால் செய்யப்பட்ட கூடை

**பற்று வடம்**

பெ. சொ. தொ., மரக்கலத்தின் சிறிய பாய் கட்டப்பட்டிருக்கும் கயிறு. Lanyard

**பனாத்துளை**

பெ. சொ. தொ., மீன் வகை. Aragyrops Spinifer (Long spined red bream)

**பனாவளர்**

பெ. சொ., மீன் பெயர். இதைக் காண்பது அபசகுனம் என்பர் பரதவர். இது வலையிலோ வள்ளத்திலோ படாமல் இருக்கக் கிருத்துவப் பரதவர் மரியன்னைக்கும் இந்துப் பரதவர் கன்னிமாருக்கும் பூசை போடுவர். இது திமிங்கல வகையைச் சேர்ந்ததாகும். கானாங் கெளுத்தி, சூடை மீன்களின் மீது கொண்ட ஆசையால் இது கரைப் பகுதிக்கு வரும். இது வருவது தீவு நகர்வது போலக் காணப்படும். இதற்குப் பரதவர் பெரிதும் அஞ்சுவர். 'கன்னா' எனப்படும் சிறு தோணிகளைக் கூடக் கடித்துத் துண்டாக்கி விடும் வலிமையுடையது. இதனுடன் கலம் மோதினால் பாய் கிழிந்து அறுந்து உயிருக்கு ஆபத்து உண்டாகும். இது உணவு வேட்டையாடுதல் தந்திரமான செயலாகும். வாயை அங்காந்து திறந்து கொண்டு தாடையைக் கடல் நீர் மட்டத்தில் வைத்திருக்கும். நீரோடு ஓடி வரும் மீன்கள் அபாயத்தை உணர்ந்து கொள்ளாமல் வாயில் வந்து விழ, இது வாயை மூடிக்கொண்டு உட்புகுந்த நீரைக் காது வழியாக வெளியே பனைமர உயரத்திற்குப் பீய்ச்சி அடித்து விட்டு மீன்களை விழுங்கி விடும்.

**பனைமீன்**

பெ. சொ. தொ., மீன்வகை

**பனையேறிக் கெண்டை**
பெ.சொ.தொ., மீன் வகை. Anabasscandens; Climbing perch

**பன்னா**
பெ. சொ., மீன்வகை. Epinephelus miniatus

**பன்னாமீன்**
பெ. சொ. தொ., மீன்வகை. பன்னா, பன்னா மீன்—ஒரே மீன்

**பாகம்**
பெ. சொ., ஆங்கிலப் பதம். 'பாதம்' எனும் உச்சரிப்பின் பேச்சு வழக்கு. Fathom

**பாங்காக்கெண்டை**
பெ. சொ. தொ., மீன் வகை. Bangkok Strair

**பாசி**
பெ. சொ., நீர்த்தாவரம். Alga

**பாசித்திரள்**
பெ. சொ. தொ., பாசிகளின் தொகுப்பு. Algal bloom

**பாசிப் பார்**
பெ. சொ. தொ., Sea-weed bank; pasi—sea-weed; literally moss (J. H.)

**பாச்ச வலை**
பெ. சொ. தொ., வலைவகை. மீன்கள் பாய்ந்து சென்று வலையில் மாட்டிக் கொள்வதால் பாய்ச்சல் வலை என்று பெயர் பெற்றுப் பின் பாச்சவலை என மருவிற்று. Bottom net. Trammel net

**பாஜம்**
பெ. சொ., பாதம் எனும் ஆங்கிலச் சொல்லின் மறு வடிவம். பாதம்-பாவம்-பாகம்-பாஜம். கடலாழத்தைக் கணக்கிடப் பயன்படும் நீட்டலளவை. ஏறக்குறைய ஆறு அடி நீளம் கொண்டது ஒரு பாதம். Fathom

**பாஞ்சல் திருக்கை**
பெ. சொ. தொ., மீன் வகை. Aetomylus maoulatus (Nottled eagle Ray) Aetomylus nichofii (Eagle Ray)

**பாட்டா பாட்டா**

முறைப்பெயர் விளி. கடல் தொழிலாளர்க்குக் காற்று முக்கிய மானது. காற்று ஓட்டம் இல்லாமல் கமுக்கமாக இருந்தால் மிகவும் கடினம். கலத்தை இயக்க உடல் வலுவை மட்டுமே நம்பியாக வேண்டும். இது சிரமமானதுங்கூட. காற்று அடித்தால் பாய்விரித்து எளிதாகக் கலம் ஓட்டலாம். காற்றில்லாச் சூழ்நிலையில் பரதவர் காற்றை 'பாட்டா, பாட்டா' என முறைச் சொல்லிக் கூப்பிடுவர். சீழ்க்கை ஒலி எழுப்புவர். இறப்பாக் கட்டையால் தண்ணீர் முகந்து பாயில் வாரி இறைப்பர். இப்படிச் செய்தால் காற்று வீசும் என்பது அவர்தம் நம்பிக்கை.

**பாட்டை பாட்டையாகப் பெய்தல்**

தொ. பெ. சொ. தொ., கடற்பரப்பின் மீது இடம் விட்டு விட்டு மழை பெய்தல்

**பாணி அடித்தல்**

தொ. பெ. தொ., கடலடியில் மீன் மண்ணைப் பறித்துத் தங்குதல்

**பாத்தி**

பெ. சொ., உப்பளத்தில் உப்பு விளையும் நிலம்

**பாத்தி கொதிப்பேறுதல்**

தொ. பெ. சொ. தொ., கடுமையான வெயிலால் அளவுக்கு அதிகமாக உப்பளம் கொதிப்புடைதல். இதனால் உப்பு சிறு சிறு உப்பாக விளையும். உற்பத்தி குறையும்.

**பாத்தி சீவுதல்**

தொ. பெ. சொ. தொ., அறுத்து வாங்குதல்

**பாப்பர முஞ்சன்**

பெ. சொ., மீன்வகை

**பாம்பன் கரைபார்**

பெ. சொ. தொ., Pambankarai Par; karai—shore; Par—rock; and by extension of meaning rocky back (J.H.)

**பாம்புவாய் நாற்றம்**

பெ. சொ. தொ., கடல் வெளியில் வீசும் சகிக்க முடியாத துர்நாற்றம். பெருமீன்களை உண்டுவிட்டு பாம்பு கடல் மட்டத்திற்கு வந்து காற்று வாக்கில் வாயைத் திறப்பதால் இந்நாற்றம் உண்டாகிறது என்பர் பரதவர்.

**பாயாசாரி**

பெ. சொ., பாய் ஆசாரி. பச்சுவாடா போன்ற கலங்களில் பயன்படுகின்ற பெரிய பாய்களைத் தைத்தல் சிரமமான அரிய தொழிலாகும். இந்தப் பாய்களைத் தைப்பவர் பாயாசாரி எனப்படுவர். தூத்துக்குடிக்குச் சமீபத்திலுள்ள முகமதியர் கள் பாய் தைப்பதில் தேர்ச்சி உள்ளவர்கள். காரணம் இவர்கள் முற்காலத்தில் மரக்கலராயராக இருந்து பெற்றத் தொழில் அனுபவமாகும். சிறு பாய்கள் எனில் பரதவரே தயாரித்துக் கொள்வர்.

**பாய்**

பெ. சொ., வள்ளம், தோணி ஆகியன இயங்க உதவும் பாய். இது இருவகைப்படும். பெரும்பாய், சிறுபாய் என்பன அவை. பாய்முரட்டுத் துணியால் ஆக்கப்படுகிறது. காற்றின் வேகத்தையும் வலிவையும் பயன்படுத்தி வள்ளத்தை நீரில் செலுத்த உபயோகப்படும் கருவி. Sail

**பாய் ஓட்டில் ஓடல்**

தொ. பெ. சொ. தொ., அளவாகக் காற்று வீசும் போது பாயை விரித்துச் சரியான திசையில் கட்டிவிட்டால் கலம் நீரைக் கிழித்துக் கொண்டு வேகமாக ஓடும். இவ்வோட்டத் தினை 'பாய் ஓட்டில் ஓடுதல்' என்பர்.

**பாய்நாட்டி ஓடுதல்**

தொ. பெ. சொ. தொ., மேல்குறிப்பு காண்க.

**பாய்பறி மிதித்தல்**

குழுஉக்குறி. கணவன் - மனைவியாக உடலுறவு கொள்ளுதல்

**பாய்மர ஆப்பு**

பெ. சொ. தொ., பாய்மரத்தை வள்ளத்தோடு இணைக்கும் சிறு மரத்துண்டு. Cleat

**பாய்மர ஓரக்கயிறு**

பெ. சொ. தொ., பாய்மரத்தில் உள்ள பாயின் அகல வாட்டத்தை விறைப்பாக்கிக் கட்டும் கயிறு. Bolt rope

**பாய்மரக்கப்பி**

பெ. சொ. தொ., பாய்மரத்தின் உச்சிக்குப் பாயை ஏற்ற வும் இறக்கவும் பயன்படும் கப்பி. Bollock

**பாய்மரக்கயிறு**
பெ.சொ.தொ., பாய் மரத்தின் உச்சிக்குப் பாயை ஏற்றவும் இறக்கவும் பயன்படும் கயிறு. Bolt rope

**பாய்மரத்தடி**
பெ. சொ. தொ., பாய்கட்டப் பயன்படும் தடி.

**பாய்மரத்துவாரி**
பெ. சொ. தொ., வள்ளம் அல்லது தோணியில் நடப்பட் டிருக்கும் பாய்மரத்தைத் தாங்கி நிற்கும் பலகை. பாய்மரம் அத்து வாரி. வாரி-பலகை. அத்து-தைத்தல், இசைத்தல். பாய்மரம் குழிபோன்ற அமைப்பில் நிற்க, இதனை நெருக்கித் தைத்ததுபோல் இருபலகைகள் பக்கத்துக்கு ஒன்றாக வள்ளத்தின் குறுக்குவாட்டில் அமைந்திருக்கும். பாய் மரம் சாயாமல் நேராக நிற்க இவ்வாரி உதவு கிறது.

**பாய்மர மேல் பகுதி**
பெ. சொ. தொ., பாய்மரத்தின் உச்சி பாகம். Aloft

**பாய்மரம்**
பெ. சொ. தொ., வள்ளம் முதலியன காற்றின் வலிமை யாலும் பரதவர் உடல் உழைப்பாலும் கடலில் இயங்குவன. கித்தான் போன்ற வலுவான விரிந்தகன்ற பாய் மீது மோதும் காற்றின் வன்மையைப் பயன்படுத்திக் கடலூர் தியை இயக்குகின்றனர். இத்துணை இன்றியமையாததாகிய பாயைத் தாங்கும் பாய் மரம்.

**பாய்மரவாரி**
பெ. சொ. தொ., பார்க்க-பாய் மரத்துவாரி

**பாரக்கலவா**
பெ. சொ., மீன்வகை.

**பார்**[1]
பெ. சொ., பாறை—பாரை எனும் சொற்களின் குறுக்கம். சிலவிடங்களில் 'கரை' எனும் பொருளும் தரும் சொல். தென் தமிழ்நாட்டில் சுந்தர பாண்டியன் பட்டினம் முதல் குமரி வரை 65 பார்கள் உள்ளன. (அ) வடக்கு அல்லது கீழக்கரைப் பிரிவு—பாம்பன்கரை முதல் வேம்பார் பெரிய பார் வரை—11 பார்கள்; (ஆ) மத்திய அல்லது தூத்துக் குடிப் பிரிவு—வைப்பார் பெரியபார் முதல் சுருக்கு

ஒன்பதுபார் வரை—42 பார்கள்; (இ) தெற்கு அல்லது குமரிப் பிரிவு—மணப்பாடு பெரியபார் முதல் உவரி அந்தோணியார் கோவில் வள்ளவிளைபார் வரை—12 பார்கள் (Madras Fisheries Bulletin Vol. XVI)

**பார்2**

பெ. சொ., 'பாறை-பாரை' எனும் சொல்லின் குறுக்கம், கல்குவியல். கல்மலை போன்றவற்றைக் குறிக்கும். பரி பாடல் (5), திருமுருகாற்றுப்படை (45), பாகவதம் (5, கருத்தமன். 50) ஆகிய நூல்களில் ஆளப்பட்ட சொல்; பரதவரிடையில் தினசரி பயன்படும் வழக்காற்றுச் சொல்; கடலில் வலை வீசும்போது பார்மீது வலைபடாமல் பார்த்துக் கொள்வர். பாரில் வலை மாட்டிக் கொண்டால் வலை கிழிந்து ஆயிரக் கணக்கான ரூபாய் இழப்பு ஏற்படும்.

**பார் குண்டஞ்சன் பார்**

பெ. சொ. தொ., Par Kundanjan Par

**பார் தூண்டி(ல்)**

பெ. சொ. தொ., கடற் பார்களுக்குச் சென்று மீன் பிடிக்கப் பயன்படுத்தும் தூண்டில்

**பார் தோணி**

பெ. சொ. தொ., கடற்பார் பக்கத்தில் சென்று மீன் பிடிக்கப் பயன்படுத்தும் தோணி

**பார் மரம்**

பெ. சொ. தொ., ஆழ்கடலில் பெரும்பாறைகள் மலை போல் இருக்கும். நைலான் வலையோடு பார் இருக்கும் பகுதிக்குச் சென்று பாரின் மேல் பகுதியிலோ அல்லது பக்க வாட்டிலோ வலையை மிகக் கவனத்துடன் இளக்கு வர். குறிப்பிட்ட நேரத்தில் பாரின் உட்பகுதியில் இருந்து மீன்கள் வெளியே வர அவை வலையில் அகப்பட்டுக் கொள்ளும். மீன்பாடு கணிசமாகக் கிடைக்கும். இத்தொழி லுக்குப் பயன்படும் மரம் (கட்டுமரம் முதலான கலம்) 'பார் மரம்' எனப்படும்.

**பால்கெண்டை**

பெ. சொ. தொ., மீன் வகை, Chanos Salmoneus

**பால் சங்கு**

பெ. சொ. தொ., சங்குவகை. மிகுந்த வெண்ணிறமுடைய சங்கு

**பால் சுறா**

பெ. சொ. தொ., மீன்வகை. (Small Shark) Carcharhinus laticaudus

**பாவம்**

பெ. சொ., பார்க்க—பாதம், பாகம். சங்கு குளிப்பு, முத்துக்குளிப்பில் மீனவர்களால் பயன்படுத்தப்படும் சொல். சங்குளி 14 பாவத்திலிருந்து 20 பாவம் வரையிலான ஆழத்தில் நடைபெறும் என்பர்.

**பாவொருத்தல்**

தொ. பெ. சொ. தொ., இழைகளைப் பிரித்து நூல் ஆக்குதல்

**பாளை[1]**

பெ. சொ., தென்னை, பனை ஆகியவற்றின் பாளை. மீன்பிடிக்க உதவுவது.

**பாளை[2]**

பெ. சொ., இறப்பாக் கட்டைபோலப் பயன்படும் கருவி.

**பாறை[1]**

பெ. சொ., கற்பாறை

**பாறை[2]**

பெ. சொ., மீன்வகை

**பிச்சில்வாரி**

பெ. சொ. தொ., வள்ளத்தில் கட்டப்பட்டிருக்கும் சிறிய பாய்மரத்தைத் தாங்கி நிற்கும் பலகை. இதற்கு ஆஞ்சான் வாரி எனும் பெயரும் உண்டு.

**பிந்தலை**

பெ. சொ., தோணியின் உள்ளுறுப்பு

**பிரஷ்**

பெ. சொ., ஆங்கிலம். துடைப்பான் அல்லது தூரிகை. Brush

**பிள்ளை**

பெ. சொ., இந்துப் பரதவருள் ஒரு பிரிவினர்.

**பிறால்**

பெ.சொ., பார் என்னும் சொல்லுக்கு எதிர்ச் சொல். பார்—பாறை, கரை. பிறால்—சிறுமண், மணல், சேறு ஆகியன வற்றின் கலவை. சங்கு நிலம், சங்குப் படுகை ((J.H.)

**பீலி**

பெ. சொ., 'துவி'யின் மறுபெயர். காண்க—துவி

**பீலிக்கணவா(ய்)**

பெ.சொ., கணவா மீனின் வகை. கரு நிற மையைப் பீய்ச்சி அடித்து நீர்ப் பரப்பைக் கருப்பாக்கி மறைந்துவிடும் தந்திர முள்ளது. இது தலைப் பக்கமும் ஓடும்; வால் பக்கமும் ஓடும். அதாவது முன்னோக்கியும் ஓடும். பின்னோக்கியும் ஓடும். இதில் சிறப்பு என்னவெனில் பின்னோக்கி வால் பக்க மாக மிக விரைந்து ஓடக்கூடிய இயல்புடையது இது.

**பீலிக்காரன்**

பெ. சொ., சுறாமீனின் மறுபெயர்; குழூஉக்குறி. பீலி (துவி) உடைய மீன் ஆதலால் பெற்ற பெயர் இது.

**புசல் காத்து**

பெ. சொ. தொ., புயல் காற்று எனும் சொற்களின் வழக் காற்று வடிவம். பொசக்காத்து எனவும் வழங்கப்படும் காற்று

**புசல் மையம்**

பெ. சொ. தொ., புயல் மையம். பெருங்காற்று மையம் கொண்டிருக்கும் இடம். Storm Centre

**புடிகம்பு**

பெ. சொ. தொ., தோணி அல்லது வள்ளத்தின் துணை உறுப்பு

**புண்டுவிரிஞ்சான்**

பெ. சொ. தொ., மீன்வகை. Dussumieria acutta; Dussumieria hasseleti

**புண்டு விரிஞ்சான்பார்**

பெ. சொ. தொ.,Pundu Virinjan Par; Bank abounding Dussumieria accutta fish (J. H.)

**புதுத்தண்ணிவிட்டு அலசுதல்**

தொ. பெ. சொ. தொ., பாத்தியிலிருந்து உப்பு வாரிய பின்னர் பழைய நீரைப் பாத்தியிலிருந்து கழித்து விட்டுப் புதுநீரால் சுத்தமாக அலசுதல்

**புதுபார்**

பெ. சொ. தொ., Puthu Par; Puthu—new; New Bank (J.H.)

**புதைஞ்சிட்டுப்படுது**

தொ.பெ.சொ.தொ., மணலில் புதைந்திருந்த மீன் வலைப் பட்டு அகப்பட்டுக் கொள்ளுதல்

**புயல்**

பெ. சொ., கடுங்காற்று. Gale

**புரோசினா**

பெ. சொ., மீன்வகை (அ.சி.)

**புலிச்சுறா**

பெ. சொ. தொ., சுறாவகை. இந்தப் புலிச் சுறாமீன் ஓரே சமயத்தில் 60 குட்டிகளைப் போடும் இயல்பினது. இதில் சிறப்பு என்னவென்றால் இந்த 60 குட்டிகளும் உயிருடன் இருக்கும்

**புழுக்குத் தட்டம்**

பெ. சொ. தொ., வள்ளத்தில் கடல் தொழிலுக்காகச் செல் லும் பரதவர் ஓரிரு நாட்கள் நடுக்கடலில் தங்குவர். அங்கு வைத்துப் புழுங்குவதற்காக ஒரு மண் பாத்திரத்தை உடன் கொண்டு செல்வர். சமைக்கவும் உணவு பரிமாறவும் இது பயன்படும். புழுங்கும் தட்டு—புழுக்குத் தட்டு. தட்டு—தட்டம். Casserole

**புளிபூண்டுபார்**

பெ. சொ. தொ., Puli Pundu Par; Puli—tamarind; Pundu-bush; Bank having a tamarind bush as land mark (J. H.)

**புளுக்கை**

பெ. சொ., முறையாக மணம் செய்யாத வெளி நாட்டார்க்கும் பரதவர்க்கும் பிறந்தவர்; வசவுச் சொல். தொழிலின்போது ஏசிக்கொள்ளப் பயன்படுத்தும் வார்த்தை.

**புளோட்**

பெ. சொ., ஆங்கிலம். வலையைக் கடலில் இறக்கியபின் வலைக்கு அடையாளமாக கடல்பரப்பில் மிதக்கும் மிதவை. ரப்பரால் ஆனது. மிதத்தல் காரணமாகப் பெற்ற பெயர். Float

**புள்பா(ய்)ச்சல்**

தொ. பெ. சொ. தொ., கடற் பரப்பின்மேல் மீனைக் கொத்தித் தின்பதற்காகப் பாயும் பறவைகளின் பாய்ச்சல்

**புள்ளிக்கழி**
பெ. சொ., தோணியின் குறுக்காகக் கட்டப்படும் கழி

**புள்ளிக் கலவா**
பெ. சொ., மீன்வகை. Epinephelus merra

**புள்ளிக் கெண்டை**
பெ. சொ., மீன்வகை. Barbus ticto

**புள்ளிக் கெளடா**
பெ. சொ. தொ., சங்கு வகை

**புள்ளிப்பாரை**
பெ. சொ. தொ., மீன்வகை. Caranx affinis

**புள்ளையார் சங்கு**
பெ. சொ. தொ., சங்குவகை. பிள்ளையார் (யானைமுகன்) போன்ற அமைப்பில் காணப்படும் சங்கு. பிள்ளையார்—புள்ளையார்

**புள்ளை வாய்க்கால்**
பெ. சொ. தொ., தொட்டானிலிருந்து பாத்திக்குத் தண்ணீர் வரும் கால்வாய் (உப்பள அமைப்பு : 1. தெப்பம்; 2. தொட்டான்; 3. பாத்தி)

**புறாமுட்டைச் சங்கு**
பெ. சொ. தொ., சங்கு வகை. புறாவின் முட்டையைப் போன்ற அளவும் அமைப்பும் உடைய சங்காதலால் ஏற்பட்ட பெயர்.

**புன்னைக்காயல் செல்தான் பார்**
பெ. சொ. தொ., Punnaikayal Seltan Par, Pinnakayal (Anglice) Pinnacoil; the name of a large parava settlement on the Tinnevelly coast. (J.H.)

**பூங்கரை**
பெ. சொ., கடலில் மழைநீர் விழும்போது கடலின் உப்பு நீரும் நன்னீரும் கலப்பதால் உண்டாகும் ஒரு வகையான நுரை. இந்நுரையின் பெயர் பூங்கரை. ஆழ்கடல் மீன்கள் இந்நுரையின் சுவை விரும்பி கடல் மட்டத்திற்கு வந்து உண்ணும் வழக்கமுடையன.

**பூதாரி**
பெ. சொ., வள்ளம், தோணி, லாஞ்சுகளில் சரக்கு வைக்கும் இடம்

**பூரைப் படுதல்**

தொ. பெ. சொ. தொ., கடலில் வலை இளக்கும் போதும் பற்றும் போதும் பல காரணங்களால் வலை கிழிந்துவிடும். பெருமீன்கள் வலையைக் கிழிக்கலாம் அல்லது பாரில் வலை சிக்கி அறுந்து போகலாம். இவ்வாறு வலை கிழிவதற்கு 'பூரைப் படுதல்' என்பர். 'வலைப் பொத்தல்' எனும் தொடரும் இதனைக் குறிப்பதே ஆகும். இந்தக் கிழிசல்களை அன்றன்றைக்குப் 'பொத்துகின்ற' பரதவர் பொறுப்பு மிக்கவர். ஒரு வாரம்வரை இப்பூரைகளைப் பொத்தாமல் விட்டுவிட்டால் வலை பழையதாகிப் பயனற்றுப் போய்விடும்.

**பெட்டி**

பெ. சொ., கூடை

**பெட்ரோல் போட்**

பெ. சொ. தொ., ஆங்கிலச் சொற்கள். இது பெட்ரோலை எரிபொருளாகக் கொண்டு இயங்குப். Petrol boat

**பெரியதலை செம்மண்தரைப்பார்**

பெ. சொ. தொ., Periya Talai Semman Tharai Par; Bank lying near the great head (land) of red earth (J.H.)

**பெரியபடகு**

பெ. சொ. தொ., அளவில் பெரிய மரக்கலம். Vessel

**பெரிய பாய்**

பெ. சொ. தொ., தோணியில் பயன்படுத்துகிற மிகப்பெரிய பாய்

**பெரியமலை புடித்தபார்**

பெ. சொ. தொ., Periyamalai Piditha Par; Bank touching the great hill (J.H.)

**பெரியவலை**

பெ. சொ. தொ., வலைவகை; வலைகளுள் இது பெரியது; இதன்மூலம் தொழில் செய்ய 20 அல்லது 30 பேர் தேவை; 2 மைல் நீளமுடையது; இளக்கிய வலையைப் பற்றி இழுக்க இரு புறங்களிலும் பெரியவர்களும் சிறியவர்களும் சேர்ந்திருப்பர்; வலைக்கண் 2 அடி அகலம் கொண்டது. நீண்ட கண்களை உடைய தாமம், 1 அங்குல அகலக் கண்களை

யுடைய மேலாவலை, சிறு கண்களையுடைய பை போன்ற மடிவலை ஆகியன இதனுடன் இணைந்திருக்கும்; ஒரு நாளைக்கு இவ்வலையைப் பயன்படுத்தி 2 அல்லது 3 முறை தொழில் செய்வர்; இதனை முதல் பாடு, இரண்டாம்பாடு, மூன்றாம்பாடு என்பர்.

**பெரும்பை வலை**
பெ. சொ. தொ., வலைவகை. பெரிய பை போன்ற அமைப்புடையது. Seem trawl

**பெர்ணாந்து பார்**
பெ. சொ. தொ., Fernando's bank; probably first found by a fisherman of this name ((J.H.)

**பெர்த்**
பெ. சொ. தொ., ஆங்கிலம். நங்கூரம் பாய்ச்சி கலங்கள் நிற்குமிடம். Berth

**பெறங்குவலை**
பெ. சொ. தொ., பிறங்கு வலை—பெறங்குவலை (அ.சி.) வலைவகை

**பேத்தை**
பெ. சொ., மீன்வகை.

**பேந்துவலை**
பெ. சொ. தொ., வலைவகை

**பே(ய்)க் கணவா**
பெ.சொ., கணவா மீனின் வகை. வலைப்பட்டு கலத்திற்கு வந்தபோதும் சாகாது. துண்டுதடியால் அடித்தால்தான் சாகும்.

**பேய்ச்சாளை**
பெ.சொ.தொ., மீன்வகை. பேய்சாளை. Clupea brachyosoma

**பேரல்**
பெ. சொ., ஆங்கிலம். பீப்பாய். Barrel

**பைக் வலை**
பெ. சொ. தொ., வலைவகை. பைக்—ஆங்கிலச் சொல். இறக்கைகளைக் கொண்ட வளையம் போன்ற வலைப் பொறி. Fyke net

**பைட்டி**
பெ. சொ. வலைக்கண்கள் 'தெளிவா'க இல்லாமல் (காண்க-தெளிவு) இறுக்கமாக இருத்தல்

**பைலண்டா வலை**
பெ. சொ., வலை வகை

**பைவலை**
பெ. சொ. தொ., வலைவகை. பைபோன்ற அமைப் புடையது. Dip net

**பொசக் காத்து**
பெ. சொ. தொ., பார்க்க—புயல் காற்று

**பொத்தல்**
பெ. சொ., வலை ஓட்டை

**பொடிமணி**
பெ. சொ. தொ., சிறிய உப்பு

**பொடிவலை**
பெ. சொ. தொ., வலை வகை

**பொம்மீன்**
பெ. சொ. தொ., மீன்வகை. Barbus tor

**பொரிவிலாங்கு**
பெ. சொ. தொ., மீன்வகை. Bengalensis

**பொருவா**
பெ. சொ., மீன் வகை. Anchoviella bataviensis, Anchoviella heteroloba, Anchoviella baganensis, Anchoviella Zollingeri, Anchoviella Commersonii, Anchoviella Indica, Anchoviella tri

**பொற பிடிப்பவர்**
வி. அ. பெ. தொ., வீசுவலை அல்லது வீச்சுவலை வீசும் போது முன்னோக்கி ஓடிக் கொண்டிருக்கும் தோணியைப் பின் பக்கமாகத் தாவிப் பிடிப்பவர் (புறம் பிடிப்பவர்) 'பொற பிடிப்பவர்' எனப்படுவார்.

**போத்தல்**
பெ. சொ., ஒலி அமைப்பால் தமிழ்ப்படுத்தப்பட்ட ஆங்கிலச் சொல். பெருங்குப்பி. Bottle

**போயா**

பெ. சொ., ஆங்கிலம். அலுமினியத்தாலான உள்ளீடற்ற, வெற்றிடமான மிதக்கும் உருண்டை. வலையுடன் பிணைக்கப்பட்டது. கடலில் இளக்கப்பட்ட வலை மிதப்பதற்கு அடையாளமாக இது பயன்படுகிறது. Buoy; a floating object

**போயாக்கட்டை**

பெ. சொ., வலையின் மேற்புறம் கட்டப்பட்டிருக்கும் மிதப்புக் கட்டை. போயா— ஆங்கிலச் சொல்

**போரைறால்**

பெ. சொ., இறால் வகை

**போலி மீன் இரை**

பெ. சொ. தொ., தூண்டில் மீன் பிடிப்பவர் தூண்டில் கொக்கியில் உண்மையான சிறு மீனையோ அல்லது மண் புழுவையோ குத்தி கடலில் வீசுவர். ஆனால் இலங்கையில் பிளாஸ்டிக் மீனை தூண்டில் கொக்கியில் இணைத்து பெரு மீன் பிடிப்பது வழக்கம். இலங்கைக்கும் செந்தமிழ் நாட்டுக் கடற்கரைக்கும் நேரடித் தொடர்பு உண்டாதலால் அவ் வழக்கம் இங்கும் பரவி உள்ளது. Jig

**மச்சக்கெண்டை**

பெ. சொ. தொ., மீன்வகை. Barbus filamentosus

**மச்சம்**

பெ. சொ., மீன்

**மச்சவாரை**

பெ. சொ. தொ., மீன் வகை

**மச்சான் பங்கு**

பெ. சொ. தொ., உறவுச் சடங்கு. எச்சமயத்தைச் சார்ந்த பரதவராயிருந்தாலும் கடற்தொழில் மேற்கொண்டு கலத்தில் திருச்செந்தூர்க் கோயிலைக் கடந்து செல்லும்போது மறக்காமல் தேங்காய் உடைத்து முருகனுக்கு வழிபாடு செய்வர். தெய்வயானை பரதவர் குலப் பெண்ணாதலால் முருகன் மச்சான் முறை. 'எது எப்படி இருந்தாலும் மச்சானுக்குரிய பங்கைச் செலுத்தி விடுவோம்' என்பர் பரதவர்.

**மச்சுவா**

பெ. சொ., ஆபத்துக்காலங்களில் பயன்படுத்திக் கொள்வதற்காகத் தோணியில் வைத்திருக்கும் சிறு படகு

**மச்சுவாடா**
பெ. சொ., பெரிய தோணி; 25 அடி அகலம் 110 அடி நீளம் கொண்டது; 3 பெரிய பாய் மரங்களும் உடையது. காற்றின் வேகம் குறையக்குறைய பாயின் எண்ணிக்கை மிகும்; காற்றின் வேகம் கூடக்கூட பாயின் எண்ணிக்கை குறையும். சரக்கு ஏற்றிப் பறிக்க இப் பெருந்தோணி பயன் படுத்தப்படுகிறது.

**மட**
பெ. சொ., மடை, கடலில் சேறாக உள்ள பகுதி

**மடக்கு**
பெ. சொ., பிளாஸ்டிக் நூல்

**மடக்கு மண்டா**
பெ. சொ. தொ., மீன்பிடி கருவி

**மடக்கு மிதி**
பெ. சொ. தொ., அளத் தயாரிப்பில் அடுக்கு மிதிக்குப் பின்னால் கால் தடங்களை அழிப்பதற்காகச் செய்யும் மிதிப்பு

**மடங்குக் கட்டல்**
தொ. பெ. சொ. தொ., வலையை அளவாகக் கட்டுதல்

**மடவை[1]**
பெ. சொ., துடுப்பு

**மடவை[2]**
பெ. சொ., மீன்வகை

**மடவை சுறா**
பெ. சொ. தொ., மீன்வகை. Carcharhinus Sorrah

**மடி எடுத்தல்**
தொ. பெ. சொ. தொ., வலையில் அகப்பட்ட மீன்களை மடியிலிருந்து எடுத்தல்

**மடிகட்டல்**
தொ. பெ. சொ. தொ., கடற்கரைக்கு வந்துவிட்ட பெரு வலையின் வாயை மீன்கள் ஓடாதிருக்கும்படிக் கட்டுதல்

**மடிகட்டை**
பெ. சொ. தொ., பெரிய வளையில் உள்ள மடியின் வாயை அகற்றிப் பிடிக்கக் கட்டப் பட்டிருக்கும் கட்டை

**மடிகம்பு**
பெ. சொ தொ., வலைக்கம்பு

**மடிக்கயிறு**
பெ. சொ. தொ., பரதவர் பயன்படுத்தும் நீண்ட கயிறு. Cod en rop

**மடிகாரன்**
பெ. சொ., நாட்டுப் படகில் தொழில் செய்பவன்

**மடிதுப்பல்**
தொ. பெ. சொ. தொ., மடி (வலையின் ஓர் உறுப்பு) யை அலசுதல்

**மடி பொரைதல்**
தொ. பெ. சொ. தொ., மடியின் புதிய சாத்து(வலை)களை இணைத்தல்

**மடிவலை**
பெ. சொ. தொ., வலை வகை. Boat Seine; Bag net

**மட்டப்பாரை**
பெ. சொ. தொ., மீன்வகை. Carangoides malabaricus

**மட்டப்பிரி**
பெ. சொ., வள்ளத்தின் உறுப்பு

**மட்டி**[1]
பெ. சொ., கிளிஞ்சல் வகை. Clam

**மட்டி**[2]
பெ. சொ., மீன்வகை. Meretrix

**மணப்பாடு பத்தூர்**
பெ. சொ. தொ., Manappadu Pathoor; Manappadu 10 fathom bank (J.H.)

**மணப்பாடு பெரியபார்**
பெ. சொ. தொ., Manappadu; name of a promontory. Large bank of Manappadu (J.H.)

**மணல்திட்டு**
பெ. சொ. தொ., கடலுள் காணலாகும் சிறுசிறு திட்டுகள்

**மணல்மேடு**
பெ. சொ. தொ., ஆற்றுவாய்ப்பக்கம் மேடாகக் குவிந்திருக்கும் மணல் குவியல்

**மணிக்கட்டை**

பெ. சொ. தொ., வலை மிதப்பதற்காக மேலே கட்டப்படும் மரக்கட்டைத் துண்டுகள். பெரும்பாலும் எருக்கிலைத் தண்டுகள். (தற்காலத்தில் அலுமினியத்தாலான போயாவும் ரப்பராலான புளோட்டும் மரக்கட்டைத் துண்டுகளுக்குப் பதிலாகப் பயன்படுத்தப்படுகின்றன.)

**மணிக்கால்**

பெ. சொ., வலையின் அடிப்பகுதி நீரில் அமிழ்வதற்காகக் கோக்கப்படும் சுடப்பட்ட மண் உருண்டை.

**மணிவலை**

பெ. சொ. தொ., வலைவகை. ஒருவலை (த.மொ.அ.) Cast net

**மண்டல் வலை**

பெ. சொ. தொ., வலைவகை. தடித்த நைலான் நூலினால் செய்யப்படுவது. இவ்வலையின் சிறப்புத் தன்மை—மிதப்புக் கட்டைகள் சிறியனவாகவும் கிங்காக்கற்கள் பெரியனவாகவும் இருப்பதாகும். வலைக்கண் 5 அங்குலம் அளவினது; வலையின் நீளம் 400 அல்லது 500 அடி; மிதப்புக் கட்டை, கிங்காக்கல் அமைப்புகளால் இவ்வலை கடலின் கீழ்ப்பகுதி வரை சென்று வேலிபோல அமைந்திருக்கும்.

**மண்டா[1]**

பெ. சொ., திமிங்கலம் போன்றவற்றைப் பிடிப்பதற்காகக் கையால் வீசி எறியப்படும் கொக்கியுடன் கூடிய நீண்ட கயிறு. Harpoon

**மண்டா[2]**

பெ.சொ., இரட்டைக் கருவீட்டி. பன்றி முதலானவற்றைக் குத்த உதவும் ஈட்டிவகை (ம.த.பே.). எறியுளி. இரவுக் காலங்களில் நல்ல இருட்டில் மண்டா வேட்டைக்குச் செல்வர். கட்டுமரம் அல்லது சிறிய தோணியின்முன் உட்கார்ந்து கொண்டு முன்பக்கமாகவே தோணியைத் தள்ளிச் செல்வர். பின்பகுதியில் ஒருவர் மண்டாவுடன் விழிப்போடு காத்திருப்பார். கலத்தின் முன்பகுதியில் இணைக்கப்பட்ட முறம் போன்ற ஒன்று தண்ணீரில் மிதந்து வர இதனை இரை என்று கருதிய திருக்கைமீன் அதன்மீது பாய

உடனே எறியுளியால் எறிந்து மீனைக் கைப்பற்றுவர். மண்டா—திருக்கைமீன் வேட்டைக்குப் பயன்படும் கருவி. 'மண்டு' எனும் சொல்லடியாகப் பிறந்தது. மண்டு-உறுதி யாகப் பிடித்தல், செறிவு என்பன பொருள். இக்கருவி மீனை உறுதியாகப் பற்றும் தன்மையது.

**மண்டாடி**

பெ. சொ., வள்ளத்தை ஓட்டுபவர். வள்ள இயக்குநர்

**மண்டூக்கி**

பெ. சொ., முனையில் கொக்கிபோல் வளைந்த இரும் பாலான கருவி. இதன் அமைப்பானது ஒன்றில் எளிதில் இறங்கிப் பதியும் படியாகவும் வெளியில் எடுத்தால் எளிதில் வெளிவராததாகவும் இருக்கும். மீன் வேட்டைக்குப் பயன் படும் சாதனம்

**மண்ணடைக் கெளிறு**

பெ. சொ. தொ., மீன்வகை. Arius thalassinus

**மதவலை**

பெ. சொ., வலைவகை

**மதனா**

பெ. சொ., மீன்வகை

**மந்தகம்**

பெ. சொ., காற்றோட்டமற்ற இறுக்கமான சூழ்நிலை

**மந்த வைத்தல்**

பெ. சொ., அலையோடு அலையாக விளையாடும் பரதவச் சிறுவர்களின் கடல் விளையாட்டு

**மந்தை**

பெ. சொ., கடல் அலை

**மந்தி புரளுதல்**

வி. சொ. தொ., காற்று வீசிக்கொண்டிருக்கும் திசையில் கடல் மட்டத்திலிருந்து தென்னை மர உயரத்திற்கு ஏதோ ஒன்று இருகை அகல அளவில் தோன்றி மறையும். இது இரு வண்ணங்களிலோ அல்லது பல வண்ணங்களிலோ காட்சி தரும். இதற்கு மந்திபுரளுதல் என்பது பெயர். இது தோன்றிய சில மணிகளுக்குள்ளாக பெரும் சுழற்காற்று உருவாகும். ஆகவே பரதவர் இதனை அபாய எச்சரிக்கை யாகக் கருதி விரைந்து கரைக்குத் திரும்புவர். பொதுவாக

இது கோடைக்காலங்களில் காணப்படும். கோடைப் புயலுக்கு முன் தோன்றும் அறிகுறி இது.

**மப்பு**
பெ. சொ., மேகம்

**மப்பு கட்டி இருத்தல்**
தொ. பெ. சொ. தொ., மேகந் திரண்டு இருத்தல். மப்பு—மேகம். மழை வருவதற்கு முந்தைய நிலை

**மயபுரி**
பெ. சொ., மீன்வகை

**மயிலை உப்பு**
பெ. சொ. தொ., வெள்ளை நிறம் குறைந்த, அழுக்கு நிற மான உப்பு

**மரக்கலம்**
பெ. சொ. தொ., கப்பல், தோணி (த.மொ.அ.). மரத்தால் பெருமீனின் உருப்போல் கடலில் பயணம் செய்ய உரு வாக்கப்பட்ட மிதவை. இதன் உறுப்புகள் துடுப்பு, பாய் மரம், கயிறு ஆகியன (அ.சி.). Craft

**மரக்கலப் பாய்**
பெ. சொ. தொ., கப்பல் பாய் (த.மொ.அ.)

**மரக்காயர்**
பெ. சொ., இவர்கள் தமிழ் பேசும் மகமதியர். ஸங்கர ஜாதியார். வர்த்தகர். லப்பைகளின் வேறு பட்டவர்கள். இந்தப் பெயர் அரபி பாஷையில் 'மரகாட்' (இதன் பொருள் படகு). இவர்கள் படகோட்டிகள். இவர்கள் குற்றவாளிகளாக அரேபியாவிலிருந்து துரத்தப்பட்டபோது தமிழறியாத இவர்களை நீங்கள் யாரெனக் கேட்டதற்குத் தங்கள் படகைக்காட்டி 'மரகாப்' என்றனர். அதனால் இவர்கள் மரக்காயர் எனப்பட்டனர் (தர்ஸ்டன்) (அ.சி.). மரக்கலத்துக்கு உரிமையுள்ளவர்கள் மரக்கலராயர்கள். இது மரக்காயர் என மாறிற்று. (சோமலெ'). கி. பி. 14 ஆம் நூற்றாண்டு முதலே தமிழகத் தில் முகமதியர்களின் செல்வாக்குப் பரவலாயிற்று. இவர் தம் பெயரில் அமைந்த பல பட்டினங்கள் கிழக்குக் கடற்கரை யில் உள்ளன. மீன், உலர் மீன் வர்த்தகத்தில் பெரும்பங்கு வகிப்பவர்கள். இராமநாதபுரம் மாவட்டத்துக் குளியர்களுள்

முகமதியர்களே பெரும்பான்மையானவர்களாய் இன்றும் இருக்கின்றனர்.

**மரக்கோலா**
பெ. சொ., மீன்வகை. Belone Chorum; Belone melonostigma

**மரப்படகு**
பெ. சொ. தொ., இராமநாதபுரம் மாவட்டத்தில் காணப்படும் ஒருவகைப் படகு

**மரமடித்தல்**
தொ. பெ. சொ. தொ., உழவுக்குப் பின்னர் அளத்தைச் சமப்படுத்துவதற்காகக் கனமான மரத்தடியால் அடித்தல்.

**மரம்**
பெ. சொ., மரத்தாலாகிய கட்டுமரத்தை உணர்த்தும் சொல். ஆகு பெயர். Craft.

**மரம் அணைத்தல்**
தொ.பெ.சொ.தொ., கட்டு மரத்தடிகளைச் சேர்த்தணைத்துக் கட்டுதல்; தொழிலுக்குச் செல்லும் முன்பாகச் செய்யும் செயல்.

**மரம் கட்டல்**
தொ. பெ. சொ. தொ., மரம் அணைத்தல் என்பதும் இதுவும் ஒன்றே. மேற்குறிப்பு காண்க.

**மரம் காவல்**[1]
தொ. பெ. சொ. தொ., முன்னாளில் கரையில் நிற்கும் கட்டுமரம் முதலான கலங்களும் வலை முதலான பொருள்களும் களவு போதல் இல்லை. இந்நாளில் வலை முதலான துணைப் பொருள்கள் காணாமல் போவதும் வள்ளம் முதலானவை இல்லாமல் போவதும் அரிதாக நடைபெறுகின்றன. ஆகவே, அவரவர் பொருள்களைக் காத்துக் கொள்வது அவரவர் பொறுப்பாகிறது. களவு போகாமல் காத்தல் மரம் காவல் எனப்படும்.

**மரம் காவல்**[2]
தொ. பெ. சொ. தொ., மரம் காவுதல் (கட்டு மரத்தடிகளைத் தோளில் தூக்கிச் செல்லுதல்) என்பதன் திரிபு

**மலட்டுத் தண்ணீர்**

பெ. சொ. தொ., தெளிந்த கடல் நீர்; நீர் தெளிவாக இருப்பின் மீன்பாடு மிகக் குறைவாக இருக்கும். ஆகவே இது மலட்டுத் தண்ணீர் எனப்படுகிறது.

**மலையாளத் தச்சன்**

பெ. சொ. தொ., மணப்பாட்டில் உள்ள மீனவர்களுக்குப் படகு செய்து கொடுப்போர் ('சோமலெ')

**மழுங்கி விடுதல்**

தொ. பெ. சொ. தொ., தேச்சி விடுதல்

**மறிஞ்சிப்பாரை**

பெ. சொ. தொ., மீன்வகை. Caranx djedaba

**மறுவலை**

பெ. சொ., வலைவகை. இவ்வலை நண்டு பிடிக்கப் பயன் படுகிறது. இதனை இழுப்புவலை என்றும் கூறுவர். இவ் வலையின் கண்ணானது தடச்சி எனும் நூலால் 2 அங்குல அளவில் ஆக்கப்பட்டிருக்கும். வலையின் வாய்ப் பகுதியில் இரு பெரிய தடிகள் இணைக்கப்பட்டிருக்கும். பக்கத்திற்கு ஒருவராக இருந்து இவ்வலையை இழுப்பர். வலை இளக்கிய பின்பு ஒரு மணி நேரம் கழித்து வலை கிளப்பு வர்.

**மண்ணாடி**

பெ. சொ., மண்டாடி

**மாங்கு[1]**

பெ. சொ., பாத்திகளில் படியும் தூள் ஜிப்ஸம்

**மாங்கு[2]**

பெ. சொ,. மீன்வகை

**மாசி**

பெ. சொ., மேகம் (ம. த. பே.)

**மாட்டு வலை**

பெ. சொ. தொ., வலைவகை. பெரு வலையின் ஒரு உறுப் பாகப் பிணைக்கப்பட்டிருக்கும் வலை

**மாதா பலகை**

பெ. சொ. தொ., வள்ளத்தின் உறுப்பு. வள்ளத்தின் சுற்றுப்புற மரத்தடி

**மாதாபலகை முதல் சுத்து**

பெ. சொ. தொ., முதலாம் சுத்து மாதாபலகை

**மாதாபலகை இரண்டாம் சுத்து**

பெ. சொ. தொ., இரண்டாம் சுத்து மாதா பலகை

**மாப்பு**

பெ. சொ., மீன் கூட்டம். மீன் திரள் (ம. த. பே.). கரையோர மீன்கள் புயல் வருவதன் முன்னர், வரும் புயலை உணர்ந்து கொண்டு ஆழ்கடலான சேற்றுக்கடல் பகுதிக்குத் தப்பி ஓடுவது போல விரைந்து ஓடும். இப்படிச் செல்லு வதைக் கண்டவுடன் பரதவர் புயல் வரப்போவதை அறிந்து கொள்வர்.

**மாப்பு கூட்டிப்படல்**

தொ. பெ. சொ. தொ., கூட்டங் கூட்டமாக மீன் அகப் படல்

**மாப்பு கலிலுது**

தொ. பெ. சொ. தொ., கடல் நீர் மட்டத்திற்கு மேல் மீன் கூட்டங் கூட்டமாகச் செல்லுதல்

**மாப்பு சாய்தல்**

தொ. பெ. சொ. தொ., கூட்டமாக மீன்கள் வருதல்

**மாப்பு (இ)றால்**

பெ. சொ. தொ., கூட்டமாக வரும் இறால்

**மால்**

பெ. சொ., வலை (த. மொ. அ.). வலை இணைப்பு. Network; Webbing

**மானம் கீழ்மாறு வாங்குதல்**

பெ. சொ. தொ. தொ., இருளகன்று வெளிச்சம் புலப்படும் அதிகாலைப் பொழுது

**மாஸ்க்**

பெ. சொ., ஆங்கிலம். சங்கு, முத்துக் குளிப்பவர்கள் கண் காப்பிற்காக அணியும் முகமூடி. பார்க்க—**கண்ணாடி.** Mask

**மிதவை**

பெ. சொ., மிதக்கும் பொருள். Float, Buoy

**மிதவை வலை**

பெ. சொ. தொ., வலைவகை. Drift net

**மிலாறு**

பெ. சொ., கோலாமீன் பிடிப்புக்காகக் கொண்டு செல்லும் புங்கந்தழை, துளசிச் செடி, கொள்ளுச் செடி இன்ன பிற வற்றை மிலாறு என்பர்.

**மீன் உதறல்**

தொ. பெ. சொ. தொ., வலைப்பட்ட மீன் உதறிக்கொண்டு தப்பிச் செல்லுதல்

**மீன் எண்ணெய்**

பெ.சொ. தொ., மீனின் கொழுப்பிலிருந்து தயாரிக்கப்படும் எண்ணெய்

**மீன் ஏலம்**

பெ. சொ. தொ., மீனை உயர்ந்த பட்சத் தொகைக்கு ஏலம் கூறுதல்

**மீன் கழிக்கிறது**

தொ. பெ. சொ. தொ., தரமில்லாத மீன்களை அப்புறப் படுத்துதல்

**மீன் குஞ்சு**

பெ. சொ. சின்னஞ்சிறு மீன் குஞ்சுகள். Fish seed

**மீன் கூட்டம்**

பெ. சொ. தொ., மீன் திரட்சி. Congregation of fish

**மீன் சினை**

பெ. சொ. தொ., மீன் முட்டை. Fish roe

**மீன் செதிள்**

பெ. சொ. தொ., மீனின் புறக் கவசம். வெண்தோடு, பொருக்கு. Argentine

**மீன் பண்ணை**

பெ. சொ. தொ., நவீன முறையில் மீன்களைப் பெருக்கும் மீன் உற்பத்தி நிலையம். Fish farm

**மீன்பாடு**

பெ. சொ. தொ., மீன்பிடிப்பு. படு-பாடு. முதல் நிலை நீண்ட தொழிற் பெயர். (தொ. பெ. சொ. தொ. என்றும் கொள்ளலாம்)

**மீன் பிசினி**

பெ. சொ. தொ., மீன் கொழுப்பிலிருந்து செய்யப்படும் பொருள். Fish Glue

**மீன்பிடி கருவி**
தொ. பெ. சொ., மீன்பிடிக்கப் பயன்படும் கருவி

**மீன்பிடி படகு**
பெ. சொ. தொ., வள்ளம் முதலியன. Yawl

**மீன் பேக்கறது**
தொ. பெ. சொ. தொ., வலையிலிருந்து மீனைப் பெயர்த்து எடுத்தல்

**மீன் பொறுக்குதல்**
தொ.பெ.சொ.தொ., வெயிலில் உலர்ந்த மீனை இனம், அளவு வாரியாகத் தனித்தனியாகப் பொறுக்கிப் பிரித்தல்

**மீன்மிசை**
பெ. சொ. தொ., மீனின் வாய்ப்புறம் நீட்டிக் கொண்டிருக்கும் இழைகள்

**மீன் முட்டை**
பெ. சொ. தொ., மீன் சினை. Fish egg

**மீன் வலையர்**
பெ. சொ. தொ., மீன் பிடிக்கும் வலையர். வலைஞர், பரதர், பரதவர், பரவர், பரவா எனும் பெயர்களால் அழைக்கப் படுபவர்

**மீன் வால்**
பெ. சொ. தொ., மீன் திரும்புவதற்குப் பயன்படும் உறுப்பு Caudal fin

**முகப்பு**
பெ. சொ., கடல்கலத்தின் முன்புறம். அமரத்தின் எதிர்ப் புறம். Bow

**முக்குவர்**
பெ. சொ., பரதவருள் ஒரு பிரிவினர்

**முசல்தீவு பார்**
பெ. சொ. தொ., Musal Tivu Par; Bank lying near Hare island; Musal—Hare; Tivu—island (J.H.)

**முடிச்சு**
பெ. சொ., வலை முடிச்சு. Knot

**முடிச்சு நெகிழ்த்தல்**
தொ. பெ. சொ. தொ., வலையிளக்கும் போது முடிச்சு நெகிழ்த்துதல். Knot slippage

**முடிச்சு வலை**
பெ. சொ. தொ., வலை வகை. முடிச்சு முடிச்சாக உள்ள வலை. Knot net

**முடிறு**
பெ. சொ., மீன் வகை. Gizzard Shad; Anodontostoma Chacunda

**முட்டி**
பெ. சொ., மீன்வகை. சம்மட்டி (த.மொ.அ.). சம்மட்டி போன்ற தோற்றமுடைய மீன்

**முண்டக் கண்**
பெ. சொ. தொ., மீன்வகை. Apogon aureus (Golden cardinal fish) Apogon septemstriatus (Seven banden Cardinal fish)

**முண்டக்கண் பாறை**
பெ. சொ. தொ., மீன்வகை. Caranx crumenopthallum

**முண்டன் சுறா**
பெ. சொ. தொ., மீன்வகை. Gangetic Shark

**முதலையார்**
பெ. சொ., முதலை. வன்மீன் (ம.த.பே.). வன்மீன் பிடிப்பவர் முதலையார்

**முதல்பாடு**
தொ. பெ. சொ. தொ., முதல்முறையாக வலை இளக்கி மீன் பிடித்தல்

**முத்து**
பெ. சொ., முத்துக்கள் தலசம், சலசம் என இருவகை. தலசம் பூமியில் உள்ள பொருள்களில் உண்டாவன. சலசம் நீரில் உள்ள பொருள்களில் பிறப்பன (அ. சி.). (இக்கோட்பாடும் இதன் விளக்கமும் நம்பிக்கை அடிப்படையில் எழுந்தனவாகலாம்—ஆய்வாளர்) சிப்பியின் உட்புறமுள்ள சதைப்புறத்தில் உறுத்தலான பொருள் (மணல் துகள் போன்றவை) படும்போது அப்பொருளைச் சுற்றி அந்த உயிரினம் ஒரு திரவத்தைச் சுரக்கிறது. திரவம் அந்த உறுத்தற் பொருளைச் சுற்றிச் சூழ்ந்துக் கெட்டிப் படுகிறது. இதுவே முத்தெனப் படுகிறது (அ. சி.). Pearl

**முத்துக்குளி**

தொ. பெ. சொ. தொ., கடலில் மூழ்கி முத்துக்குளித்தல்

**முத்துக்குளித்தல்**

தொ. பெ. சொ. தொ., பார்க்க — முத்துக்குளி. கடலில் முத்தெடுக்க மூழ்குதல் (த.மொ.அ.). இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டக் கடற்கரைப் பகுதிகளிலும் இலங்கையின் வடக்கு, வடமேற்கு, மேற்கு கடற்கரைப் பகுதிகளிலும் நெடுங்காலமாக இத்தொழில் நடைபெற்று வருகிறது.

**முத்துக் குளிப்பவர்**

வி. அ. பெ. சொ. தொ., முத்துக் குளிக்கும் தொழில் செய்யும் பரதவர். Pearl diver

**முத்துக் குளியாளர்**

வி. அ. பெ. சொ. தொ., பார்க்க : முத்துக் குளிப்பவர். Pearl diver

**முத்துச் சலாபம்**

பெ. சொ. தொ., முத்துக் குளிப்பதற்குரிய கூலி (த.மொ.அ.)

**முத்துச்சிப்பி**

பெ. சொ. தொ., முத்து உண்டாகும் சிப்பிகள் இரண்டின் ஓட்டு. Pearl oyster, Pinctada Vulgaris; bi-valve-water animal

**முரடன் சுறா**

பெ. சொ. தொ., மீன்வகை. Carcharhinus gange; ticus; Gangetic shark

**முழுக்காளிகள்**

தொ. பெ. சொ., வளர்ந்து கனத்த முத்துக் கிளிஞ்சல்கள் கடல் மட்டத்திற்குக் கீழ்ச் சென்று பூமியுள் புதைந்து விடும். குளியர் அல்லது குளியோடிகள் இவற்றை எடுக்க முடியாது. 15 பாகம் ஆழம்வரை முழுக்காளிகள் முத்துக் குளித்து இவற்றை எடுப்பர்.

**முள்ளிச் சங்கு**

பெ. சொ. தொ., சங்கு வகை. சங்கின் புறப்பரப்பு முழுவதும் கூரான முட்கள் போன்ற அமைப்புடைய சங்கு

**முள்ளுச் சுறா**
பெ. சொ. தொ., சுறாமீன் வகை

**முள்ளுப் பலகை**
பெ. சொ. தொ., கொத்துப் பலகையின் மறுபெயர். உப்பளத்தில் பயன்படும் கருவி

**முள்ளுவாளை**
பெ. சொ. தொ., மீன்வகை. Chirocentrus dorab

**மூக்குமீன்**
பெ. சொ. தொ., சுறாமீன் வகை. இதில் புள்ளிச்சுறா, சுத்தித் தலைச்சுறா, வாள்பல் சுறா எனப் பலவகைகள் உள்ளன. (அ.சி.) Sword fish

**மூசாப்பு**
பெ. சொ., காற்றற்ற மந்தமான நிலை. புயலுக்கு முன் தோன்றும் ஓர் அறிகுறி

**மூச்சுக்குப்பி**
பெ. சொ. தொ., முத்துக் குளியாளும் சங்கு குளியாளும் கடலில் மூழ்க நவீன முறையில் கையாளும் சுவாசக் காற்றுக் குப்பி. Aspirator bottle

**மூச்சுப் பிடித்தல்**
தொ. பெ. சொ. தொ., குளியல் தொழிலின்போது மூச்சடக்கல்

**மூடந்தட்டுதல்**
தொ.பெ.சொ.தொ., அளப் பாத்திகளில் தேங்கியிருக்கும் உப்புநீர்மீது படியும் காற்றுக் குறைவினால் உண்டாகும் பாசி போன்ற ஆடையை வாரு பலகையினால் கலைத்து அப்புறப் படுத்துதல்

**மூடம்**[1]
பெ. சொ., முகத்தலளவு. எட்டு மரக்கால் கொண்டது. சிப்பியை அளக்கப் பயன்படுவது (த.மொ.அ.)

**மூடம்**[2]
பெ. சொ., நீராடை

**மூப்பன்**
பெ. சொ., நகரப் பரதவன். பரதவர் தலைவன். மூப்பன். சில சாதியாரின் பட்டப் பெயர். மூப்பர்-கிருத்துவ மதத் தலைவருள் ஒருவகையார் (ம.த.பே.)

**மூனான்**

பெ. சொ., மறுபெயர் சொறி. மீன் இனத்துள் ஒன்று. கடுமையான விஷமுடையது. கடற்பரப்பில் பஞ்சு மிதப்பது போல மிதக்கும். 'சிவன் பை' என்றும் இதனை அழைப்பர் (சிவனுக்கும் மூளானுக்கும் தொடர்பு நஞ்சால் ஏற்பட்டிருக்கலாம்). இதனுடைய விஷத்தின் அளவுக்கு ஒரு தகவல் சொல்வார்கள். ஒரு பித்தளைச் செம்பில் தண்ணீர் விட்டு அதில் மூளானைப் போட்டு அச்செம்பை தலையில் வைத்துக் கொண்டால் செம்பையும் ஊடுருவித் தலை வழியாக விஷம் இறங்கும் என்பர். இது உடல்மீது பட்டுவிட்டால் 3 நாட்களுக்குத் துடிப்பர். மூளான் சொறிகளின் அரசன் என்பர். சொறிகளின் வகைகளாவன : செஞ்சொறி, முட்ட சொறி, வவ்வால் சொறி, கொதவள சொறி, பெரப்பாங் கண்ணி சொறி, கடுக்காச் சொறி, எட்டுக்கால் சொறி, இராணிமுடி சொறி, அகல சொறி, மடவா சொறி, பாளத்தான் சொறி, வட்டுச்சொறி, மணிச் சொறி, தொளுத்தைச் சொறி ஆகியன.

**மூன்றாம் பாடு**

தொ. பெ. சொ. தொ., மூன்றாம் முறை வலை இளக்கி மீன் பிடித்தல்

**மெதுப்பு வலை**

பெ. சொ. தொ., வலை வகை. நீரின் மேல் மிதந்து கொண்டிருக்கும் ஒருவகை வலை, மிதப்பு வலை.

**மெதுவக் கட்டை**

பெ. சொ. தொ., மிதவைக் கட்டை. நீரில் வலைக்கு அடையாளமாக மிதக்கும் நுரைக்கட்டை.

**மெனக்கிநாள்**

பெ. சொ. தொ., நாயராட்சை, ஞாயிற்றுக்கிழமை. காண்க—நாயராட்சை

**மேங்கா**

பெ. சொ., வலையின் மேற்பகுதி

**மேங்கா பற்றல்**

தொ. பெ. சொ. தொ., மேல் வலையைப் பற்றுதல்

**மேசைக்காரர்**

பெ. சொ., மேல்நாட்டுக் கிருத்துவப் பாதிரிமாரோடு மேசை போட்டமர்ந்து பேசுமளவுக்கு வாழ்க்கைத் தரத்தில் உயர்ந்தவர்கள்,

**மேமறி**
பெ. சொ., மேற்குத் திசையிலிருந்து கிழக்குத் திசை நோக்கி ஓடும் நீரோட்டம்

**மேமறி வெள்ளம்**
பெ. சொ. தொ., மேமறி. முற்குறிப்புக் காண்க.

**மேல ஒளிபதுபார்**
பெ. சொ. தொ., Melaombadu Par; Mela-further or distant, outer; further or outer 9 fathoms bank (J.H.)

**மேலா மரம்**
பெ. சொ. தொ., ஆழ்கடலுக்கு மீன்பிடிக்கச் செல்லும் கட்டுமரம். திருக்கைவலை, பாச்சுவலை ஆகியன இம் மரத்தில் பயன்படுத்தப்படுகின்றன. இம்மரத்தில் பெரு வலைகளே தொழில் செய்ய பயன்படுகின்றன.

**மேல் காத்து**
பெ. சொ. தொ., மேற்கிலிருந்து வீசும் காற்று.

**மோப்புக்கட்டை**
பெ. சொ. தொ., மிதப்புக்கட்டை; மேல் புறக்கட்டை; வலைமீது மிதக்கும் மிதவை.

**மையிருட்டு**
பெ. சொ. தொ., வெளிச்சம் அறவேயில்லாத கருக்கிருட்டு

**மொட்டச்சி**
பெ. சொ. தொ. மீன்வகை. Atherina forskallii

**மொட்டிகோலாக் கெண்டை**
பெ. சொ. தொ., மீன்வகை. Atherina forskallii

**மொரல்**
பெ. சொ., மீன்வகை

**மோட்டார்போட்**
பெ. சொ. தொ., ஆங்கிலச் சொற்கள். இயந்திரப் படகு. Motor boat.

**மோரிசிங் பாரை**
பெ. சொ தொ., மீன்வகை. Caranx djedaba

**யானைமுள்ளிச் சங்கு**
பெ. சொ. தொ., சங்குவகை. பெரிய யானை போன்ற அமைப்பு உடையதும், வெளிப்புறம் முட்கள் நிறைந்ததுமான சங்கு.

**ரங்கூன்வலை**

பெ. சொ. தொ., வலைவகை. பிளாஸ்டிக் இரைமீன் பயன் படுத்தும் வழக்கம் இலங்கையிலிருந்து வந்தது போல இந்த வலையைப் பயன்படுத்தும் வழக்கம் ரங்கூனிலிருந்து வந்த தாயிருக்கலாம். Rangoon net

**ராணி கம்பி**

பெ.சொ. தொ., மீன் தூண்டிலுக்குப் பயன்படும் கம்பி. கொழும்பு நகரில் இக்கம்பி விக்டோரியா ராணியின் ஞாபகார்த்தமாக ராணிகம்பி என வழங்கப்பட்டு தூத்துக் குடிப் பரதவரிடையிலும் அப்பெயர் பரவி விட்டது.

**ராகத்தா**

பெ. சொ., வசதி. 'கார்த்திகை மாசம் சங்குளிக்கு ரொம்பவும் ராகத்தாவா இரிக்கும்'—மீனவர் பேச்சு

**ராவிவிடறது**

தொ. பெ. சொ. தொ., தேச்சி விடுதல், மழுக்கி விடுதல். உப்பளத்தில் பயன்படுத்தும் சொல்

**ராஜாவுக்குச்சிப்பி சோதிச்சபார்**

பெ. சொ. தொ. சோதித்த—சோதிச்ச: Rajavukku Sippi Sothicha Par; Rajavukku—for or to a Raja; Sothicha—searched or examined; Sippi-Oysters; Bank searched for Oysters for the Raja (J. H.)

**ரெண்டாம் பாய்**

பெ.சொ.தொ., இரண்டாவது உச்சிப்பாய். படகின் தலைப் பாய்க்கு மேலுள்ள சிறுபாய். Topgallant

**ரெண்டாம் பத்துவளி**

பெ. சொ., தொ., சங்கு குளிக்கும் பருவம் அல்லாதபோது அத்தொழில் மேற்கொண்டார் வாழ்வதற்கு முதலாளியர் கொஞ்சம் பணம் கடனாக முன்பணம்போல் தருவர். பருவம் வந்ததும் சங்கு குளித்துத் தொழில் செய்து கடனை அடைத்தல் வேண்டும். பொதுவாக ஒரு முதலாளி யிடம் பதிவாகத் தொழில் செய்வோர் வேறொரு முதலாளி யுடன் தொடர்பு கொள்ளார். சிலர் ஒரு முதலாளியிடம் வேலை பார்த்துக்கொண்டே அவர்க்குத் தெரியாமல் இன்னொரு முதலாளியிடம் கணக்கு வைத்துக் கொள்ளுத லும் உண்டு. இதற்கு இரண்டாம் பற்றுவாரி என்று

பெயர். முதல் முதலாளிக்குத் தெரியாமல் தரம் மிகுந்த உயர்ரகச் சங்குகளை இரண்டாமவருக்கு விற்றுவிடுதலும் உண்டு.

**ரெண்டாம் பாடு**

தொ. பெ. சொ. தொ., இரண்டாம் முறையாக வலை இளக்கி மீன் பிடித்தல்

**ரோமியோ**

பெ. சொ., மீன்வகை

**ரோஸ்வாயன்**

பெ. சொ., சங்கு வகை. ரோஸ்—ஒரு வண்ணம். ரோஸ் வண்ணமுடைய சங்கு

**லம்பாராவலை**

பெ. சொ. தொ., லம்பரா— ஆங்கிலச் சொல். வலைவகை. மீன்களைச் சுற்றி வளைக்கும் வலை. Lampara

**லஸ்கர்**

பெ. சொ., தோணியில் தொழில் செய்வோர்.

**லாஞ்சு**

பெ. சொ., ஆங்கிலம். இயந்திரப்படகு. Launch

**லெப்போ**

பெ. சொ., வள்ளத்தின் உள்ளுறுப்பு

**லைட்டர்**

பெ. சொ., ஆங்கிலம். சிறுபடகு. மரத்தாலும் தகட்டாலும் செய்யப்படுபவை. துறைமுகம் இருக்குமிடத்தில் ஆழம் குறைவாயிருந்தால் கப்பல்கள் கரைக்கருகில் வரமுடியாது. கடலிலேயே சில கிலோமீட்டர்களுக்கு அப்பால் இருக்கும். ஆழ்கடலில் நிற்கும் கப்பல்களிலிருந்து லைட்டர்கள் வழியாக 200டன் நிறையுள்ள பொருள்களை ஒவ்வொரு முறையும் ஏற்றி இறக்குவர். லைட்டர்கள் கரைக்கும் கப்பலுக்கும் இடையில் சென்று வருவன. Lighter

**லைன்**

பெ. சொ., ஆங்கிலம். இழை, சரடு, நூல். Line

**லோக்கல் உப்பு**

பெ. சொ. தொ., லோக்கல்—ஆங்கிலம். பழைய முறையில் தயாரிக்கப்படும் உப்பு. வெளியே திடமாகவும் உள்ளே திரவமாகவும் இருக்கும் உப்பு. இதனை இயந்திரத்தில் அரைத்து பவுடர் உப்பு தயாரிக்க முடியாது. Local salt

**வங்கராங்கீரை**
பெ. சொ. தொ., கடற்கரையோர நெய்தல் நிலத் தாவரம்

**வங்கு**
பெ. சொ., மரக்கலத் தறி (த. மொ. அ.)

**வங்கடை**
பெ. சொ., மீன்வகை

**வங்கடைபாரை**
பெ. சொ. தொ., மீன்வகை. Caranx Crumenophthalmus

**வஞ்சிரம்**
பெ. சொ., வன் சிரம். மீன்வகை. Cybium Commersonii

**வட ஒன்பதுபார்**
பெ. சொ. தொ., வடக்கு ஒன்பது பார். Northern bank in nine fathoms; Vada—north ((J.H.)

**வடுப்படல்**
வி.பெ.தொ., காயப்படுதல். மீன் வேட்டையில் உண்டாகும் காயம்

**வட்டக்காரர்**
பெ. சொ., சம்மாட்டியார் மூலமாக மீன்பிடி தொழிலில் பணம் முதலீடு செய்பவர். சம்மாட்டியார் அன்றாடம் கிடைக்கும் மீன்பாட்டினை ஏலம் விட்டு அத்தொகையில் நூற்றுக்கு ஒரு வட்டம் வீதம் கொடுப்பார். வட்டக்காரர் தமது முதலுக்கு வட்டத்தொகையை வட்டிப் போலப் பெற்றுக் கொள்கிறார். 1 வட்டம்—ரூ. 6-25

**வட்டம்**
பெ. சொ., பணம், வராகன் போன்ற பெயர். பார்க்க—வட்டக்காரர்

**வட்டம் கூறுதல்**
தொ. பெ. சொ. தொ., ஏலம் கூறுதல்

**வண்டு காயப் போடுதல்**
தொ. பெ. சொ. தொ., உப்பளப் பாத்தியில் இருந்து வாரி எடுக்கும் உப்பை அப்பாத்தியின் வரப்பிலேயே குவித்து ஒருநாள் காயப் போடுதல்

**வண்டு கூட்டுதல்**
தொ. பெ. சொ. தொ., பாத்தியிலிருந்து உப்பை அள்ளி அவ்வரப்பிலேயே குவித்தல்

**வண்ணாங்குன்னை**
பெ. சொ., மீன்வகை

**வத்துகரை**
பெ. சொ. தொ., கடற்கரை

**வத்தும்**
பெ. சொ. தொ., வற்றம். கடல் நீர் குறைதல்

**வத்தல்**[1]
பெ. சொ., சிறுவள்ளம் (த. மொ. அ.)

**வத்தல்**[2]
பெ. சொ., பெரிய தோணி

**வந்து கணிசம்**
பெ. சொ. தொ., நீர் குறையும் நேரம்

**வந்தீவு ஆறுபாகம் பார்**
பெ. சொ. தொ., வன்மை தீவு ஆறு பாகம் பார். Vantivu Arupagam Par; Bank off vantivu in six fathoms (Vantivu, hard white rock island) Aru—six; Pagam — fathom; Van—hard; Vantivu—a small island north of Tuticorin; on which there is small fishing beacon. Probably so called on account of hard white rock there present (J.H.)

**வரால்**
பெ. சொ., மீன்வகை

**வரிக்காரை**
பெ. சொ. தொ., மீன் வகை. Atropus atropus

**வரிச்சவலை**
பெ. சொ. தொ., வலைவகை

**வரிநண்டு**
பெ. சொ. தொ., நண்டுவகை. Neptunus pelagicus

**வரிப்பாரை**
பெ. சொ. தொ., மீன்வகை. Caranx Specious

**வரிமப்பு**
பெ. சொ. தொ., மப்பு—மேகம். வரிவரியாகத் தோன்றும் மேகம். இது கடுமையான காற்று வீசப்போவதற்கு அறிகுறி என்பர்.

**வரிவலை**

பெ. சொ. தொ., வலைவகை (நற்றிணை 111)

**வலை**

பெ. சொ., பலவகை வலைகளாவன: கரை வலை, கைவலை, உடுவலை, வீச்சுவலை, பாச்சுவலை, தெவ்வலை, வரிவலை, கொண்டைவலை, செவிள்வலை, சிக்கு வலை, குஞ்சுவலை, மடிவலை, வலிவலை, இழுவலை, பொடிவலை, பருவலை, தூரிவலை, சாளவலை, நைலான்வலை, ரங்கூன் வலை எனப்பல. மீன்பிடி கருவி. Net

**வலம்புரிச் சங்கு**

பெ. சொ. தொ., சங்குவகை. இது தெய்வீகத் தன்மை உடையது எனும் நம்பிக்கை இந்துக்களிடையே நிலவுகிறது. இதனால் இது மிகுந்த விலை உடையதாகிறது. இராமநாத புரம் மாவட்டத்தில் உள்ள தேவிபட்டினம், திருப்பாலக் குடி, மோரிபனை, கரங்காடு ஆகிய ஊர்களுக்குப் பக்கத்தில் உள்ள கடல் பகுதிகளில் இது மிகுதியாக எடுக்கப்படுகிறது. வலம்புரிச்சங்கு கிடைத்த குளியாள் மிகுந்த கூலியும் மகிழ்ச்சியும் அடைவார்.

**வலிவலை**

பெ. சொ. தொ., வலைவகை. Drift net

**வலை அடித்தல்**

தொ. பெ. சொ. தொ., பரதவர் தமது தொழில் முடித்துக் கரையேறிய பின்பு வலைகளை நீரில் அடித்துக் கழுவி அலசுவர். இச்சொல் இப்பொருளது.

**வலை அணைத்தல்**

தொ. பெ. சொ. தொ., வலையைக் கட்டிக் கொண்டு தொழிலுக்குச் செல்லுதல்

**வலை இடையர்**

பெ. சொ. தொ., பரதவருள் ஒரு பிரிவினர்

**வலை இளக்கிறது**

தொ. பெ. சொ. தொ., கடல் கலத்திலிருந்து வலையைக் கடலிற் விரித்து இறக்குதல்

**வலை ஊசி**

பெ. சொ. தொ., வலை பின்னுவதற்குப் பயன்படும் ஊசி

**வலை ஏற்றல்**

தொ. பெ. சொ. தொ., பெருவலையைப் படகில் அல்லது கலத்தில் ஏற்றுதல்

**வலைகட்டறது**

தொ. பெ. சொ. தொ., 1. வலை பின்னுதல்; 2. பழுது பட்ட வலைகளைச் சரி செய்தல். Felling of net

**வலை கட்ட பத்தல்**

தொ. பெ. சொ. தொ., வலையைத் தயார் நிலையில் வைத்தல்

**வலை கத்தி**

பெ. சொ. தொ., வலை பின்னும் போதும் பழுது பார்க்கும் போதும் வலைநூல் அறுக்கவும் பிற தேவைக்கும் பயன் படுத்தும் கத்தி

**வலைகப்பி**

பெ. சொ. தொ., லாஞ்சிலிருந்து வலையைக் கடலில் இளக்கவும் வாங்கவும் பயன்படுத்தும் உருளை. Gallows

**வலைகாய வைத்தல்**

தொ. பெ. சொ. தொ., அழுக்கடைந்த வலையை நீரில் அலசி, மணலில் போட்டு நீர்வற்றவிட்ட பின்பு வெயிலில் பரப்பி காய வைத்தல்

**வலைகாயப் போடுறது**

தொ. பெ. சொ. தொ., மீன்பிடிப்பு முடிந்ததும் கழுவிய வலையை வெயிலில் உலரப் போடுதல்

**வலைகாவுதல்**

தொ. பெ. சொ. தொ., வலையைத் தோளிலிட்டுத் தூக்கிச் செல்லுதல்

**வலைகிளப்புதல்**

தொ. பெ. சொ. தொ., இளக்கிய வலையில் மீன் மிகுந் யாகப் பட்டதறிந்ததும் வலையைக் கிளப்புதல். வலையைப் பற்றி மேலிழுத்தல்

**வலைக் கூண்டு**

பெ. சொ. தொ., கடற்கரையில் வலைகளைப் போட்டு வைக்கும் சிறுகுடில்

**வலை கருத்தல்**

தொ. பெ. சொ. தொ., பகை காரணமாக மந்திரம் போட்டு ஒருவர் இளக்கிய வலையில் மீன்கள் படாமலிருக்கச் செய்தல்

**வலை தட்டல்**

தொ. பெ. சொ. தொ., வீசிய வலையைக் கொணர்ந்து தரையில் தட்டல்

**வலை துப்பல்**

தொ. பெ. சொ. தொ., அழுக்கடைந்து மீன் கவிச்சோடு இருக்கும் வலைகளைத் துவைத்துச் சுத்தப்படுத்திப் போடுதல்

**வலை தள்ளல்**

தொ. பெ. சொ. தொ., கலத்திலிருந்து வலையை இளக்குவதற்கு முன்னர் கடலில் தள்ளுதல்

**வலை நாள்செய்தல்**

தொ. பெ. சொ. தொ., புதியவலை வாங்கிய உடன் அதனை நேராகக் கடலுக்குக் கொண்டு செல்வதில்லை. அதற்குச் செய்யவேண்டிய சடங்குகளைச் செய்த பின்னரே தொழிலுக்குக் கொண்டு செல்வர். முதலில், வாங்கிய வலைகளைக் குவித்து ஊதுவத்தி, சூடம் கொளுத்தி மஞ்சள் நீர் தெளிப்பர். பின்னர் அதன்முன் அவல், கடலை, அரிசி, வெல்லம் ஆகியன வைத்துப் படைத்து வந்த விருந்தினருக்கு வழங்குவர். குடும்பத்தெய்வங்கள் தங்கள் வலைக்குக் காவலாக இருக்கவேண்டும் எனச் சில நேரங்களில் சாராயமும் வைத்துப் படைக்கப்படுவதுண்டு. இதன் பின்னரே வலை தொழிலுக்குக் கொண்டு செல்லப்படும்.

**வலை பத்தியாச்சு**

தொ. பெ. சொ. தொ., இத்தொடரால் பெருவலை கரையேறிவிட்டது என்பதைக் குறிப்பிடுகின்றனர்

**வலை பற்றல்**

தொ. பெ. சொ. தொ., கிளப்பிய வலையைப் பற்றி எடுத்தல்

**வலை போதல்**

பெ. சொ. தொ., வலை பூரைப்படுதல். பெருமீன்கள் காரணமாகவோ, பார்களில் சிக்கியதன் காரணமாகவோ வலை கிழிந்து போதல்

**வலைமால்**
பெ. சொ. தொ., வலைகளின் இணைப்பு

**வலைமால் அடி**
பெ. சொ. தொ., வலையின் கீழ்ப்புற விளிம்பு

**வலைமால் இணைக்கிறது**
தொ. பெ. சொ. தொ., வலைகளை ஒன்று சேர்த்தல். Mounting of webbing

**வலை முடிதல்**
தொ. பெ. சொ. தொ., வலை கட்டுதல்: Braiding

**வலை மே(ல்) புறம்**
பெ. சொ. தொ., வலையின் மேல் பகுதி: Cork line

**வலையர்**
பெ. சொ., மீன் பிடிக்கும் தொழில் செய்வோர். நாட்டின் பூர்வீகக் குடிமக்கள் (அ. சி.)

**வலை வளைத்தல்**[1]
தொ. பெ. சொ. தொ., பூரைகளையெல்லாம் முழுமையாகப் பொத்தி முடிய மாலை நான்கு மணியாகும். அதன்பின் பொத்திய வலைகளை எல்லாம் சரி செய்து மறுநாள் வலை வீசுவதற்கான நிலைமையில் ஒழுங்கு செய்து கட்டி வைப்பர். இதற்கு வலை வளைத்தல் என்று பெயர்.

**வலை வளைத்தல்**[2]
தொ. பெ. சொ. தொ., வலையைக் கடலுள் அரைவட்டம் போல் இளக்கி மீன்கள் தப்பி ஓடிவிடாதபடி வளைத்தல்.

**வலை வாங்குதல்**
தொ. பெ. சொ. தொ., மீன் பாட்டிற்காகக் கடலில் இளக்கிய வலையை கடல் கலத்திற்குத் திரும்பவும் சேர்த்தி வைத்தல். (வாங்க குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்கள்—திருப்பாவை. இருகையால் பால் கறத்தலும் இருகையால் வலை வாங்குதலும் ஒப்புநோக்கத்தக்கன.)

**வலை வைத்தல்**
தொ. பெ. சொ. தொ., கடலில் பெருவலையைப் போடுதல்

**வழுவன்**
பெ. சொ., மீன்வகை. கடல் பரப்பின் மீது தன் குடலையே மிதக்கவிட்டு செத்ததுபோல் இருக்கும். பறவையின் கவனத்தைக் கவர ஒரு வகை எண்ணெய் பசையை நீரின்

மீது பரப்பும். இறந்து விட்ட மீன் எனத் தவறாகக் கருதிய பறவை இதன்மீது அமர்ந்து கொத்தத் தொடங்கும்போது அதனை குடலுடன் சுருட்டி வாயிலிட்டு உண்ணும் தந்திரம் கொண்டது.

**வள்ளப் போட்டி**
பெ. சொ. தொ., கடலில் வள்ளங்களை போட்டிபோட்டுக் கொண்டு ஓட்டுதல்

**வள்ளம்**
பெ. சொ., மீன்பிடி படகு. இதன் உறுப்புகளாவன: கால், வங்கு, ஏறா, பத்தார், சீனிப்பலகை, ரெண்டாஞ் சுத்து மாதா பலகை, முதல் சுத்து மாதாபலகை, நெருக்கு, நடுக் கட்டி, பாய்மரம், பாய்மரவாரி, பாய், சலுத்துக் கயிறு, ஆஞ்சாங்கயிறு, அணியம், பிந்தலை, மட்டப்பிரி, லெப்போ, தார்ப்பூச்சு, நாளி, ஊசி, சுக்கான், காணா, புடி கம்பு, தண்டு, பருவான், கயிறு ஆகியன. Canoe

**வள்ளம் ஆட்டம் போடுதல்**
தொ. பெ. சொ. தொ., கடல் அலை பேரளவில் எழும் போது வள்ளம் தத்தளித்தல்

**வள்ளம் குதித்தல்**
தொ. பெ. சொ. தொ., வள்ளம் கடல் அலைகளில் முன்னே றும் போது குதித்துத் தாவுதல்

**வன்னிமேமறி**
பெ.சொ.தொ., வடமேற்குத் திசையிலிருந்து தென்கிழக்குத் திசை நோக்கி ஓடும் கடல் நீரோட்டம்

**வன்னி வெள்ளம்**
பெ. சொ. தொ., வடதிசையிலிருந்து தென்திசை நோக்கி ஓடும் கடல் நீரோட்டம்

**வாகைமரம்**
பெ. சொ. தொ., கடல்கலங்கள் செய்ய வாகான மரம். Albizzia lebbeck

**வாங்கிக் கயிறு**
பெ. சொ. தொ., வீச்சு வலையையும் வீச்சுக்காரரையும் தொடர்பு படுத்தி இணைக்கும் கயிறு

**வாங்கி வெள்ளம்**
பெ. சொ. தொ., ஆள் தவறி விழுந்து விட்டால் மீளவே முடியாத கடுமையான நீரோட்டம்

**வாங்கு**

பெ. சொ., ஆங்கிலம். பாய்மரத்தின் இருபக்கமும் உள்ள சம நிலைக்கயிறு. Vang

**வாங்கு வலை**

பெ. சொ. தொ., வலைவகை; Boat seine

**வாட**

பெ. சொ., வாடை. வடதிசைக் காற்று, குளிர் எனும் பொருளும் இச்சொல்லுக்கு உண்டு.

**வாடகச்சாவி**

பெ. சொ. தொ., வட மேற்குக் காற்று

**வாடகர காத்து**

பெ. சொ. தொ., கர—மேற்கு. பரதவரிடையே கர எனும் சொல் இப்பொருள் தருகிறது. வட மேற்குக் காற்று

**வாட காத்து**

பெ. சொ. தொ., வடக்கிலிருந்து வீசும் காற்று

**வாட கொண்ட**

பெ. சொ. தொ., வாடை—வட காற்று. கொண்டல்—கீழ் காற்று. வாடகொண்ட—வடகிழக்குத் திசையிலிருந்து வீசும் காற்று.

**வாடர்**

பெ. சொ., ஆங்கிலம். பரதவர் அணியும் மிதியடி. Wader

**வாடா ஒழினி**

பெ. சொ. தொ., வடதிசையிலிருந்து தென் மேற்குத் திசை நோக்கி ஓடும் கடல் நீரோட்டம்

**வாடா ஒழினி வெள்ளம்**

பெ. சொ. தொ., வாடா ஒழினி; மேல் குறிப்புக் காண்க

**வாடா**

பெ. சொ., மிகப் பெரிய தோணி

**வாடா வலை**

பெ. சொ., பொடிவலை

**வாடைக் கொண்ட**

பெ. சொ. தொ., வாடைக் கொண்டல். வட கிழக்குத் திசையிலிருந்து தென் மேற்குத் திசை நோக்கி வீசும் காற்று

**வாணிவாரு**

பெ. சொ., கடலில் வடக்கிலிருந்து தெற்காக ஓடும் கடல் நீரோட்டம்

**வா(ய்) புறம்**

பெ. சொ. தொ., வள்ளம் அல்லது தோணியில் காற்று வீசும் திசைக்கு ஏற்ப பாய் கட்டப்பட்டிருக்கும். காற்று திசை வாய் புறம் எனவும் எதிர்திசை கௌல் எனவும் வழங்கப் படுகின்றன.

**வாரி**

பெ. சொ., நல்ல நீளமும் கனமும் கொண்ட மரம். வள்ளத்தின் பல பாகங்கள் வாரி எனப்படுகின்றன. (அணித்துவாரி, ஆஞ்சான்வாரி போன்றவை) வாரி— கதவு (த.மொ.அ). இச்சொல் கதவின் மூலப் பொருளான மரப்பலகையைப் பின்னர் குறிக்கும் வழக்கம் ஏற்பட்டிருக்கலாம்.

**வாருபாத்தி**

பெ. சொ. தொ., உப்பளப் பாத்தி

**வால் தெப்பம்**

பெ. சொ. தொ., தொட்டானுக்கு நீரை அனுப்பும் தெப்பம்.

**வாவல்**

பெ. சொ., மீன்வகை. இராமநாதபுரம் மாவட்டத்தில் சிறப்பாகப் பேசப்படும் கடல் மீன்; இட்டளி போன்ற வடிவமும் மென்மையும் உடையது. 'ஆவலைப் போக்க வாவலைச் சாப்பிடு' என்பது பழமொழி.

**வாழைப் பூச்சங்கு**

பெ. சொ. தொ., சங்குவகை; வாழைப்பூவின் தோற்றத்தை ஒத்திருக்கும் சங்கு

**வாளா**

பெ. சொ., மீன்வகை. வாள் சுறாவின் இனம்

**வாளா வலை**

பெ. சொ. தொ., வலைவகை. வாளா (வாள் சுறா) மீன் பிடிக்க உதவும் வலை

**வாளை**

பெ. சொ., மீன்வகை. வாள் போன்ற பலமான உறுப்பு ஆறடி நீளத்திற்கு உடையது. கப்பல்களையும் பெருமீன்களையும் குத்திப் பயப்படுத்தும் மீன் (அ.சி.)

**வாளிசுறா**
பெ. சொ. தொ., சுறாமீன் வகை. வாள் போன்ற பற்களைக் கொண்டது

**விசிறுவலை**
பெ. சொ. தொ., வலை வகை; விசிறியெறியப்படும் வலை. வீச்சுவலை என்றும் பெயருமுண்டு : Falling net; cast net

**விஞ்சு**
பெ. சொ., வலையைக் கிளப்புகிற கடினமான வேலையை எளிதாக்கும் சாதனம். விசைப்படகில் அமைந்திருக்கும் கருவி

**விடிவெள்ளி**
பெ. சொ., பொழுது விடிவதற்குக் கொஞ்ச நேரம் முன்பு வானில் தோன்றும் விண்மீன். இவ்விண்மீன் பரதவர்க்கு நேரம் அறிவிக்கிறது

**விட்டகயிறு**
பெ. சொ. தொ., தனித் தூண்டில் : Hand line

**விரட்டு வலை**
பெ. சொ. தொ., வலைவகை. மீன்களை விரட்டிப்பிடிக்கும் வலை : Drive in net; Torch net

**விரல் சல்லி**
பெ. சொ. தொ., சுண்ணாம்பின் மூலப்பொருள். மனிதர் கைவிரல் போன்ற அமைப்புடையது.

**விரால்**
பெ. சொ., மீன்வகை . Ophiocephalus Spp; Ophiocephalus Striats

**விரால்கண்ணி**
பெ. சொ. தொ., விரால் மீன் பிடிக்கப் பயன்படும் கண்ணி: Murrel noose

**விரால் தடவுறது**
தொ. பெ. சொ. தொ., உப்பங்கழிகளில் கைகளால் தடவித் தடவி விரால் மீன் பிடித்தல்

**விலாங்கு**
பெ. சொ., மீன்வகை. மலங்கு என்றும் வழங்குவர், Anguilla Spp (Eel)

**வீச்சுக் கயிறு**

பெ. சொ. தொ., கடலில் வலை வீசுவதற்கு வசதியாக இருக்கும்படி வலையுடன் இணைக்கப்பட்ட கயிறு : whiffing lines

**வீச்சுக்காரன்**

பெ. சொ., வீசுவலையைக் கொண்டு நன்றாக வலை வீசுபவனை வீச்சுக்காரன் என்பர். வசை வீசுதல் என்பது லாவகம், தொழில் நுணுக்கம், நீண்ட காலப் பயிற்சி ஆகியவற்றால் செய்யமுடியும் வேலையாகும்.

**வீச்சுத் தூண்டில்**

பெ. சொ. தொ., தூண்டில் இருவகைப்படும். 1. பார் தூண்டில்; 2. வீச்சுத் தூண்டில். பாய் ஓட்டில் கட்டுமரமோ, தோணியோ ஓடிக் கொண்டிருக்கும் போது வீசப்படும் தூண்டில் வீச்சுத் தூண்டில் எனப்படும்.

**வீச்சு வலை**

பெ. சொ. தொ., வலைவகை. வீசி எறியப்படும் வலை. விசிறுவலை எனவும் வழங்குவர்: Falling net; Cast net

**வீஞ்ச**

பெ. சொ., பாய்மரத்தில் பாயை ஏற்றவும் இறக்கவும் உதவும் பல் சக்கரம்

**வெங்கணவா**

பெ. சொ., மீன்வகை

**வெங்கண**

பெ. சொ., மீன்வகை : Pellona hoerenijur

**வெட்டி**

பெ. சொ., மீன்வகை : Boleopthalmas boddacrti (Mud skipper)

**வெண்ணெய்ப் பாரை**

பெ. சொ. தொ., மீன்வகை : Caranx sansum

**வெண்தேக்கு**

பெ. சொ. தொ., மரவகை; வள்ளம், தோணி செய்யப் பயன்படும் மரம்

**வெலங்கு கருவை பார்**

பெ. சொ. தொ., விலங்கு-வெலங்கு; விலக்கு-விலங்கு. Off shore black bank (J,H.)

**வெலங்குபார்**
பெ. சொ. தொ., பாம்பன் வெலங்கு பார்; Velangu—further; The bank near Pamban lying further from shore; i. e. Pamban outer bank ((J.H.)

**வெல்லடி**
பெ. சொ., பரதவர் மீன்பிடி கருவி (அ. சி.)

**வெள்வாயன் சங்கு**
பெ. சொ. தொ., சங்குவகை; வெண்ணிறச் சங்கு

**வெள்ளத்துரிப்பு**
பெ. சொ. தொ., மிகுதியான கடல் நீரோட்டம்

**வெள்ளம்**
பெ. சொ., நீரோட்டம், கடல் நீரோட்டம்

**வெள்ளறா**
பெ. சொ., மீன்வகை: Penaeus Indicus

**வெள்ளறால்**
பெ. சொ., மீன்வகை: Penaeus Indicus

**வெள்ளாவலை**
பெ. சொ. தொ., வலைவகை. பெருவலை போன்ற அமைப்புடையது. இவ்வலை அரிசிமாக்கஞ்சியில் அடிக்கடி நனைக்கப் படுவதால் இதற்கு உறுதி மிகுதி. இதன் மடி சணல் நூலினால் முடியப்பட்டு துவர்ச்சாயம் ஊட்டப் பெற்று கனமான முக்கோணப்பை போல விளங்கும். இவ்வலை மூலம் கடலில் தொழில் செய்ய 6 பேர் தேவைப் படுவர்; 2 கட்டுமரம் அல்லது தோணிகளில் புறப்படுவர்.

**வெள்ளியமலைகரைபார்**
பெ. சொ. தொ., Velliamalaikarai Par; Inner bank of Vellai malai; Karai—inshore i.e. inner in contrast to Velangu, outer; Vellaimalai; a white and conspicious sand dune near Kilakkarai (J. H.)

**வெள்ளி வயிறு**
பெ. சொ. தொ., மீன்வகை. இராமநாதபுர மாவட்டத்தில் கிடைக்கும் மீன்; எலும்பு நிறைந்ததும் கொழுப்புக் குறைந் ததுமான மீன்; சமைப்பதற்கு ஏற்றது.

**வெள்ளைக் கெழுத்தி**
பெ. சொ, தொ., மீன்வகை: Arius Jella (white cat fish)

**வெள்ளைக் கெளிறு**
பெ. சொ தொ., பார்க்க—மேலது

**வெள்ளைக்கோல் சுறா**
பெ. சொ. தொ., மீன்வகை: Hemigaleus belpouri

**வெள்ளைச் சுறா**
பெ. சொ. தொ., சுறாமீன்வகை. இது 25 அடி முதல் 40 அடி வரை நீண்டு வளரும். இதன் அடிப்பாகத்தில் வாய். வாயினடியில் 6 வரிசையான கத்தி போன்ற கூர்மையான பற்கள் உண்டு. இதனடியில் நிறம் வெண்மையாகக் காணப் படும். எலும்பில்லாத மீன் (அ. சி.)

**வெள்ளை பூண்டுச் சங்கு**
பெ. சொ. தொ., சங்குவகை. அளவில் சிறிய சங்கு. வெண்மையானதும் பூண்டு போன்ற அமைம்புடையதுமான சங்கு வகை

**வேடாங் கயிறு**
பெ. சொ. தொ., பாயின் மேற் பகுதியில் உள்ள ஒரு கயிறு

**வேம்பார் பெரியபார்**
பெ. சொ. தொ., Vembar Periya Par; Large bank lying off Vembar village; Peria—large (J.H.)

**வேரித்து**
பெ. சொ., பரதவர் மீன்பிடி கருவி (அ. சி.)

**வேளா மீன்**
பெ. சொ., மீன்வகை. இம்மீன் வலைப்படுவதோ, காண் பதோ தீய சகுனமென்பர் பரதவர்

**வைப்பார் பெரியபார்**
பெ. சொ. தொ., Vaippar Periya Par; Large bank lying off Vaippar Village (J.H. )

**வௌவால்**
பெ. சொ. மீன்வகை. வௌவால் போன்ற தோற்றமுடை யது. திருக்கை மீனின் வகை.

# 7

# தொழிற்கலைச் சொற்கள் —ஓர் ஆய்வு

'தொழிற்கலைச் சொற்கள்' எனும் மகுடமிட்ட முன்னியல் பற்றிய ஒரு சுருக்கமான விவரணமே 'தொழிற்கலைச் சொற்கள் —ஓர் ஆய்வு' எனும் இவ்வியலாகும். முன்கண்ட தொகையில் இடம் பெற்றுள்ள சொற்கள் இவ்வியலில் ஒரு பகுப்பாய்வுக்கு உட்பட்டுள்ளன. பெருவாரியான மக்கள் செய்யும் மீன்பிடி தொழில் முதல் சிறுபான்மையோர் செய்யும் உப்பளத் தொழில் வரை உள்ள எல்லாத் தொழில்களிலும் பயன்படும் சொற்களை ஒரு நோக்காகக் காணலாம். பெருவாரியான கலைச்சொற்கள் புழங்கும் தொழில் முதல் சிறுபான்மை கலைச்சொற்கள் புழங்கும் தொழில்வரை உள்ள எல்லாத் தொழில்களிலும் பயனாகும் சொற்களை இன்னொரு நோக்காகக் காணலாம். சமயம், சமூகம், தொழில், பால் எனும் பிரிவுகளின் எதிரொலி யைத் தரும் சொற்களை வேறொரு நோக்காகக் காணலாம். இவையேயன்றி இலக்கணப் பார்வையிலும் இத்தொகையைப் பார்ப்பதற்குச் சாத்தியக்கூறுகள் உள்ளன.

முதல் நோக்கு—பரதவ சமூக மக்களில் பெரும்பான்மையானவர் மீன்பிடி தொழிலில்தான் ஈடுபட்டுள்ளனர். இதனுடன் ஒட்டிய துணைத்தொழிலாக மீன் விற்றல், உலர்மீன் தயாரித்தல், உலர் மீன் விற்றல் ஆகியவற்றைக் கருதலாம். இத்தொழிலுடன் சேர்ந்த சார்புத்தொழிலாக வள்ளம் முதலானவை அமைத்தல், வலை பின்னுதல், கிழிந்த வலையைச் சீர்செய்தல் ஆகியன கருதப்படலாம். இம்மூன்றும் மீன்பிடி தொழில் எனும் பொதுத் தலைப்பின் கீழ்க் கருதப்படின் இவற்றைச் செய்து வாழ்வோர் பேரெண்ணிக்கையாகி முதலிடம் பெறுவர். இரண்டாம் இடம்

பெறும் தொழிலாளர் சங்கு, முத்துக்குளியராவர். ஈற்றிடம் பெறுவோர் உப்பளக்கூலித் தொழிலாளர் எனலாம்.

இரண்டாம் நோக்கு—முற்கண்ட கலைச்சொல் தொகுதியில் முதலிடம் பெறும் சொற்கள், முதல்நோக்கில் முதலிடம் பெறும் மீன்பிடி தொழிலில் வழங்கப்படும் கலைச்சொற்களாகும். அவ்வாறே அவ்வரிசையில் கண்ட தொழில்படி, தொழிற்கலைச் சொற்களும் எண்ணிக்கையில் இடம் பெறுகின்றன. இறுதியாக கடற்கரைத்திணையின் முதல், கருப்பொருள்கள் பற்றிய சொற்கள் இடம் பெறுகின்றன. அரணிவாடு, வாணிவாடு, படு குழி, தருவை, கழி, கச்சாங் காத்து, சூறாவளி ஆகிய முதற் பொருட் பெயர்களும் உணவு, மீன், தாவரம், பறவை ஆகிய கருப்பொருட் பெயர்களும் இடம் பெறுகின்றன.

மூன்றாம் நோக்கு—சமயம், சமூகம், தொழில், பால் எனும் பிரிவுகளின் எதிரொலியைத் தரும் சொற்களாகக் காணல் எனலாம்.

முன்னர்க்குறித்தபடி இவ்விரு மாவட்டங்களில் வாழ்கிற பரதவர்களில் பெரும்பான்மையானவர் ரோமன் கத்தோலிக்கர். இரண்டாம் இடம் பெறுபவர் இந்துக்கள். மூன்றாமிடம் பெறு பவர் முகமதியர். வள்ளத்தின் சுற்றுப்புறப் பலகையான 'மாதாபலகை', முத்துக்குளிக்கும் இடமான 'குருக்ஸியன் பார்' 'திருச்செந்தூர் தேரடி புடித்தபார்', 'படுத்தமரைக்கான் (மரிக்கான்) பார்' ஆகிய பெயர்களை நோக்கின் சமயச்சாயல் புலப்படும். வள்ளம் கடலில் பத்திரமாகப் போய்த்திரும்ப மாதா வின் அருள்வேண்டி சூட்டப்பட்ட பெயர் 'மாதாபலகை' யாகலாம். குருக்ஸ் அல்லது குருஸ் எனும் சொல்லுக்குச் சிலுவை என்பது பொருள். ஆகவே இப்பெயரும் கிருத்துவத் தாக்கத்தினால் உண்டான பெயராகும். மரக்கலராயராக இருந்து கடல்தொழிலில் தொடர்புடையராக இருந்த முகமதியர்களின் தாக்கத்தைப் 'படுத்த மரைக்கான்பார்' எனும் முத்துக்குளியிடப் பெயர் புலப்படுத்துகிறது. 'திருச்செந்தூர் தேரடி பிடித்தபார்' எனும் பெயரில் திருச்செந்தூர் முருகன் கோயில் தேர் இடம் பெற்றுள்ளதும் இவ்வாறே கவனிக்கத்தக்கது.

பொருளாதாரத்தை அடிப்படையாகக் கொண்ட சமூகப்பிரிவு களை வட்டக்காரர், லாஞ்சிக்காரர், வள்ளக்காரர், சம்பூா

னோட்டி, முதலாளிமார் எனும் சொற்கள் புலப்படுத்துகின்றன. பெருந்தொகை போட்டு இயந்திரச் சாதனங்கள் மூலம் மீன்பிடி தொழிலில் ஈடுபடுபவர் லாஞ்சிக்காரர், முதலாளிமார் என அழைக்கப்படுகின்றனர். சம்மாட்டியார் அல்லது வள்ளத் தலைவர் மூலம் முதல் போட்டு வட்டி (வட்டம்) பெற்று வாழும் செல்வர் வட்டக்காரர் என அழைக்கப்படுவர். இவ்வாறான பெயர்கள் இவர்தம் சமூக, பொருளாதார நிலைமைகளைப் புலப்படுத்துவதாகக் கொள்ளலாம்.

தொழில் பிரிவுகளைச் சுட்டும் சொற்களாகக் 'குளியாள்', 'மீன் பிடிக்கிறவர்', 'பரமந்தாடி' எனும் பெயர்களைக் கொள்ளலாம். முத்துக்குளித்தல், சங்கெடுத்தல் தொழிலில் ஈடுபட்டு வாழ்க்கை நடத்தும் பரதவர்கள் 'குளியர்', 'குளியாள்' என அழைக்கப் படுகின்றனர். இவ்வாறு குளிக்கும் தொழில் புரிபவருக்குச் சங்கு, முத்து இருக்குமிடங்களைக் காட்டித் தருபவர் 'பரமந்தாடியர்' என்றழைக்கப் படுகின்றனர். மீன் பிடிக்கும் தொழில் செய்ப வரை மீன் பிடிக்கிறவர் என்றே அழைக்கின்றனர்.

மீன் பிடித்தல், முத்து, சங்கு குளித்தல் போன்ற தொழில்களை ஆடவரே செய்கின்றனர். மகளிர் இவர்க்குத் துணை நின்று மீன் உலர்த்தல், மீன் விற்றல் போன்ற தொழில்களில் ஈடுபட்டு இன்னொரு வருவாய் தேடுகின்றனர். உழவுத் தொழில், கால் நடை மேய்த்தல் தொழில் ஆகிய தொழில்களில் ஈடுபடும் ஆடவர்க்கு உதவியாக அவர்தம் துணைவியர் முதலான பெண்டிர் ஈடுபடுதல் போலவே மீன்பிடி தொழிலிலும் ஆடவரைச்சார்ந்த மகளிர் ஈடுபடுகின்றனர். முன்னர்க் காட்டியபடி ஓரோவழி மகளிர் உப்பளங்களுக்குப் பொருளீட்டச் செல்லுதலுமுண்டு.

இவ்வாறான பிரிவுகளைப் புலப்படுத்துகிற தொழிற்கலைச் சொற்கள் பெரும்பாலும் பெயர்ச்சொற்களாக உள்ளன. இப்பெயர்ச்சொற்கள் மீண்டும் கருவிப்பெயர், களப்பெயர், இடப்பெயர் எனப் பலவாறு பகுப்புக்குள்ளாக்கப் படலாம். தண்டு, மச்சுவா, வலை முதலானவை கருவிப்பெயர்கள். பேர்னாந்துபார், நகராபார் முதலானவை களப்பெயர்கள். துறை, பாத்தி முதலானவை இடப்பெயர்கள். சங்கு, மீன் வலை ஆகியனவற்றின் வகைகளையும் சுட்டுகிற பெயர்கள் பலப்பல. அவை இயற்பெயர்களாகக் கருதத்தக்கன. பெயர்ச்

சொற்றொடர்களுக்குக் கரைவலை, நஞ்சுதண்ணி வாய்க்கால் போன்றவை எடுத்துக்காட்டுகள். இவ்வாறே தொழிற் பெயருக்கு 'அடசுதல்' எனும் சொல்லையும் வினையால் அணை யும் பெயருக்கு 'குளியர்' எனும் சொல்லையும் உதாரணமாகக் காட்டலாம். இவ் அகராதியில் இடம்பெற்றுள்ளனவற்றுள் பெரும்பான்மையானவை தொடர்களாகும். இவை ஒன்றுக்கு மேற்பட்ட சொற்களின் கூட்டாக விளங்குகின்றன. பொதுப் பெயரும், சிறப்புப் பெயரும் இணைந்தவை இப்படிப்பட்டவை. உதாரணம்—விரால்வலை. பல்வகைப்பட்ட வலைகளுள் இவ்வலை விரால் பிடிக்கத்தோதுவான வலையாகும். 'கண் ணாடி' எனும் பெயர் பொதுப் பெயரானாலும் சங்கு, முத்துக் குளியர் கண் காப்புக்கு அணியும் கண்ணாடியையே இச்சொல் புலப்படுத்துகிறது. இப்படிப்பட்ட சொற்கள் பல இத்தொகை யில் இடம் பெற்றுள்ளன. எழுத்தாணிச் சங்கு, ஐவிரல்சங்கு என்பவை போன்றன காரணப்பெயர்கள் ஆகும். ஆக, இவ்வாறு இவ் அகராதியில் இடம் பெற்றுள்ள சொற்கள் இலக்கண நோக்கிலும் பார்க்கத்தக்க அளவுக்குச் சிறப்பம்சம் பொருந்தியனவாக இருத்தல் நோக்கத் தக்கது.

இவ்வியலில் இதுவரை பார்த்த செய்திகளின் சாராம்சமாகக் கீழ்க்கண்ட கருத்தினைக் கொள்ளலாம். கலைச்சொற்கள் தொழில் அடிப்படையிலும், தொழிலாளர் எண்ணிக்கை அடிப் படையிலும் நோக்கப்படலாம். இவையல்லாமல் சமூகம், சமயம் போன்ற பிரிவுகளைப் பிரதிபலிப்பனவாகவும் கொண்டு நுணுக்கமாக ஆய்வு நடத்தலாம். இலக்கண நோக்கை முதன்மை யாகக் கொண்டும் இவர்தம் கலைச் சொற்களை ஆய்வதற்கும் ஈண்டு வழி உண்டு. எனவே முன்னியலில் தரப்பட்டுள்ள தொழிற்கலைச்சொற்கள், இனிவரும் ஆய்வாளரால் பலவகை யிலும் ஆயப்படுவதற்குத் தகுந்த களங்களைத் தம்முள் கொண்டிருக்கின்றன என்று சுருங்கச் சொல்லலாம்.

## முடிவுரை

தமிழ்நாடு தொன்மையானது. இந்நிலத்தின் பூர்வீகக் குடிமக்க ளுள் பரதவர் ஒருவர். பரதவர் கடற்கரையில் வாழ்பவர். மீன் பிடித்தல் இவர்தம் முதன்மைத்தொழில். சங்கு, முத்துக்

குளித்தல் பருவகாலத் தொழில்கள் ஆகும். கடற்கரையில் வசிப்பதால் இவர்க்குக் கரையார் எனும் பெயருமுண்டு. இராமநாத புரம், திருநெல்வேலி மாவட்டங்களின் கடற்கரைப் பரதவர் தமிழகத்தின் பிற கடற்கரை மாவட்டப் பரதவர்களின்றும் வேறுபட்டவர். மன்னார்வளைகுடா, பாக் நீர்ச்சந்தி பகுதிகள் முத்துப்படுகைகளும், சங்குப் படுகைகளும் நிறைந்த பகுதியாதலின் இவர்கள் முத்துக்குளித்தும், சங்கெடுத்தும் தொழில் நடத்த வாய்ப்புப் பெற்றிருக்கின்றனர். ஆகவே இவர்தம் தொழில்களின் எண்ணிக்கை கூடுகின்றது. தொழில்களின் எண்ணிக்கை கூடுதற்கேற்பத் தொழிற்கலைச் சொற்களின் எண்ணிக்கையும் கூடுகின்றது. இத்துணைத் தொழில்களில் பயின்று வழங்குகிற பல நூற்றுக்கணக்கான சொற்கள் இவர்தம் கல்வி, சமயம், சமூகம், தொழில், பால், பொருளாதாரம் எனும் பிரிவுகளைப் புலப்படுத்தும் அம்சங்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குகின்றன. இத்தொழிற்கலைச் சொற்கள் ஒரு கலைக்களஞ்சியமாக உருவாகுமளவுக்கு அகன்மையும் ஆழ்மையும் கொண்டவை என்பது தெளிவு.

## துணை நூற்பட்டியல்

### அ. தமிழ்


(i) 1. இராமன், டாக்டர் கே.வி., பாண்டியர் வரலாறு, 1977
2. சதாசிவப்பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, 1968
3. சோமலெ., இராமநாதபுரம் மாவட்டம், 1972
4. சோமலெ., திருநெல்வேலி மாவட்டம், 1963
5. பாரதியார் கவிதைகள், 1976
6. வானமாமலை, நா., தமிழர் வரலாறும் பண்பாடும், 1966

(ii) 1. அபிதானசிந்தாமணி, 1983
2. கழகத்தமிழ் அகராதி, 1964
3. தமிழ்மொழி அகராதி, 1981
4. மீன்வளத்துறைச் சிறப்புச் சொல்லகராதி, 1977

(ii) 1. அகநானூறு, 1981; 2. ஐங்குறுநூறு, 1981
3. கலித்தொகை, 1981; 4. குறிஞ்சிப்பாட்டு, 1981
5. குறுந்தொகை, 1981; 6. சிலப்பதிகாரம், 1959

7. சிறுபாணாற்றுப்படை, 1981
8. திருமுருகாற்றுப்படை, 1981
9. நற்றிணை, 1981; 10. நெடுநல்வாடை, 1931
11. பட்டினப்பாலை, 1981; 12. பதிற்றுப்பத்து, 1981
13. பரிபாடல், 1981; 14. புறநானூறு, 1981
15. பெரும்பாணாற்றுப்படை, 1981
16. பொருநராற்றுப்படை,1981; 17. மணிமேகலை, 1955
18. மதுரைக்காஞ்சி, 1981; 19. மலைபடுகடாம், 1981
20. முல்லைப்பாட்டு, 1981

ஆ. ஆங்கிலம்

(i) 1. Bruce Foote, R., Indian Pre-historic and Proto Historic Antiquities, Notes on their Ages and Distribution.
2. Caldwell, Bishop, History of Tinnevely, 1982
3. Heras, Journal of Oriental Research, 1936
4. James Hornell, Madras Fisheries Bulletins, Vol. 1-18
5. ——————, The Outrigger Canoes of Indonesia, 1920
6. Kailasapathy, K., Tamil Heroic Poetry, 1968
7. Krishnaswamy, V.D., Progress in Pre-history, Ancient India.
8. Nilakanta Sastri, K.A., A History of South India, 1976
9. ——————. Foreign Notices of South India, 1939
10. Sauliere, A., Red Sand, Madurai, 1947
11. Srinivasa Iyengar, M., Tamil Studies, 1982
12. Subramanian, N., Sangam Polity, 1980

(ii) 1. Ramanathapuram District Gazatteer, 1972
2. Report of the Committee for organized Development of Marine Fisheries with small mechanised Fishery Boats in Támil Nadu, 28th Feb. 1978
3. The Illustrated weekly of India, January, 1983

# செங்கற்பட்டு, சென்னை மாவட்டக் கடற்கரைப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள்

## 1

பரதவர் சமூகம் பற்றிய ஆய்வு தற்போது பெருவிருப்புடன் மேற்கொள்ளப்பட்டு வருகிறது. இவர்தம் நாட்டார் பாடல்கள், தொழிற்கலைச் சொற்கள், பண்பாட்டு மரபுகள், பழக்க வழக்கங் கள் ஆகியன சேகரிக்கப்படுகின்றன. இத்துறையில் மேலாய்வுகள் நிகழ்ந்து வருகின்றன. தமிழ்நாட்டின் தொல்குடிகளுள் ஒரு குடியினர் இவர். மானுடவியல், சமூகவியல், மொழியியல் ஆகிய துறை சார்ந்த ஆய்வுகளுக்கு இச்சமூகம் நல்ல ஓர் ஆய்வுப் பரப் பாகத் திகழ்கிறது.

இக்கட்டுரையாளர் தஞ்சாவூர்த் தமிழ்ப் பல்கலைக்கழக நிதி யுதவியுடன் குறுங்கால ஆய்வு மேற்கொண்டு, களப்பணி செய்து 'இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டக் கடற்கரைப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள்' திரட்டி, ஆய்வேடு (ஆகஸ்ட் 1983) அளித்துள்ளார். இவரை ஆசிரியராகக் கொண்ட 'யாழ்ப் பாணக் கரையோரப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள்—ஓர் அறிமுகம்' எனும் கட்டுரை 'தமிழ்க்கலை' (டிசம்பர் 1983ர் இதழில் வெளியாயிற்று. 'மட்டக்களப்பு மாவட்டப் பரதவ) தொழிற்கலைச் சொற்கள்—ஓர் அறிமுகம்' எனும் கட்டுரை' இக்கட்டுரையாசிரியரை ஆசிரியராகக் கொண்டு 'தமிழ்க்கலை, இதழில் (டிசம்பர் 1984) வெளி வந்துள்ளது. 'கன்னியாகுமரி மாவட்டக் கடற்கரைப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள்' எனும் கட்டுரை இதே ஆசிரியரால் இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற இருபதாவது கருத்தரங்க ஆய்வுக்கோவையில்

(மே 1988) வெளியானது. மேற்சொன்ன கட்டுரைகளோடு 'செங்கற்பட்டு, சென்னை மாவட்டக் கடற்கரைப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள்' எனும் இக்கட்டுரையையும் சேர்த்து ஒருங்கு நோக்கினால், இராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமரி, யாழ்ப்பாணம், மட்டக்களப்பு, செங்கற்பட்டு, சென்னை ஆகிய ஏழு மாவட்டங்களில் உள்ள பரதவர் தொழில், தொழிற்கருவிகள் இன்னபிறவற்றுள் காணலாகிற ஒற்றுமை வேற்றுமைகள் புலனாகும்.

## 2

இனி செங்கற்பட்டு, சென்னை மாவட்டக் கடற்கரைப் பரதவர் தொழிற்கலைச் சொற்களை அகர வரிசையில் காணலாம்.

அக்கினிவலை
அணியம்
அந்திவலை
அமரம்
அமுக்கம் 5
அரைவலை
அல்சா
அல்சாதண்டு
ஆத்மசேறு
ஆலந்தழை 10
இடம்புரி
இடைவலை
இரம்பிணிவலை
இராமேஸ்வரம்
இருபிறவி 15
இருப்பால்கட்டை
இருவாவெள்ளம்
இறவு
இறா
இறால் 20
இறுக்காவலை
ஈர்க்கை
உல்லம்வலை
எரிகட்டுவலை
ஏந்துச்சாவலை 25
ஏரா
ஏறுவலை
ஒட்டுக்கயிறு
ஒட்டுமுளி
ஒளினி 30
ஓடைசேறு
ஓலை ஈக்கை
கசா
கச்சான்
கச்சான் ஈரான்காற்று 35
கச்சான்காற்று
கச்சான் கோடைக்காற்று
கச்சாவலை
கடல்சுரப்பு
கடையா 40
கட்டுக்கயிறு
கட்டுவலை
கண்ணஞ்சேறு
கண்ணு
காிசவாடுதண்ணி 45

கரைவலை
கலங்கல்தண்ணி
கல்
கல்சேறு
கவலை வலை 50
கள்ளத்தூறுமடி
கறுப்பு
கன்னிவலை
காடுகாட்டுதல்
காவலாளி 55
காளாக்கயிறு
கிங்காகயிறு
கீழ்த்தண்டு
கீழ்த்தண்டு கயிறு
குச்சுக்கயிறு 60
குத்துக்கட்டை
குறிப்பாஞ்சேறு
குன்னுவாடைக்காற்று
கூண்டு
கூனி 65
கெண்டைவலை
கெளிசேறு
கொடுவலை
கொண்டக்காற்று
கொண்டடிக்கட்டை 70
கொண்டல்
கொண்டைவலை
கொண்டுவலை
கொம்பு
கொம்புக்கட்டை 75
கொம்புஅண்டை
கோடைக்காற்று
கோரைப்பெட்டி
கோல்
கோவலை 80
சாத்தாரு
சிங்கெராவலை
சிறுக்காவலை
சிறுதன்னை
சிறுத்தபாவு 85
சிறுசி
சீனி
சுத்த
சுத்துக்கயிறு
சுற்றுவலை 90
செம்படிக்காமடி
செம்மானம்
சேர்ந்த
சொறுதடி
தக்கைக்கயிறு 95
தக்கைப்பூண்டு
தடவலை
தடைசி
தண்டு
தரை 100
தலைமரம்
தலையா
தல்வாடு
தளா
தாழை 105
திமி
துடுப்பு
துண்டுக்கயிறு
துண்டு சேறு
தூண்டில்கயிறு 110
தூரிவலை
தெண்ணிகரசலா
தெண்ணிதெம்மா ஓழினி
தெண்ணிவெள்ளம்
தெம்மாவெலங்கு 115
தெழுவாஞ்சேறு
தெளிவுதண்ணி
தென்னங்கோடைக்காற்று
தொட்டிவலை

நடுத்தலைக்கட்டை 120
நடுமடி
ஒருமரம்
நண்டு
நண்டுவலை
நெக்குமடி. 125
நேர்ஈரான்காற்று
நேர்கோடைக்காற்று
நேர்வெலங்கு
பக்கவாத்துக்கட்டை
பக்கிரிசேறு 130
பங்காயம்
படி
பட்டி
பண்சேறு
பண்ணாக்கு 135
பண்ணுகயிறு
பண்பா
பலவை
பல்லக்கு
பறி 140
பாச்சுவலை
பாஞ்சன்னியம்
பாதடி
பார்க்கட்டி
பாறை 145
பிளாஸ்டிக் முள்ளம்
புங்கந்தழை
புரைமாறி
பூமுடி
பெரியசேறு 150
பெரியதன்னை
பெருக்காவலை
பெருத்தபாவு
பெருமாகட்டை
பைண்டவலை 155
பொறுவாங்சேறு
போருக்குத்திரும்புதல்
போயா
மகரம்
மசி 160
மணிக்கால்
மணிவலை
மண்டவா
மதவலை
மாஞ்சோறு 165
மால்
மால்மடி
மிதப்புவலை
மீன்தடி
முணாமரம் 170
முள்ளம்
மேங்காகயிறு
மேமறி
மேல்தண்டு
மேல்தண்டுகயிறு 175
மேல்பலகை
மொண்டு
யானைமீன்
லா ஈர்க்கை
வண்டத்தண்ணி 180
வண்ணிகரசலா
வண்ணிவாடா ஒழினி
வண்ணிவெள்ளம்
வலம்புரி
வறி 185
வாங்கிசுழல்
வாடாவெலங்கு
வாடைக்காற்று
வாறி
வெள்ளாவலை 190
வேப்பந்தலை

மேற்கண்ட தொழிற்கலைச் சொற்களில் கறுப்பு, சினி, சேர்ந்த, தரை, பார்க்கட்டி, பாறை என்பன கடல் நீருக்கடியில் உள்ள நிலப்பகுதியைக் குறிப்பனவாகும். ஆத்மசேறு, ஓடை சேறு, கண்ணாஞ்சேறு, கல்சேறு, குளிப்பாஞ் சேறு, கொயிர் சேறு, கெளிசேறு, துண்டுசேறு, தெழுவாஞ்சேறு, மாஞ்சேறு என்பன கடல் சேற்றின் வகைகளாகும். கச்சான், கச்சான் ஈரான்காற்று, கச்சான் காற்று, கச்சான் கோடைக்காற்று, கொண்டக்காற்று, குன்னுவாடைக்காற்று, தென்னங் கோடைக்காற்று, நேர் கோடைக்காற்று என்பன காற்றின் வகைகளாகும். ஒளினி, கடல்சுரப்பு, கரிசவாடு தண்ணி, கலங்கல் தண்ணி, தல்வாடு, தெண்ணிதெம்மா ஒளினி, தெண்ணி வெள்ளம், தென்னிகரசலா, புரைமாறி, மேமறி, வண்டத்தண்ணி, வண்ணிவாடா ஏளினி, வண்ணி வெள்ளம் ஆகியன கடலில் உள்ள நீரோட்டங்களின் பெயர்களாகும். கண்ணு, கல், கள்ளத்தூறுமடி, கீங்கா கயிறு, சிறுத்தபாவு, சிறுஙி, செம்படிக்காமடி, நடுமடி, நெக்குமடி, பலவா, பெருத்தபாவு, போயா, மடிமால், மேங்காகயிறு, மொண்டு ஆகியன வலையின் பகுதிகளாகும். இருப்பாக்கட்டை கடையா, குத்துக் கட்டை, கொண்டடிகட்டை, கொம்புஅண்டை, தலையா, நடுத் தலைக்கட்டை, நடுமரம், பக்கவாத்துக்கட்டை, பெருமாகட்டை என்பன மரத்தின் பாகங்களாகும். காளாக்கயிறு, குச்சுக்கயிறு, கொம்புக் கயிறு, சுத்துக்கயிறு, தக்கைக்கயிறு, துண்டுக்கயிறு, தூண்டில் கயிறு, கயிறு வகைகளாகும். மணிக்கட்டை என்பது வலை மிதப்பதற்குப் பயன்படுத்தும் எருக்கந்தண்டின் துண்டமாகும். மணிக்கால் என்பது வலை கடலுள் ஆழ்வதற்குக் கோர்க் கப்படும் சுடப்பட்ட மண் உருண்டையாகும். இரம்பிணிவலை போர்ச்சுகீசியரால் அறிமுகப்படுத்தப்பட்ட கரைவலையாகும். மண்டவா என்பது சுறா, திருக்கை ஆகியனவற்றைப் பிடிக்கப் பயன்படுத்தும் இரும்பாலான, சூலம் போன்ற கருவியாகும். ஈர்க்கை, ஒட்டுக்கயிறு, ஓலை ஈர்க்கை, கட்டுக்கயிறு, கீழ்த்தண்டு, கொம்பு, கோல், சுத்தகடையா, சொறுதடி, தண்டு, தளா, நடுமரம், பண்ணுகயிறு, பண்பா, பாதடி, பூமுடி, லாஈர்க்கை என்பன கட்டுமரத்தின் உதிரிப்பாகங்களைக் குறிக்கும் சொற்களாகும். அணியம், அமரம், அமுக்கம், அல்சா, ஏரா, ஒட்டுமுளி, கசா சாத்தாரு, சிறுதன்னை, தண்டு, தலைமரம், துடுப்பு, பங்காயம், பண்ணாக்கு, பெரியதன்னை, முணாமரம், மேல்பலகை, வாறி என்பன பெரிய படகின் பாகங்களாகும். காடுகாட்டுதல் என்பது கடலில் ஒரு குறிப்பிட்ட இடத்தைச் சுட்டிக்காட்டுதலாகும்.

கடல் அடியில் உள்ள சேறு, பாறை, மணல், மலை போன்ற இடங்களைக் கண்டறிய கடலில் இருந்து கொண்டே கரையில் உள்ள கோமரம், கோயில், மசூதி, மலை இவற்றை அடையாள மாகக்கொண்டு தெம்மா வெலங்காகவும், சேர்வெலங்காகவும், வாடா வெலங்காகவும் கணக்கிட்டு அக்குறிப்பிட்ட இடத்தைச் சுட்டுவர். அக்கினிவலை, அந்திவலை, அரைவலை, இடைவலை இறுக்காவலை, உல்லம்வலை, எரிக்கட்டுவலை, ஏந்துகச் சாவலை, ஏறுவலை, கட்டுவலை, கரைவலை, கவலைவலை, கன்னிவலை, கொடுவலை, கொண்டு வலை, கொண்டைவலை, சிங்கெராவலை, சிறுக்காவலை, சுற்றுவலை, தடவலை, தூரி வலை, தொட்டிவலை, நண்டுவலை, பாச்சுவலை, பெருக்கா வலை, பைண்டவலை, மணிவலை, மதவலை, மிதப்பு வலை, வெள்ளாவலை என்பன வலையின் வகைகளாகும். காவலாளி என்பது கோலாமீனைக் குறிக்கும் தொழிற்களக் குழூஉக்குறிச் சொல்லாகும். செம்மானம் என்பது இக்கோலாமீனின் திரட்சி யில் தோன்றும் வண்ணமாகும். ஆலந்தழையும் கத்தாளையும் வேப்பந்தழையும் கோலா மீனைப் பிடிக்கப் பயன்படுத்தும் தழைகளாகும். இத்தழைகளின் பயன்பாடு தொழில் நுணுக்க உத்தியாகும். மீன்களைக் கவரச் சிறுமரங்களை வேருடன் பெயர்த்தெடுத்துச் சென்று கடலில் போடுவர். சிறு மீன்கள் மரத்தின் இடுக்குகளில் கூடும். மீனவர் இவற்றை அள்ளிவருவர். கடலில் இடும் இம்மரத்தை இவர்கள் முள்ளம் என்பர். இம் மரங்கள் விரைவில் அழுகி அழிந்து விடும். ஆகவே வேறு மரங்களைப் புதியதாக இடவேண்டும். இதனைத் தவிர்ப்பதற் காகத் தற்போது பிளாஸ்டிக்கால் ஆகிய முள்ளத்தைப் பயன் படுத்துகின்றனர். இது பல்லாண்டு காலம் அழியாதது. இதனைப் பிளாஸ்டிக் முள்ளம் என அழைக்கின்றனர். இது தொழில் நுட்பவியலார் உருவாக்கிய கருவி. இங்ஙனமாக கலைச்சொற் களை நோக்கும்போது அவற்றின் பெயர் ஆய்வே பலதுறை ஆய்வாக விரியும்.

## 3

செங்கற்பட்டு மாவட்டத்தில் பழவேற்காடு எனும் ஊர்ப்பகுதி யில் உள்ள பரதவரின் தொழிற்கலைச் சொற்களை அகர வரிசையில் பார்ப்போம்.

**அண்டைகள் :** கட்டுமரத்தின் தலையாப்பகுதியில், மேல் நோக்கிப் பிறை போல வளைவாகச் செதுக்கப்பட்டு, கட்டு மரத்துடன் பிணைக்கப்படும் இரண்டு அல்லது மூன்று கட்டைகள் அண்டைகள் எனப்படும்.

**அலைகிண்டுதல் :** அலை புரட்டிப் புரட்டி எடுத்தல்

**அலையடி :** கட்டுமரத்தை அலை வந்து மோதும். இதனை 'அலையடி' என்பர். கயிற்றால் கட்டுமரத்தைத் தளர்வு இல்லாமல் கட்டுதல் வேண்டும். இல்லை யெனில் அலையடி தாங்காமல் கயிறு அவிழ்ந்து கட்டுமரம் துண்டு துண்டாகி விடும். இம்மரத்தில் தொழில் செய்யச் சென்றவர் கடல் நீரில் மிதக்க நேரிடும்.

**இரைகுத்திப்போடுதல் :** தூண்டில் கயிற்றின் முனையில் உள்ள உலோகக் கொக்கியில் சிறு மீனைக் குத்திப் போடுதல்.

**ஒட்டவா :** அருகில் வா

**ஒண்டி மப்பு :** ஒற்றை மேகம்

**ஒத்தைக் கருமேகம் :** கடலில் தொழில் செய்யும் இடத்தே ஒற்றைக் கருமேகம் உருவானால் அபாயம் விளையும். இது யாரை எப்படித்தாக்கும் எனக் கூற முடியாது. ஆகவே இதைக் கண்டு மீனவர் அஞ்சுவர்.

**ஒருபாடு :** மடி வலையால் ஒருமுறை மீன் பிடித்தல்.

**கச்சாங்காத்து :** குளிரும் வெக்கையும் இல்லாத காற்று.

**கடல் சுரப்பாய் உள்ளது :** கடலின் பரப்பு அலை மிகுந்து இருத்தல்

**கடல் மாதா :** கடல் அன்னை; கடல் தெய்வம்.

**கடல் வயலாய் உள்ளது :** கடலின் பரப்பு அலையில்லாமல் ஏரி, குளம் போல அமைதியாக இருத்தல்.

**கடையா :** கட்டுமரத்தின் பின்பக்கம். இப்பகுதி அகன்று இருக்கும்.

**கட்டு :** கட்டுமரம்

**கட்டுமரம் :** ஐந்து அல்லது ஆறு மரத்துண்டுகளைக் கயிற்றால் கட்டி உண்டாக்கப்படும் மிதவை, கடல்

தொழிலுக்குச் செல்லும் முன் இங்ஙனம் தளர்வு இல்லாமல் இறுகக் கட்டித் தயாரிக்கும் வேலையேபிரதானமானது என்பர். கட்டுமரம் : காரணப்பெயர்.

**கண்கள் :** வலை முடிச்சுகளுக்கிடையே காணப்படும் இடை வெளி. இதனை 'வலைக்கண்' என்பர்.

**கதிர் :** நூலிழைகளை முறுக்கேற்ற உதவும் கருவி. இக் கதிரால் நூலை முறுக்கேற்றிய பின்னரே வலை முடிவர்.

**கப்பல் :** பாரிய வடிவமுடைய கடல் கலம். இது பயணக் கப்பல், சரக்குக்கப்பல், போர்க்கப்பல் எனப் பல வகைப் படும்.

**கரண்ட் :** சில மீன்களுக்கு மின் சக்தி உண்டு. தொட்டால் அதிர்ச்சி தரும். மீனவர் மீன்பிடி தொழிலின்போது இச்சக்தியுடைய மீன்களிடம் விழிப்பாயிருப்பர். மீன்களின் மின்சக்தியைக் 'கரண்ட்' என்பர். இது ஓர் ஆங்கிலச் சொல்.

**கரையேத்தறது :** தொழில் முடிந்து திரும்பும் மீனவர் தமது கட்டுமரத்தைக் கரையேற்றி மணலின்மேல் கிடத்தி வைப்பர். இதனைக் 'கரையேத்தறது' எனும் சொல்லால் வழங்குவர். இது மிகவும் கடினமான பணி. கட்டுமரம் கரைக்கு அண்மையில் வந்ததும் சில நூறு அடிகளில் அலை முடிந்துவிடும். அந்த இடத்திலிருந்து கட்டுமரத்தைக் கரைக்கு ஏற்றுதல் கடினம். ஏனெனில் அவ்விடத்தில் அலை சுருண்டு கட்டுமரத்தை மீண்டும் மீண்டும் கடலுள் இழுக்கும். ஆகவே பெரிய 'ராணி அலை' போன்ற அலை கள் வரும்போது விரைந்து செயல்பட்டு வேகமாகக் கட்டுமரத்தைக் கரை மணலுக்கு ஏற்றி விடுதல்வேண்டும்.

**கவுறு :** கயிறு கட்டுமரத்தைப் பிணைக்கப் பயன்படுவது. வலையைக் கட்டுமரத்துடன் பிணைத்திருக்கவும் இது பயன்படுத்தப் படுகிறது.

**களவாணி :** திருமணமானவர்; உடலுறவுச் சுகத்தை அனுப வித்தவர்.

**கன்னி :** திருமணமாகாதவர், உடலுறவுச் சுகத்தை அனுபவிக் காதவர். இப்படிப்பட்டவர் கடலுக்குள் தொழில் செய்யத்

தனித்துச் செல்லுதல் கூடாது என்பது மீனவர் தொழில் மரபு. சில நண்பர்களோடு சேர்ந்துதான் இவர்கள் கடலுக்குள் செல்லுதல் வேண்டும்.

கன்னிக்காரன் : இதுவும் அது. (பார்க்க : கன்னி)

குத்திரி மரம் : சிறிய கட்டுமரம்

கூண்டு மாதிரி போதல் : பாதுகாப்பாகப் போதல்

கொண்டக்காத்து : சிறிதளவு வெக்கை (சூடு) உடைய காற்று.

கொன்னாடைக் காத்து : மிகவும் குளிருடைய காற்று

கோடைக்காத்து : சிறிதளவு குளிருடைய காற்று

கோல் ஏந்துறது : பெரிய கோல் ஒன்றை வைத்து ஊன்றிக் கொண்டு கட்டுமரத்தை முன்னோக்கிச் செலுத்துதல். கட்டு மர இயக்கத்திற்குக் கோல் ஏந்துதல், தளா தோவுதல் ஆகியன உதவுகின்றன.

சடை கட்டை : மிதவை; அடையாளத்தின் பொருட்டு வலையுடன் கட்டப்பட்டிருப்பது.

சம்மான் : பண்டம் ஏற்றிச் செல்லும் பெரும்படகு

சுரப்பு : அலை

சோங்கு : படகு

தம்புடுவே தூரம் போ(க)ணம் : மீன்கள் தட்டுப் பட வில்லையாதலால் இதற்காக இன்னும் சிறிது தூரம் போக வேண்டும் என்பதைக் குறிக்கும் சொற்றொடர்.

தலையா : கட்டு மரத்தின் தலைப்பக்கம். இது குறுகி இருக்கும். (தலையா குறுகியும் கடையா அகன்றும் இருக்கும்)

தளாதோவுதல் : தளா (துடுப்பு)வை வலப்பக்கம் மூன்று முறையும் இடப்பக்கம் மூன்று முறையும் தோவுதல் வேண்டும். இப்படிச் செயற்படும்போதுதான் கட்டுமரம் விரைந்து செல்லும். தளாவை எப்போதும் விரைந்து தோவுதல் அவசியம் இல்லை. அலைவரும் போது மட்டும் விரைந்து செயல் பட்டால் போதும். தளா தோவும்போது வலப்பக்கமும் இடப்பக்கமும் மாறி மாறிச் செயல்படாமல் ஒரே பக்கமாகவே செயல்பட்டால் கட்டுமரத்தின் திசை மாறிவிடும்.

தளா பிடித்தல் : தளாவைக் கையில் இறுகப் பற்றிக்கொள்ள வேண்டும். வலப்பக்கம் தளா தோவும்போது வலதுகை தளாவுடைய நடுவிலேயும் இடது கை தளாவுடைய மேல் முனையிலும் இருத்தல் வேண்டும். இடப்பக்கம் தளா தோவும்போது இடது கை தளாவுடைய நடுவிலேயும் வலது கை தளாவுடைய மேல் முனையிலும் இருத்தல் வேண்டும்.

துண்டு மப்பு : ஒரேயொரு துண்டு மேகம்

தோணி : சரக்கு அல்லது பண்டம் ஏற்றிச் செல்லப் பயன் படுவது; பெரிய அளவிலான படகு.

நாகூரார் : நாகூர் ஆண்டவர். மீனவர்கள் எம்மதத்தினராயி னும் ஆபத்துக் காலங்களில் நாகூர் ஆண்டவரை அழைத் துத் தங்களைக் காக்கும்படி வேண்டுகின்றனர். நாகூராரே, நாகூர் ஆண்டவனே என விளிக்கின்றனர். தம்மை அபாய மான நேரங்களில் நாகூர் ஆண்டவர் காப்பாற்றுவார் என மீனவர்கள் நம்புகின்றனர்.

நாங்கயிறு : சுறா மீன்களைப் பிடிக்க உதவும் தூண்டில் கயிறு.

நிழல் விழு(கிற)து : மத்தியான நேரம் ஆதல்

படவு : படகு

பனு : குழி. கடலில் ஆழம் மிகுந்த பள்ளம்.

பண்ணுவலை : இரண்டுபேர் சென்று மீன் பிடிக்கப் பயன் படுத்தும் வலை.

பரு : பரு மீன்

பாகம் : கடலாழத்தைப் பாரம்பரியத் தொழில் முறையில் குறிக்கப் பயன்படுத்தும் சொல். இது சற்றேறக் குறைய 6 அடி நீளம் உடையது. 'பனு நாலு பாகம் ஆழம் இருக்கும்' என்பது போலக் குறிப்பிடுவர்.

பாவு : எண்ணம். வலையைத் தூக்கிக் கொண்டு தொழிலுக்குப் புறப்பட்டுவிட்டால் 'அடுத்த பாவு பத்தி நெனைக்கக் கூடாது' என்பர். அதாவது வேறு எண்ணம் எதுவும் நெஞ்சில் தோன்றக்கூடாது என்பது பொருள். இத்தொழில் ஒருமித்த குவிந்த சிந்தனையுடன் செய்ய வேண்டிய தொழிலாகலின் சற்று கவனம் விலகினாலும் அபாயம்

உண்டாகிவிடும். ஆகவே தொழில் பற்றிய 'பாவு' மட்டுமே இருக்க வேண்டும் என்பர்.

புணைக்கட்டை : கடலில் மிதக்கும் தனிக்கட்டை. (புணை போல் ஆருயிர்—புறம்.)

பெரிய மரம் : பெரிய கட்டு மரம்

பூரை பொத்துதல் : கிழிந்து சிதைந்தகண்களைச் செப்பனிடுதல்.

மடி : பை வலை

மப்புவிழுதல் : மேகம் கூடி நிற்றல்

மரத்தில நிக்கிறது : கடலில் தொழில் செய்யும்போது கட்டு மரத்தில் நின்றபடி தொழில்படுதல் வேண்டும். சாதாரணமாகத் தரையில் நிற்பது போல நின்றால் அலையடியால் கட்டுமரத்திலிருந்து கடலில் தூக்கி வீசப்படுவர். கடலில் தொழிற்படும்போது நிற்றலில் ஒரு லாவகம் வேண்டும். கால் பெரு விரல்களில் உடலின் பலத்தையெல்லாம் கொண்டு வந்து அந்தப் பலத்துடன் கூடிய பெருவிரலைக் கட்டு மரத்தில் அப்பிப் பிடித்துக் கொண்டது போல வைத்துக் கொண்டு நின்றால் நிற்பது சாத்தியப்படும்.

மரம் : கட்டு மரம்

மரம் தள்ளுதல் : கட்டு மரத்தைக் கடலுக்குள் தள்ளுதல். கடற்கரை மணலில் ஏற்றி வைக்கப்பட்டிருக்கும் கட்டு மரத்தை அடுத்த முறை தொழிலுக்குச் செல்லும்போது மீண்டும் கடலுள் தள்ளுவர். மரத்தைக் கரை நோக்கித் தள்ளிவிடும் அலையைச் சமாளித்தபடி சற்றுச் சாய்வாக (அலையை நேராக எதிர்த்தால் தோல்விகிட்டும்) மிகவும் லாவகமாகக் கடலுக்குக் கொண்டு செல்லுதல். இத்தொடர் சில வேளைகளில் மீன்வேட்டைக்குச் செல்லுதல் என்றும் பொருள்படும்.

முள் : சில மீன்வகைகளுக்கு வாய்ப்பகுதியில் முள் உண்டு. வலையில் கிடைத்த இவ்வகை மீனைக் கையாளும்போது கவனத்துடன் இல்லாவிட்டால் தேள் கொட்டியது போலக் கடுப்பு தோன்றும் விதத்தில் குத்திவிடும்; இரத்தமும் கொட்டும். வாளை மீன் இத்தன்மையது. இங்ஙனம் வாளை மீனின் முள்குத்தி விரலில் இரத்தம் பெருகினால் அம்

மீனின் கழுத்துப் பகுதித் தசையைச் சிறிது கிள்ளி எறிந்து விட்டு இரத்தம் ஒழுகும் விரலை / கையைக் கடல் நீரில் தோய்ப்பர்.

ராணி அலை : சத்தம் போடாமல், பிரமாண்டமான ராட்சசன் போல் வரும் அலையை ராணி அலை என்பர். இதைச் சமாளித்துத் தாண்ட மனோதிடமும் உடல் பலமும் வேண்டும். இந்த அலை கட்டுமரத்தைப் புரட்டித் தள்ளி விடும். இந்த அலையில் அகப்பட்டுக் கொண்டு மரத்தினடி யில் மாட்டிக் கொண்டால் அடியிலிருந்து மேலெழும்ப முடியாதபடி மணலை அள்ளி வாய், மூக்கு, கண் என்று நம் உடலிலுள்ள எல்லாத் துவாரங்களுக்குள்ளும் வைத்து அடைக்குமாம் இந்த ராணி அலை. இதைக்கடக்க வேகமாகத் தளா தோவவேண்டும். அந்நேரத்தில் 'போட்டாப் போடு, துடுப்புப்போடு, துள்ளிப்போடு, அப்பிடிப்போடு, இப்பிடிப் போடு' என கூறிக்கொண்டே விரைந்து செயல்படுவர். இப்படிச் செயல்பட்டுக் கொண்டிருக்கும்போதே ஒருவர் கட்டுமரத்திலிருந்து கடலில் குதித்துக் கட்டுமரத்துக்கு முன்பாக அதே திசையில் நீந்திச் செல்லவேண்டும். ராணி அலை இவரைக் கண்டு 'இந்தப் புது எதிரி யார்?' என்று கவனிப்பதால் அதன் கவனம் சிதறி, கட்டுமரத்தைத் தாக்கும் வேகம் குறைந்து விடும் அல்லது தாக்காமல் விட்டு விடும் என்பர். இவ்வலை தாக்காமல் பதமாகச் செல்லும் போது, 'பாஞ்சிடாதே, பாஞ்சிடாதே, பாழை மாறிடாதே, படுத்துக்கிட்டா அவ, பதமாப் போவா' எனப் பாடுவர்.

ரொம்ப மேலே போறது : கடலுக்குள் அதிக தூரம் செல்லுதல்

வத்தல் : படகு/கட்டுமரம். வற்றியது/மிதப்பது.

வத்தை : இதுவும் அது.

வள்ளம் : மீன்பிடி படகு.

# 2

# கன்னியாகுமரி மாவட்டக் கடற்கரைப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள்

பரதவர் சமூகம் பற்றிய ஆய்வு தற்போது பெரு விருப்புடன் மேற்கொள்ளப்பட்டு வருகிறது. இவர்தம் நாட்டார் பாடல்கள், தொழிற்கலைச் சொற்கள், பண்பாட்டு மரபுகள், பழக்க வழக்கங்கள் ஆகியன சேகரிக்கப் படுகின்றன. இத்துறையில் மேலாய்வுகள் நிகழ்ந்து வருகின்றன. தமிழ் நாட்டின் தொல்குடிகளுள் ஒரு குடியினர் இவர். மானுடவியல், சமூகவியல் மொழியியல் ஆகிய துறை சார்ந்த ஆய்வுகளுக்கு இச் சமூகம் நல்ல ஒரு ஆய்வுப் பரப்பாகத் திகழ்கிறது.

இக்கட்டுரையாளர் தஞ்சாவூர்த் தமிழ்ப்பல்கலைக்கழக நிதியுதவியுடன் குறுங்கால ஆய்வு மேற்கொண்டு, களப் பணி செய்து 'இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டக் கடற்கரைப் பரதவர் தொழிற்கலைக் சொற்கள்' திரட்டி ஆய்வேடு (ஆகஸ்டு, 1983) அளித்துள்ளார். இவரை ஆசிரியராகக் கொண்ட 'யாழ்ப்பாணக் கரையோரப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள்—ஓர் அறிமுகம்' எனும் கட்டுரை 'தமிழ்க் கலை' (டிசம்பர், 1983) இதழில் வெளியாயிற்று. 'மட்டக்களப்பு மாவட்டப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள் -ஓர் அறிமுகம்' எனும் கட்டுரை, இக்கட்டுரையாசிரியரை ஆசிரியராகக் கொண்டு 'தமிழ்க்கலை' இதழில் (டிசம்பர், 1984) வெளிவந்தது. மேற்சொன்ன கட்டுரைகளோடு 'கன்னியாகுமரி மாவட்டக் கடற்கரைப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள்' எனும் இக்கட்டுரையையும் சேர்த்து ஒருங்கு நோக்கினால், இராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமரி, யாழ்ப்பாணம், மட்டக் களப்பு ஆகிய ஐந்து

மாவட்டங்களில் உள்ள பரதவர் தொழில், தொழிற்கருவிகள் ஆகியனவற்றுள் காணலாகிற ஒற்றுமை வேற்றுமைகள் புலனாகும்.

இனி, கன்னியாகுமரி மாவட்டக் கடற்கரைப் பரதவர் தொழிற் கலைச் சொற்களை அகர வரிசையில் காணலாம்.

அண்டிக்கை
அண்டிமுட்டி
அயலை
அழுக்கு வலை
அளுவக்குட்டி 5
அளுவை
ஆங்கெ
ஆஞ்சல் கயிறு
ஆடுமேச்சாம்பாறை
ஆயிரங்கால் தூண்டி 10
ஆரம்பு
ஆறாமீன்
இடவலை
இருண்டதேத்து
இழுவலை 15
இறால்
இறால் வலை
உப்புத்தண்ணி
உழுதார காரை
ஊஞ்சாமத்துவெள்ளி 20
எரிச்சான்வெள்ளி
ஏறிணி
ஒடுக்குத் தேத்து
ஒரு கயிறு
கச்சான் 25
கச்சான் கோடை
கடமாங்கவ்று
கடல் வெள்ளி
கடுப்பு
கட்டு மரம் 30
கணவை
கண்ணங்குத்தை
கண்ணங்கொரலி
கண்ணந் தெரச்சி
கண்ணம்பாறை 25
கண்ணம் பேளை
கண்ணி
கப்பல்வெள்ளி
கரக்கால்
கரைவலை 40
கலக்கு
கல்
கல்லு மூச்சா
கல்லுவாடு
கல்றால் 45
கல்றால் வலை
கல்லுறுஞ்சி
கவலை
கவுத்துவலை
காக்காகிளாத்தி 50
காட்டுவெள்ளி
காரை
கிராச்சித்தண்ணி
கிளாத்தி
கினியா 55
கீங்காங்கவ்று
குதிப்பு
குதிப்புக்காரை
குத்தை
குஞ்சுவெள்ளி 60

குழிவலை
குதிப்பு வெள்ளி
குறுந்தலைப்பாரை
குறுமீன்
குறுவாள 65
குன்னுவாடை
கூட்டடை
கூட்டவெள்ளி
கூலிவலை
கெட்டு 70
கொண்டகச்சான்
கொண்டல்
கொண்டவலை
கொமளி
கொளுவகிளாத்தி 75
கோடை
கோர்வலை
கோனாவலை
சம்பு
சல்வா 80
சன்னாவலை
சாக்காளி
சாவாளை
சாள
சிட்டகயிறு 85
சிறாவு
சிறியகடல்வெள்ளி
சின்னமலைமீன்வெள்ளி
சிலா
சினி 90
சுரப்பு
சுருக்குப்பை வலை
சுழிக்காத்து
சுறா
சூரை 95
செம்பாது
செவிகுன்னிவலை
செவிழ்பூட்டுவலை
செறுசள்ளை
சேறு 100
சோத்துவெள்ளி
சோழகன்தென்றல்
சோழ கொண்டல்
சோனி
சோனிவெள்ளம் 105
தட்டுமடி
தண்டு
தருப்பு
தவணாரை
தூண்டல்மரம் 110
தூரணி
தெம்மா ஓனி
தெரச்சி
தெளித்துத் தேத்து
தெளிவு 115
தென்றல்
தென்னிமேழுறி
தேத்து
தோட்டுக்கணவை
தோணி 120
நடுத்தர வலை
நண்டுவலை
நல்லோகாரை
நீலக்கை 125
நெடுந்தலப்பாரை
நெத்திலி
நெம்மீன்
நேர் கொண்டல்
நேர்கொடை 130
நொள்ளவலை
பக்கோட்டி

பக்கோட்டி கினியா
படகு
படிச்சாஞ்சம்பு 135
பணிச்சல்
பரண்டவலை
பனஞ்சிறாவலை
பாச்சுவலை
பாறை 140
பாறைக்குட்டி
பாறை மீன்
பாறு
பிளைப்புக்கல்
புலியஞ்தெரச்சி 145
புலிறால்
புளோட்
புள்ளிமுட்டி
பூங்கலக்குத்தேத்து
பூட்டுவலை 150
பூலா
பெதுவலை
பெலக்கணவை
பேளை
பைண்ட்ராவலை 155
பைவலை
பொட்டுப் பேளை
பொளி
பொறி
போட் 160
மடயத்தாங்கல்
மடி
மத்துவலை
மம்டிவலை
மம்மட்டிறால் 165
மரம்
மலைமீன்வெள்ளி
மால்
மிதாவலு
முட்டு 170
முல்லைச் சல்வா
முள்ளங்காரை
முள்ளம்பூலா
மூச்சா
மெரப்ப 175
மேக்கா கவ்று
மேமுறி
மொட்றால்
யாவு
வங்கடை 180
வடகோடை
வடமேல்
வத்தக்குட்டி
வத்தம்
வலை 185
வள்ளம்
வன்னிமே முறி
வன்னி வெள்ளம்
வாக்கியா
வாங்கியா 190
வாடகொண்டல்
வாடை
வாணுவாடு
வாழுவலை
வாளா ஓனி 195
வாளாமொரல்
விசைப்படகு
விலங்குக்கரை
வீசகுத்தை
வெளமீன் 200
வெள்ளம்
வேளா
வேளாகுட்டிகாரை
வேளாதெரச்சி 204

மேற்கண்ட சொற்கள் தொழில்முறை, தொழில் நுணுக்கம், தொழிற்கருவிகள், மீன் பெயர்கள், விண்மீன் ஆகியவற்றோடு தொடர்புடையன. இவை அளவில்லாத தகவல்களைத் தம்மகத்தே திரட்டி வைத்துள்ளன. இச்சொற்களுக்குப் பொருள் தருங்கால் இது ஓர் அகராதியும் ஆகும்.

# 3

# யாழ்ப்பாணம் கரையோரப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள் —ஓர் அறிமுகம்

## 1

பரதவர் அல்லது மீனவர் சமூகம்பற்றிய ஆய்வு தற்சமயம் பெருவிருப்புடன் மேற்கொள்ளப்பட்டு வருகிறது. எந்தப் பழங்குடி மக்களிடமும் காணக்கிடக்கும் அரிய பல தகவல்கள் போன்றவை இவர்களிடமும் உறைந்துள்ளன. கலையியலார், மொழியியலார், சமூகவியலார், மானுடவியலார் ஆகிய பலதுறை வல்லுநர்கள் இச்சமூகத்தை ஆய்ந்தாய்ந்து பல தகவல்களை வெளிப்படுத்திய வண்ணம் உள்ளனர். பரதவ சமூகத்தினர் வழங்கும் நாட்டார் பாடல்கள்,[1] 'கலைச்சொற்கள்'[2] தகுந்த கவனிப்பைப் பெற்றுள்ளன. அவர்தம் சமூகப்பழக்க வழக்கங்கள்[3] ஆய்வுக் குட்படுத்தப்பட்டுள்ளன. தமிழ்நாட்டு ஆய்வாளர்களைப் போலவே ஈழத்து ஆய்வாளர்களும் கலை ஆர்வலர்களும்[4] இத்துறையில் முழு ஈடுபாட்டுடன் பணியாற்றி வருகின்றனர். மொழியியல் ஆய்வாளர்,[5] தமிழ் நாட்டுப் பரதவர் மொழியை ஆய்தல் போலவே ஈழத்துத் தமிழ் ஆய்வாளர்களும் ஈழத்துத் தமிழ்ப்பரதவர் மொழியை ஆய்தலும் கூடும். இந்த இருவழிப்பட்ட ஆராய்ச்சிப் (பரிவர்த்தனையை) பரிமாற்றங்களை 'யாழ்ப்பாணக் கரையோரப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள்-ஓர் அறிமுகம்' எனும் தலைப்பிடப்பட்ட இத்தொகுப்பு எளிதாக்கித் தொடங்கிவைக்கிறது. இத்தொகுப்பு யாழ்ப்பாணக் கரையோரக் குருநகர்ப்பகுதிக் கலை ஆர்வலர் மு. புட்பராசனின் 'அம்பா' எனும் நூலை ஆதாரமாகக் கொண்டது. கட்டுரைவடிவில் அவரால் தரப்பட்ட செய்திகள்

திரட்டப்பட்டுத் தொழிற்கலைச் சொற்கள் எனும் அகராதி வடிவில் இத்தொகுப்பு உருவாக்கப்பட்டுள்ளது.

யாழ்ப்பாணக் கரையோர மீனவர் பேசுங் கிளைமொழியில் சொல்லியல் ஆய்வு (Lexical Study) நடத்த முனைபவர்க்கு நல்ல வாய்ப்புள்ளது என்பர்.[6] சொல்லியல் ஆய்வு நடத்துவதன் பயனாக அப்பழங்குடிமக்களின் நம்பிக்கைகள், பழக்கவழக்கங் கள், சடங்குகள் (மரபுகள்), தொழில் நுணுக்கங்கள் போன்ற பண்பாட்டுக்) கூறுகளை ஆராய்ந்து வெளிக்கொண்டு வருவதும், அப்பண்பாட்டுக் கூறுகளோடு தொடர்புடைய மொழியியற் கூறு களையும் சொற்றொகுதியையும் ஆராய்வதும் இயலும். (பண்பாட்டு)மானுடவியலாரும் (Cultural Anthropologists), மானுடவியல் மொழியியலாளரும் (Anthropological Linguists) இதுபோன்ற பணிகளில் ஈடுபடுதல் நலம் பயக்கும்.

யாழ்ப்பாணக்கரையில் அமைந்துள்ள குருநகர்க்கரையூர் அல்லது குருவூர் மீனவர் தமது வாழ்வில் வழங்கும் தொழிற் கலைச் சொற்கள் ஈண்டு அகரவரிசையில் அறிமுகப் படுத்தப் பட்டுள்ளன. பேசாலை, வங்காலை, பள்ளிமுனை, கொக்குளாவா பகுதி மீனவர் சொற்களும் இவற்றுடன் பெரும்பாலும் ஒத்தவை எனலாம். ஆயினும் இவண் இடம் பெற்றுள்ள சொற்கள் குருநகர்ப் பாதவரின் சொற்களே என்பதில் ஐயமில்லை.

''யாழ்ப்பாணக் கடற்கரைப் பரதவர் தொழிற்கலைச் சொற் கள் எனும் தலைப்பின் கீழ்க் களஆய்வு செய்யப்புகின், பல்லாயிரக்கணக்கான சொற்கள் குவியும். அவ்வாறு தொகுக் கும் சொற்களைக் கொண்டே அம்மக்களைப் பற்றிய ஒரு நிறைவான அறிவைப் பெற முடியும். இங்குச் செய்யப்பட்டி ருப்பது முடிந்த முடிவான ஆய்வன்று; ஓர் அறிமுகப்படுத்தல் மட்டுமேயாகும். மீனவர் தொழில் மீன் பிடித்தல் மட்டுமன்று; சங்கு, முத்துக்குளித்தல், உப்பு விளைவித்தல், சுண்ணாம்பு சுடுதல்[7] என்பனவுமாகும். ஒவ்வொரு தொழிலும் பல நூற்றுக் கணக்கான தொழிற்கலைச்சொற்களைக் கொண்டிருந்தல் கூடும். அவ்வளவும் திரட்டப்படுங்கால் அது ஒரு கலைக்களஞ் சியமாகவும் உருவாகலாம். இங்கு அகராதி வடிவில் அறிமுகப் படுத்தப்பட்ட சொற்றொகுதியுள் சங்கு, முத்துக்குளித்தல் பற்றிய சொற்கள் அறவேயில்லை. இக் காரணம்பற்றி, யாழ்

பகுதியில் இத்தொழில்கள் இல்லை எனும் தவறான முடிவுக்கு வருதல் கூடாது.

இந்தியப் பெருநாட்டில் தென் தமிழ்ப்பகுதியில் நடைபெற்று வந்த சங்குத் தொழிலுக்கு இணையாக இலங்கையிலும் இத்தொழில் நடைபெற்று வந்தமை தகுந்த வரலாற்றுச் சான்றுகள் மூலமாக உறுதிப்படுத்தப் பட்டுள்ளது.[8] பாண்டியர் காலம் தொட்டு இத்தொழில் மிகவும் சிறப்புற்றிருந்தமை[9] பலரும் அறிந்ததே. போர்த்துக்கீசியர், பிரஞ்சுக்காரர், ஆங்கிலேயர் போன்றாரும் இத்தொழிலுக்கு மிகுந்த அரவணைப்புக் கொடுத்து வளர்த்தமையும் இங்கு கவனிக்கத் தக்கது[10] இத்தகைய பின்னணியில், பெரு வளர்ச்சி பெற்ற தொழில்களைச் செய்துவரும் பெரும்பான்மையான பழங்குடி மக்களாகிய பரதவர் தம் வாழ்வில் பயின்று வழங்கும் தொழிற்கலைச் சொற்களும் பல்லாயிரக்கணக்கானவையாக இருப்பதில் வியப்பொன்றும் இல்லை.

முன்னர் சொன்னபடி, பின்வரும் சொற்கள் இம்மக்களின் பண்பாட்டைப் புலப்படுத்துகின்றன. கரைவலை, சம்பளக்கரை வலை ஆகியன தொழில் நுணுக்கத்திற்கும், பாதங்கழுவிய தண்ணி, இழுத்துவைத்தல் ஆகியன சடங்கு மரபிற்கும், பாலைத்தீவில் அடியழித்து வருதல் நம்பிக்கைக்கும் சான்றுகளாகலாம். பரதவர் பற்றிய ஆராய்ச்சியில் ஆர்வம் கொண்டோர்க்கும், ஈழத்தமிழ்க் கிளைமொழியியல் பற்றிய ஒப்பியல் ஆய்வில் விருப்பம் மிகுந்தோர்க்கும் ஓர் அடி எடுத்துக் கொடுக்குமுகத்தான் இங்கு இடம் பெற்றுள்ள சொற்களும் இன்ன பிறவும் மேலும் நுணுகி ஆய்தற்குரியன. இங்கு அகரவரிசையிலே அமைந்துள்ள அத்துணைச் சொற்களும் யாழ்ப்பாணப் பரதவர் சமூக எழுத்தாளர் மு. புட்பராசனின் நூலை அடித்தளமாகக் கொண்டவை என்பது நினைவில் இருத்திக் கொள்ள வேண்டிய இன்றியமையாக் கருத்தாகும்.

## 2

### தொழிற்கலைச் சொற்கள்

**அணியம் :** பெ., படகின் அல்லது மரக்கலத்தின் முன்பக்கம். (த. மொ. அ). கடற் கலத்தின் முன் பக்கத்தில் குறுக்கப்

பாடாக அமைந்த பலகைக்குத் தென்தமிழ் நாட்டில் 'அணியத்துவாரி' என்பது பெயர்.

**அம்பா :** பெ., கடல் தொழிலாளர் அல்லது பரதவர் பாடும் பாடல். அம்பி—தோணி. தோணிப் பாடல்—அம்பிப் பாடல் இதுவே அம்பா எனத் திரிந்தது (புட்பராசன்). சிலர் அம்பாள் (கடலன்னை. கன்னிமரி) பாடல் என்பர் (நா. வானமாமலை) அம்—நீர். அம்புவி—கடல். அம்போதி—கடல். அம்—கப்பல். அம்பரம்—கடல். அம்பி—மரக்கலம். ஆக, 'அம்' என்னும் வேர்ச் சொல்லானது கடல், கடல் நீர், கடற் கலம் ஆகியவற்றைக் குறிக்கும் எனலாம். அம்+பா = கடற்பாடல், மரக்கலப் பாடல் என உருவாகியிருக்கலாம்.

**அலைகடல் :** பெ., கரையொட்டிய கடற் பகுதி. அலைகள் மிகுந்த கடற்கரைப் பரப்பு. கரையோரம் அலை மிகுந்து இருத்தல் நினைக்கத்தக்கது.

**அலைவாய் :** பெ., கடல் அலை மோதும் கரைப்பகுதி. அலைவாய்க் கரை—கடற்கரை

**அல்லில்லா :** அசை, இராகம், ஒலிக்குறிப்பு. அம்பாப் பாடலில், ஓசை இசையின்பத்திற்காக—இடம் பெறும் பொருளற்ற சொல். எடுத்துக்காட்டு—

> "காப்புநல்ல அல்லில்லா கலகலன்ன
> கைவளையல் அல்லில்லா சோதிமின்ன
> செப்பிலையோ அல்லில்லா சிலையெழுதி
> சிலைதனிலே அல்லில்லா வடிவெழுதி
> எழுதினவன் அல்லில்லா கண்கெடுவான்
> எழுத்தாணி அல்லில்லா கூர்முறிவான்"
>
> —நாட்டார் பாடல்.

**அளி :** பெ., ஒரு வலைக்கண்

**அறக்கொட்டி வலை :** பெ., வலைவகை நைலோன் (நைலான்) வலை போன்ற புதுமை வலை

**ஆரியக் கட்டா :** பெ., மீன் வகை. வலைக்குள் அகப்பட்டாலும் பிடிபடாமல் வெளியேறிவிடும் தந்திரம் மிகுந்தமீன்

**ஆழ்வான் :** பெ., யாழ்க்குடாப்பகுதியில் வலை வளைப்பதற்கு என்றே சில குறிக்கப்பட்ட 'பாடுகள்' உள்ளன. இவ்விடங் களில் கரை மிகவும் ஆழங் குறைந்ததாக இருக்கும். இப்படிப்பட்ட இடங்களில் வலை வளைப்பது எளிதாக இருக்கும். இப்பாடுகளில் ஒன்றுதான் 'ஆழ்வான்'

**இசங்கம் பார் :** பெ., 'ஆழ்வான்' என்ற ஆழங்குறைந்த ஒரு கடற்பாடு

**இலந்தயடி :** பெ., ஓர் இடத்தின் பெயர். பாலத்தீவு போல் இதுவும் ஓர் இடம்.

**இளம்பாரை :** பெ., மீன்வகை.

**இறங்குபொழுது :** பெ., நண்பகல் பன்னிரண்டு மணிக்குப் பிற் பட்ட நேரம்.

**இறா :** பெ., மீன்வகை. இருப்பைப் பூவைப்போன்ற மெல்லிய தலை உடைய மீன். (விலங்கியலார் இறாவை நண்டினம் என்பர்)

**ஈரவலை :** பெ., மீன்பாட்டிற்காகக் கரையிலிருந்து ஆழ் கடலை நோக்கி ஓடியபடகு, மீண்டும் கரையை நாடி பல வகைப்பட்ட வலைகளை இளக்கிக் கொண்டே வரும். இத் தகைய வலைகளுள் ஒன்றே ஈரவலை என்பதாகும், 15 அளியும் 4½ அடி நீளமும் கொண்டது இது. இதுவே முதலில் இறங்கும் வலையாகும்.

**ஈலக்கண்ணி :** பெ., ஈரவலைக்குப் பிறகு இறக்கும் வலை ஈலக்கண்ணி என்பது. இது 21 அளியும் 3 அடி நீளமும் கொண்டது.

**உருவு :** வி., அவிழ் 'அந்த மடியை உருவு' என்னுமிடத்து, இது 'அவிழ்' எனும் பொருளது.

**உலமடி :** பெ., 'உலை மூடி' என்பதன் திரிபு

**ஏத்தி வளைத்தல் :** தொ. பெ., வலையை ஏத்தி வளைத்தல்—ஏற்றி வளைத்தல். எடுத்துக்காட்டு:

ஏத்திவளையு மண்ணே
இலந்தயடிப் பாடாக

பாத்து வளையு மண்ணே
பாலத்தீவுப் பாடாக''—

நாட்டார் பாடல்.

ஏத்து ஏத்து : பெ, ஒரு வரிப்பாடல் (எ-டு)
"ஏத்தேத்து லைலா கரவலய
ஏசுநாதர் லைலா படிதருவார்
பார்த்துத்தான் லைலா வளையுமண்ணே
பாலதீவு லைலா பாடாகத்தான்—

நாட்டார் பாடல்.

'ஏத்தேத்து' என ஒருவர் பாட, தோணியில் உள்ள அனை வரும் லைலா என ஒருங்குபாட, மீண்டும் முதலில் பாடிய வர், கரவலய, என்று பாடுவார். இப்படி இந்தப் பாடல் பாடப்படும்.

ஏலேலப் பாட்டு : பெ., மீனவர் பாட்டுக்கு ஏலேலப்பாட்டு என்பது மறு பெயர்.

ஏலேலோ : அசை, இராகம், ஒலிக்குறிப்பு. ஏலேலசிங்கனை நினைவுறுத்துவது என்றும் சொல்வர். அல்லில்லா, லைலா, றோசா போன்ற இசையியைபுச் சொல். பாடல் இனிமைக் காக வருவது.

ஏறு பொழுது : பெ.. காலைக் கதிரவன் தோன்றி நண்பகல் பன்னிரண்டு மணி வரையுள்ள நேரம்.

ஐயங்குடா : பெ., ஆழ்வான், இசங்கம் பார் போன்ற இடம். மீன் பாட்டிற்கு வலை வளைக்கத் தோதான பாடு.

ஒடியல் புட்டு : பெ., உணவுவகை.

ஒழுக்கை : பெ., மீன்பாட்டிற்கு வலை வளைக்க வாகானபாடு. ஐயங்குடா போன்ற பகுதி.

ஓரா : பெ., மீன்வகை.

ஓலைவலை : பெ., நகரை என்று சொல்லப்படும் ஒரு வகைச் சிறிய மீன்கள் கரைவலைக்குத் தொகையாகப் பிடிபடாத போதிலும் பனை ஓலைகளை அடுக்கு அடுக்காக வலை யுடன் இணைத்து வலையிழுக்கும் போது, இவ்வோலைகள்

கடலினுள் உண்டாக்கும் ஓசையால் இங்கரை மீன்கள் பயந்து 'மடி' யைத் தேடி ஓடிவிடும். இதனால், இம்மீன்கள் ஓலைவலைக்குப் பிடிபடும்.

ஓவலை : பெ., குடியிருப்பு, வீடு

கச்சத்தீவு பெ., ஒரு தீவு. இது முன்னர் இந்திய அரசுக்கு உரிமையாக இருந்தது. இப்போது ஓர் ஒப்புடன்பாட்டு அடிப்படையில் இலங்கைக்குத் தரப்பட்டு, இலங்கை அரசுக்கு உரிமையாக உள்ளது. யாழ்க்குடாப் பரதவர் இத்தீவுக்கு வழிபாட்டுக்காகவும் மீன் பாட்டுக்காகவும் வருவர், பரதவப் பெண்கள் இத்தீவில் உள்ள கோவிலுக்கு வழிபாட்டின் பொருட்டு வந்து போகின்றனர்.

கடலலை பெ., கடலில் உண்டாகும் அலை.

கடையர் : பெ., சாதியமைப்பு அடிப்படையில் மிகவும் கீழ் நிலையில் இருந்தவர். பரதவர் குலத்தைச் சேர்ந்த ஓர் உட்பிரிவினர் (அ. சி.). சுண்ண்ணாம்புக் கிளிஞ்சல் சுடுதல், முத்துக் குளித்தல் என்பன இவர் தம் தொழில். (அ. சி), 1624 ஆம் ஆண்டளவில் யாழ்ப்பகுதிக் கடையரும் பரதவரும் இந்து சமயத்தைத் துறந்து கத்தோலிக்கராக மாறி. சமூகப் பண்பாட்டு மாற்றங்களுக்கு உட்பட்டனர்.

கடையால் : பெ., படகின் பின்புறம் அணியத்துக்கு எதிர்ப் பக்கம். தென்தமிழ் நாட்டில் இதனை 'அமரம்' என்பர்.

கந்தா : பெ., ஒரு குறிப்பிட்ட அளவு மீன். அளவுப்பெயர், எ-டு · ஓலைக்குலைலா ஓதுங்குமடா ஒருகந்தா லைலா நகரயடா-நாட்டார் பாடல்.

கப்பல் பாட்டு : பெ., அம்பா தோணிப்பாட்டு, ஏலேலப்பாட்டு என்பவை போல, கப்பல்பாட்டு என்பதும் அம்பாவைக் குறிக்கும்.

கம்பாங் கயிறு : பெ., வலை வளைக்கும் பொழுது, குறிப்பிட்டவொரு பாட்டில் பல தொழிலாளர்களைக் கரையில் இறக்கிவிட்டு, ஆழ்கடலை நோக்கிக் கயிற்றைப் போட்டுக் கொண்டு போவார்கள். இக்கயிறு 'கம்பாங் கயிறு' எனப் படும். இதன் இறுதியில் ஈரவலை முடியப் பட்டிருக்கும்.

**கம்பான் :** பெ., கம்பாங்கயிறு, கம்பான் இரண்டும் ஒரு பொருள் குறிப்பன. கடலில் முதலில் இறக்கப்படும் கயிறு. இதன் பின்னர் இறக்கப்படுவது ஈர வலை. ஒரு கம்பான் கயிற்றின் நீளம் சுமார் 100 அடி.

**கரைவலை :** பெ., வலைவகை. கரைவலைகள் மூலம் மீன் பிடிப்பது மிகவும் கடினம். இன்று பொறிகளின் உதவி யுடன் கரை வலைத்தொழில் எளிதாக்கப் பட்டுள்ளது. முன்னர் கரை வலைகள் மூலம் மீன்பிடி தொழிலைச் செய் தோர் உடல்வலி மிக்கோராக இருந்தனர். இதனாலேயே பரதவர் 'வன்கைப்பரதவர்' (நற்றிணை) என்றழைக்கப் பட்டனர். கரைவலை வலிப்பது ஒரு வித்தையாகவே கருதப்படுகிறது. எ-டு :

> "கரவலையும் அல்லில்லா வேலைதான்ரா
> கற்றதொரு அல்லில்லா வித்தைதான்ரா!"
>
> —நாட்டார்பாடல்

2 கிலோமீட்டர் நீளமும் 200 மீட்டர்அகலமும் 5 மீட்டர் உயரமும் உடைய கரை வலைகள் இவர்தம் தொழிலிற் பயன்படுகின்றன.

**கரைவலைத் தொழில் :** பெ., கரைவலை இழுக்கும் தொழில். இத்தொழிலை யாரும் எடுத்த எடுப்பிலே கற்றுக் கொள்ள முடியாது. இதனை முற்றாகக் கற்றுக் கொள்ளப் பல ஆண்டுகளாகும். துவக்க வேலையான கம்பான் கயிறு வளைப்பதிலிருந்து, அடுத்தாகக் கால் போட்டு வலை யிழுப்பது பயின்று மேலாவிற்குப் போகும் இறுதிவரைக்கு முள்ள தொழில் நுட்பங்களைக் கற்றுக்கொள்ளப் பல ஆண்டுகள் செல்லும். அன்றியும் இவற்றை எல்லோருமே கற்றுக் கொள்ள முடியாது. கரை வலை வளைக்கும் பொழுது, கடலுள் இறக்கப் படும் வலைகளும் அவ்வவற் றின் அளவுகளும் அளிகளுமே முக்கியமாகும். முதலில் இறக் கும் வலைகளுக்கு 'ஈர வலை' என்றுபெயர். இவற்றின் அளிகள் ஏழு பிணையலும் ஒற்றையுமாகும். இவற்றின நீளம் மூன்று முழமாகும். இதனையடுத்து 'ஈலக் கண்ணி' வலைகள் இறக்கப்படும். இவற்றின் அளிகள் பத்துப் பிணையலும் ஒற்றையுமாகும். இவற்றின் நீளம் இரண்டு

முழமாகும். இதற்கு அடுத்து இறக்கப்படுவது 'நடுவணி'; இது பதினைந்து பிணையலும் ஒற்றையுமாகும். இதன் நீளம் ஒரு முழம். இதற்கு அடுத்து இறக்கப்படும் 'மாலக் கண்ணி' இருபத்தெட்டுப் பிணையலாகும். இதன் நீளம் முக்கால் முழம். இறுதி வலையாகிய 'மாரி வலை' முப்பத் திரண்டு பிணையலாகும். இதன் நீளம் ஒரு சாண். இவற்றி லிருந்து மடியை நெருங்கி இருக்கும் வலைகளின் நீளமும் அளவும் குறைந்தும், அளிகளின் எண்ணிக்கை கூடியும் இருப்பதைக் கவனிக்கலாம். இதனால் 'மடி'யை நெருங்கி யிருக்கும் இவ்வலைகள் நெருக்கமாயிருந்து, வலைக்குள் அகப்பட்ட மீன்களை வெளியிற் செல்ல விடாமல் பாதுகாக் கின்றன. இன்னும், மீன் பிடிப்பதற்கு இன்றியமையாத 'மடி'யின் 'மடவலை'யிலும் 'மோவலை'யிலும் 'பெருங்கைக் கயிற்றைப் 'பெருக்கி'யிருப்பார்கள். இப்பெருங் கைக் கயிற்றை மையமாக வைத்து வலதுபுறமும் இடது புறமுமாக ஒன்றரை முழமும் முக்கால் சாணுமாக அளந்து நூலால் வலிந்து பெருக்கியிருப்பார்கள். இவற்றின் மொத்த நீளம் மூன்று முழமும் ஒன்றரைச் சாணும் ஆகும். இந்த அளவின் மத்தியிலேயே 'பெருங் கைக்கயிறு' இருக்கும். இந்த அளவுகள் சற்றுக் கூடியோ குறைந்தோ இருந்தால், மீன்களை எளிதாகப் பிடிக்க முடியாது.

இவ்வளவு நுணுக்கம் இருப்பதாலேயே இவர்கள் 'நுண் வலைப் பரதவர்' (குறுந்தொகை) என்று அழைக்கப் படு கின்றனர். 'கரைவலைத் தொழிலுக்குப் போனால் உடம் பெல்லாம் வலிக்கும்; காய்ச்சல் வரும் என்னும் அளவுக்கு மிகுந்த கடினமானது இது. எடுத்துக் காட்டு:

> ''சுந்தாவாடா லைலா கரவலைக்கு
> காய்ச்சல் வரும் லைலா நான்மாட்டேன்
> நோகுதடா லைலா சந்துக்குள்ளே
> நோக்கா டெல்லாம் லைலா பொந்துக்குள்ளே
> காச்சல் நல்ல அல்லில்லா உடன் தடுமல்
> கண்குத்து அல்லில்லா நாரிவலி
> இடுப்பிலே அல்லில்லா கவுத்தைமாட்டி
> இழுக்கிறதும் அல்லில்லா வேலைதான்ரா!
>
> —நாட்டார் பாடல்

**கலக்கெறிதல் :** பெ., மீன்கள் பெருந்தொகையாகச் சேர்ந்து, வலையின் நெருக்கங் காரணமாக அங்குமிங்கும் ஓடும் போது உண்டாகின்ற கடற்சுழிவால், கடலினடியிலே காணப்படும் மணல் கடல் மேல் எழும். இதனையே 'கலக்கெறிதல்' என்பர்.

**கல்பாறை :** பெ., கடலினடியில் அமைந்திருக்கும் கற்பாறை. இதனுடன் கடல் நீர் மோதுதலால் வெண்ணுரை உண்டாகும்.

**கழி :** பெ, கடல்நீர் நிலை.

**குடாப்புறவா :** பெ., வலை வளைப்பதற்கென்று குறிக்கப்பட்ட பாடுகள் சிலவற்றுள், இதுவும் ஒன்று. ஆழ்வான், ஒழுக்கை போன்றது இது.

**குறுங்கரை :** பெ., இதுவும் அது.

**கூறப்பாய் :** பெ., கூரைப்பாய், மழைக்குப் பாதுகாப்பாகப் போட்டுக் கொள்ளும் ஓலைப்பாய். இரு கூறாகப் பிரிந்திருக்கும் பாய் எனறும் கொள்ளலாம்.

**கொடுவா :** பெ., மீன்பிடிக்கும் பொழுது சில மீன்கள் மடியைப் பிய்ப்பது உண்டு. அவற்றில் இவ்வகை மீனும் அடங்கும். எ—டு.

> "வலைய பிக்குது கொடுவா
> வயிறு பெருத்தது பேத்தை"
>
> —நாட்டார் பாடல்.

**கொண்டல் :** பெ., வடகிழக்குத்திசை. இத்திசையிலிருந்து வீசும் காற்றையும் இப்பெயரிட்டே அழைப்பர்.

> "கொண்டலிலே லைலா மழை கறுக்க
> கொண்டுவாடி லைலா கூறப்பாயை
> கொண்டலிலே லைலா மழைகறுக்க
> குமரிமுலை லைலா தள தளக்க"
>
> —நாட்டார் பாடல்

**சம்பளக் கரைவலை :** ...பெ., கரைவலைகளில் சம்பளக் கரை வலை என்றொரு கரைவலையும் உண்டு. இதற்கும்

மற்றைய கரைவலைகளுக்கும் தொழில் முறையில் எவ்வித வேறுபாடும் இல்லை. ஆனால், பங்குப்பணங்களைப் பிரிப்பதில் வேறுபாடு உண்டு. இச்சம்பளக் கரைவலையில் எவ்வளவுதான் அதிகமான வருவாய் வந்தாலும், அல்லது குறைவான வருமானம் வந்தாலும், ஒவ்வொரு தொழிலாளிக்கும் மாதாமாதம் ஒரு குறிப்பிட்ட சம்பளம் கொடுக்கப்படும். ஒவ்வொருவருக்கும் எவ்வளவு கொடுக்கப்பட வேண்டும் என்பது அவரவர் தொழில் திறமைகளைப் பொறுத்து, தொழில் உரிமையாளரால் குறிக்கப்படும். இத்தொழில் முன்னர் இருந்த அளவு இப்போது இல்லை; குறைந்து வருகிறது. 'கொக்குளாவா' போன்ற பகுதிகளில் மட்டும் இருப்பதாகத் தெரிகிறது. இத்தொழில் செய்பவர்களுக்கு, தொழிலின் உரிமையாளரே தேநீர் உணவு போன்றவற்றிற்குப் பொறுப்பானவர்.

**சம்மாட்டி :** பெ., கடற்கலத் தலைவர்.

**சிவப்புக் கட்டுதல் :** ...தொ. பெ., மீன்கள் பெருந்தொகைக் கூட்டமாக நின்றால், கடலின் மேற்பரப்பில் ஒருவிதப் பழுப்புநிறம் பரவலாகத் தோன்றும். இதையே சிவப்புக் கட்டுதல் எனக் கூறுவர்.

**சிறுதீவு :** ...பெ., ஒரு தீவு. மீனவர்கள் மீன்பாட்டுக்கும் கோயில் வழிபாட்டுக்கும் கடல் வழியாகச் சென்று வருகின்ற இடம்.

**சுற்று :** ...பெ., 'சுத்து' எனப்பேச்சில் வழங்கப்படும் சொல். ஒரு சுற்று என்பது குறிக்கப்பட்ட நீள அகலங்களைக் கொண்ட வலை. மீன்பிடிக்கப் பயன்படும் மடியை ஒவ்வொரு சுற்றாகப் 'பிதைந்து' மடியாக்குவர்.

> 'நான் கேட்ட லைலா மண்டாட்டம்
> நாலு சுத்து லைலா மீன்படவே'
>
> —நாட்டார் பாடல்

**சுற்றுமால் :** ...பெ., சுற்றுவலை, சுத்துமால். மால்-இணைப்பு. தென் தமிழ்நாட்டில் 'வலைமால்' என்பர். பல வலைகளின் இணைப்பு இங்ஙனம் அழைக்கப்படும்.

**சொன்னவன் பாடு :** பெ., ஒவ்வொரு மீனவருக்கும் தாமே அதிக உழைப்பை-ஊதியத்தை-பெறவேண்டும் என்ற

ஆவல் நிரம்ப இருக்கும். இப்படியாக ஒரு பாடு வளைக்க வேண்டுமாயின் ஒருவர் ஒரு குறிப்பிட்ட 'பாட்டின்' பெயரைச் சொல்லுவார். அப்பாட்டை அத்தொழிலாளருட் பெரும்பான்மையினர் ஒப்புக்கொண்டால் அப்பாட்டை வளைப்பார்கள். அப்பாடே, 'சொன்னவன் பாடு' எனக் குறிக்கப்பெறும்.

சோதி வெள்ளி : பெ., ஒளி மிகுந்த வெள்ளியை (நட்சத்திரம்) குறிக்கும்

ஞான சௌந்தரி : அசை அல்லது ஓசைக்குறிப்பு. பரதவரின் அம்பாப் பாட்டில் 'அல்லில்லா, லைலா', 'றோசா' போல, 'ஞான சௌந்தரி' எனும் அசைத் தொடரும் ஓசையின்பத்திற்காக இடையிடையே வரும். ஞானசௌந்தரியின் கையை வெட்டிக் காட்டில் விட்டதாக ஒரு கதை உண்டு. அதனாலேதான் இவர்தம் பாடல்களின் இறுதி அடியில் 'கை எங்கே ஞானசௌந்தரி' எனும் தொடர் இடம்பெறுகிறது. எடுத்துக்காட்டு—

"ஏலம்மா ஏலேதண்டு
கைஎங்கே ஞானசௌந்தரி
ஓவலம்மா ஏலேதண்டு
கைஎங்கே ஞானசௌந்தரி
வருகுதடா கப்பலொண்டு
கைஎங்கே ஞானசௌந்தரி
வாழக்காய் பாரமேத்தி
கைஎங்கே ஞானசௌந்தரி
ஐயோமச்சான் கையைவிடு
கைஎங்கே ஞானசௌந்தரி
ஆச்சிகண்டா அடிக்கப் போறா
கை எங்கே ஞானசௌந்தரி"

—நாட்டார் பாடல்

இப்பாடலில் 'கை எங்கே ஞானசௌந்தரி' எனும் தொடருக்குப் பொருள் இல்லை என்பது எளிதில் விளங்குதல் காணலாம்.

தங்குகடல் : பெ., மீன்பாடு மிகக் குறைவாய் இருக்கும்போது, நடுக்கடலுக்கு அல்லது ஆழ்கடலுக்குச் சென்று இரவு தங்கி, மறுநாள் விடியலில் மீன் பிடிப்புடன் திரும்புவர். இங்ஙனம் இரவு தங்கிய நடுக்கடலையே தங்கு கடல் எனக் குறிப்பர்.

தண்டுகாரன் : பெ., தண்டு- துடுப்பு, கோல். கடற்கலம் இயக்க உதவும் கருவி.

''தண்டைவலி தடியை வலி
தண்டுகாரன் மகளை வளை'' —நாட்டார் பாடல்

தலைவலை : பெ., வலையின் ஓர் உறுப்பு. வலை இழுக்கும் போது தலைவலை வந்தவுடன், மீன்கள் வலைக்குள் வரு கின்றனவா எனப்பார்க்க, மடியைத்தேடி மண்டாடி நீந்திப் போவார். மடிக்கு முந்தியது தலைவலை.

தாளையுப் பாடு : பெ., ஆழ்வான் போன்றதொரு பாடு

தோணி : பெ., கடற்கலம்

தோணிப் பாட்டு : பெ., அம்பாப்பாட்டு, கப்பல் பாட்டு, ஏலேலப் பாட்டு என்பவைகளின் மறுபெயர்.

நகரை : பெ., மீன்வகை. சிறுமீன். ஓலைவலையில் அகப் படுவது. ஓசைக்கு வெருண்டு வலைக்குள் மிகுதியாக மாட்டிக் கொள்ளும் இயல்பினது.

''ஓலைக்கு லைலா ஒதுங்குமடா
ஒருகந்தா லைலா நகரயடா''

—நாட்டார் பாடல்

நடுவணி : பெ., வலைவகை. 31 அடியும் $1\frac{1}{2}$ அடி நீளமும் கொண்டது. பார்க்க—கரைவலை.

நாச்சிக் குடா : பெ., பள்ளிக்குடா போல் மீன்பிடிப்பதற்குரிய ஒரு பாடு

''நாச்சிகுடா லைலா நல்ல கரை
காய்ச்சல் வந்தா லைலா காக்கா கொத்தும்''

—நாட்டார் பாடல்

**நாரிவலி :** பெ., இடுப்புவலி. நாரி-இடை (த.மொ.அ.). மீனவர் வலை இழுக்கும் போது வலைக் கயிற்றை இடுப்பில் கட்டி இழுப்பதால் உண்டாகும் வலி.

**நீர்வகை :** பெ., கடல் தொழில் நுணுக்கத்தில் 'நீர்வகை' மிக முக்கியமானது. நீரின் நிறம், அளவு, ஓட்டம், இருப்பு போன்றவற்றை நுணுகிக் கவனித்தே அவ்விடத்தில் படும் மீன், படாத மீன், மீன் வகை, அளவு ஆகியவற்றை அனுமானிப்பர். நீண்ட தொழில் அனுபவம் வாய்ந்தவர்களாலேதான் நீர்வகை நுணுக்கத்தைக் கண்டறிய முடியும்

**நைலான் வலை :** பெ., வலைவகை. நைலான் எனும் செயற்கை இழையால் உண்டாக்கப் பட்ட வலை.

**படகு இழுத்து வைத்தல் :** தொ.பெ., மீன்பிடி தொழிலில் தொடர்ந்து அதிகநாள் உழைப்பு கிடைக்காவிட்டால் தொழில் சரியாக இல்லையெனக் கண்டு, படகைக் கட்டுந் துறைக்குக் கொண்டு வந்து, கடற்கரை மணலில் ஏற்றி வைப்பர். இதற்கு 'இழுத்து வைத்தல்' என்பது பெயர். பின்பு சில வழிபாடுகள், சடங்குகள் செய்த பின்னர், மீண்டும் தொழில் செய்யப் படகைக் கடலில் இறக்குவர்.

**படகு கெழிதல் :** தொ. பெ., பாய் இழுக்கும் போது, பாய் மேற்படும் காற்றின் அழுத்தத்தால் படகு கெழிதல். இவ்வாறான கெழிவிற்கு எதிராகவும் பாய்மரத்திற்குப் பொறுப்பாகவும் கயிற்றைப் பலமாக இறுக்கிக் கட்டுவர். கவனம் இல்லையெனில் பாய்மரம் சரிந்து கடலில் மூழ்க நேரிடும்.

**பரதவர் :** பெ., மீனவர். கடல் தொழில் மக்கள். மீன் பிடித்தல், சங்கு முத்துக்குளித்தல். உப்பு விளைவித்தல் எனும் தொழில்களைச் செய்து வாழ்வோர். நாகர் இனத்தவர். நெய்தல் நில மக்கள்.

**பருமரக்கோல் :** பெ., பாய்மரத்துடன் பாயைப் பிணைத்திருக்கும் பாரியமரக்கோல். பருமக்கோல் என்றும் கூறுவர்.

**பருமலுப் பாய் :** பெ., பருமலுப்பாய் என்பது பருமரக்கோல் என்று சொல்லப்படும் பாரியமரத்துடன் விரித்து இப்பாய்

கட்டப்பட்டிருப்பதால் இதற்குப் பருமரப்பாய் என்று பெயர் வந்தது. பருமை+மரம்+பாய்=பருமரப்பாய். இது சிதைந்து 'பருமலுப்பாய்' ஆகியது.

பழங்கயிறு : பெ., மீனவர் வலை இழுக்கும்போது இடுப்பிலே சுற்றிக் கட்டிக்கொண்டு வரிந்து இழுப்பர். இடுப்பில் கட்டப்பட்டிருக்குங் கயிறு பல பழங்கயிற்று இழைமடிப் பால் ஆனது. இதனால் அது பழங்கயிறு என்றழைக்கப்படு கிறது.

பள்ளிக்குடா : பெ., ஆழம் குறைந்த கடற்பகுதி. வலை இழுக்கத் தோதான இடம். இடுப்பளவு நீர்நிற்குமாறு ஆழம் அமைந்திருப்பதால் வலையை வலிந்தும் சாய்ந்தும் இழுக்கலாம். அந்த அளவுக்கு வாகான மீன்பிடி இடம்.

பாடு : பெ., வலை வளைப்பதற்கு ஏற்ற குறிக்கப்பட்ட கடலின் அளவு. சிலபாடுகளுக்குப் பரதவர் பெயரிட்டிருப் பர். அவ்விடங்களில் ஆழம் குறைந்தும் மீன்பாடு மிகுந்தும் இருக்கும். ஆழ்வான் பாடு, குறுங்கரைப்பாடு...என்பன எடுத்துக்காட்டுகள்.

பாதங் கழுவிய தண்ணி : பெ., இழுத்து வைத்த படகை (பார்க்க—படகு இழுத்து வைத்தல்) மீண்டும் நீருக் குள்ளே தள்ளிவிடும் முன்பு சில மரபுகளைக் கடைப் பிடிப்பர். பச்சை மஞ்சளை அரைத்துப் படகின் கொம்பில் பூசுவார்கள், பாதங்கழுவிய தண்ணீரால் அணியத்தைக் கழுவுவார்கள். பாதங்கழுவிய தண்ணீர் என்பது, ஒரு போத்தல் நிரம்பத் தண்ணீரை எடுத்து, சிறுபூக்களை அத் தண்ணீரில் கொட்டித் தமக்கு விருப்பமான தெய்வங்களின் பாதத்தடியில் நின்று, மெழுகுதிரிகொளுத்தி, அதன் அனலால் உருகும் மெழுகினின்றும் மூன்று துளியைப் போத்தலினுள்ள நீருள்விட்டு, பின் அம் மெழுகை உருக்கிப்போத்தலினுட் போட்டு, அப்பால் ஒரு வெள்ளைச் சீலைத் துண்டை அந்நீரில் நனைத்து, அத்தெய்வத்தின் பாதத்தைக் கழுவி, அந்நீரின் மூன்று சொட்டினைப் போத் தலுள் விடுவார்கள். இம்முறை இடத்திற்கு இடம் சிறிது வேறுபடும். எனினும், பொதுவாக இதுவே **பாதங்கழுவிய தண்ணி** எனப்படும். இத்தண்ணீரைக் கொண்டு அணியத்

தைக் கழுவி வழிபட்டு, கலத்தைக் கடலினுள் இறக்கித் தொழில் பார்த்தால் மீன் பாட்டம் மிகுந்து, வருவாய் பெருகும் என்பது நம்பிக்கை.

பாய் : பெ., காற்றின் வீச்சாலும் திறனாலும் கலத்தை ஓட்டு தற்குக் கட்டப்படும் பாய். பாய்மீது தாக்கும் காற்றின் திறனைப் பயன்படுத்திப் பரதவர் கலத்தை இயக்குவர். இப் பாய் பொதுவாக முருட்டுத் துணியால் தயாரிக்கப்பட் டிருக்கும்.

பாய்மரம் : பெ., பாய் கட்டப்பட்டுள்ள மரம்.

பாய்மரம் நாட்டுதல் : தொ. பெ., இறக்கப்பட்டுள்ள பாயை ஏற்றி இழுத்துக்கட்டுதல் பாய்மரம் நாட்டுதல் எனப் படும்.

> "பூட்டடா பருமலுப் பாயை
> பொற் சிரசிலே பொறுக்க
> நாட்டடா பாய்மரத்தை
> நாலு பண்ணில் பொறுக்க"
>
> —நாட்டார் பாடல்

பாலைத்தீவு : பெ., கச்சத்தீவு, சிறுதீவு போன்று இதுவும் ஒரு தீவு. மீன்பாட்டம் தேடியும் கோயில் வழிபாடு நாடியும் பரதவர் இத்தீவுக்கு வந்து செல்வர். இத்தீவில் புனித அந்தோணியார் கோயில் ஒன்று உண்டு. இங்கு மீன் பிடிக்கவரும் மீனவர்கள் இத்தீவை ஒரு தூய தீவாக மதிக் கிறார்கள். இத்தீவின் கரையில் அமைந்துள்ள வெண் மணற் பரப்பில், எத்தகைய உடனடி அலுவலானாலும், மீனவர் ஓடிச்செல்ல மாட்டார்கள். ஓடிச்சென்றால், அது விளையாட்டு என்பது இவர்களது கருத்தாகும். பாலைத் தீவில் தொழிலுக்கென்று வந்து விளையாட்டுப் போக்கில் திரிந்தால், மீன்பிடிபடாது என்ற நம்பிக்கை இவர்களி டையே உண்டு. இத்தூய அந்தோணியார் கோயிலுக்குச் செல்பவர்கள் செல்லும் பொழுதும் சென்று திரும்பிவரும் பொழுதும் தரையிற் பதிந்த காலடிச் சுவடுகளைக் குனிந்து கையால் அழித்துக் கொண்டே வருவார்கள். இப்படிச் சுவட்டை அழிக்காமல் வந்தால், மேற்குறிப்பிட்டபடி மீன் பிடிபடாமல், மீன்பிடிக்கப் பயன்படும் வலை குறுக்காக

வெடித்தும் போகும் என்ற நம்பிக்கை இவர்களிடையே இருந்துவந்தது. இப்போது, இவ்வாறு அடி அழிப்பதில்லை, முன்னர் இருந்த இப்பழக்கம் நாட்டார் பாடலிற் பதிந்து ஆவணமாகி விட்டது.

"படியளப்பார் லைலா என்று வந்தோம்
பாலதீவு லைலா கரையை யண்டி
அடியழித்து லைலா வந்தேனப்பா
ஆதரிப்பீர் லைலா எங்களையும்

— நாட்டார் பாடல்

தொழில் செய்வதற்குப் பாலைத் தீவுக் கரையை அண்டிய வுடன் தொழிலாளர்கள் கரையில் இறங்கி நின்றுகொண்டு தம்முட் பத்தி மிக்க ஒருவரை கோயிலுக்குச் சென்று வளமாக மீன் பிடிபட வேண்டுமென வழிபட்டு வருமாறு அனுப்புவர். (கவனிக்க. 'வந்தோம்—வந்தேன்' வினை முற்றுகள்; தன்மைப்பன்மை—தன்மை ஒருமை). ஆகவே, பரதவர்களைப் பொறுத்தமட்டில் இத்தீவு புனித மானது.

பிதை : வி., கோத்துக்கட்டு. 'இந்த மடியைப் பிதை' எனத் தொழில் செய்யும் போது ஒருவர் மற்றவர்க்குச் சொல்வார்.

புட்டி வெள்ளை : பெ., ஆழ்வான் போன்ற ஒரு பாடு

புணை : பெ., ஒருவகை மரவேரின் துண்டு. இது நீரில் மிதக்கும். (தென் தமிழ் நாட்டில் 'புளோட்', 'போயா' என முறையே வழங்கப்படும் இரப்பர், அலுமினிய மிதவை களின் பணியை இவ்வேர் செய்கிறது.)

புணை உறுட்டி : பெ., ஆழ்வான் போன்ற ஒரு பாடு

புறவா : பெ., இதுவும் அது.

பெரிய வேலி : பெ., இதுவும் அது.

பெருக்குதல் : தொ. பெ., முடிந்து கொள்ளுதல். 'மோவலை யில் புணையைப்பெருக்கு' எனின் 'மோவலையில் (மேல் வலையில்) புணையைமுடி (கட்டு)' என்று பொருள்.

பெருங்கக் கயிறு : பெ., 'பெருங் கைக்கயிறு' என்பதன் திரிபு. மடிவலையிலும் மோவலையிலும் (மேல்வலையிலும்)

'பெருங்கைக் கயிற்றை' முடிந்து இழுப்பார்கள். இதன் மையத்திலே வலப்புறமும் இடப் புறமும், ஒன்றரை முழம் முக்காற் சாண் நீளத்தில் நூலால் வலிந்து பெருக்கி யிருப்பர். பெருங் கைக்கயிறு என்பது கரைவலையில் ஓர் உறுப்பாகும்.

பெருங்கைக் கயிறு : பெ., பார்க்க பெருங்கக்கயிறு

பேத்தை : பெ., மீன்வகை. மீனவர் மீன்பிடிக்கும்போது, இம் மீன் மடிநூலை நறுக்கிவிடும். பிடிபட்டுவிட்டது எனில், உடனே வயிறு ஊதிப் பெருத்துவிடும். எனவே, மீனவர் இம்மீனைப் பிடித்ததும் எறிந்து விடுவர்.

பொண்டு : பெ., பெண்,பெண்டு என்பதன் திரிபு

பொரிகெழுறு : பெ., மீன்வகை.

> "போன வருஷமண்ணே
> பொரிகெழுறு பட்டவலை
> இந்த வருஷமண்ணே
> இளம்பாறை பட்டவலை"
>
> —நாட்டார் பாடல்

போத்தல் : பெ., நீர் போன்றவற்றைக் கொண்டு செல்லப் பரதவர் பயன்படுத்தும் கலம்.

மடவலை : பெ., வலை இளக்கும்போது, அழகாக மடக் கெறிந்து படகினுள் இருக்கும் வலையை ஒருவர் தூக்கி இளக்குவர். இவருக்கு உதவியாக இன்னொருவர் இவருக்கு முன்னே நின்று வலையைக் கூட்டிப் பிடிப்பர். இவ்வாறு கூட்டிப் பிடிக்கும் வலையை மேலும் இருவர் நின்று, ஒருவர் மோவலையாகவும் இன்னொருவர் மடவலையாகவும் தெரிந்து சிக்கற்ற முறையிலே கடலினுள் இறக்குவார்கள். மோவலை கடல் மீதுமிதக்க, மடவலை கடலடியில் தாழ்ந்து இருக்கும்.

மடி : பெ., மடியென்பது நூலால் செய்யப்பட்டு, பறியின் அமைப்பில் அமைந்துள்ள வலையாகும்.

மடி பார்த்தல் : பெ., கடலில் இளக்கப்பட்டிருக்கும் வலையுள் மீன்பாடு நிறைந்திருக்கிறதாவென, மண்டாடி நீந்திச் சென்று வலை மடியைப் பார்த்தல்,

மண்டதீவு : பெ., ஒரு தீவு.

மண்டாடி : பெ., தொழில் நுணுக்கங்களை அறிந்தவர். இவரை 'மேலாப் பாச்சி' எனவும் அழைப்பர்.

மரக்கோல் : பெ., பாய்களின்றிப் படகைச் செலுத்தும் வேளையிலே காற்று வெளிக்கொண்டு வேகமாக வீசும் வரை, அப்பாரிய படகை 'மரக்கோல்' மூலம் தாங்குவார்கள். அவ்வாறு தாங்கும்போது அணியத்து மரக்கோல் வைப்பவரும் கடையால் மரக்கோல் வைப்பவரும் மிகவும் பலசாலிகளாக இருத்தற்பாலர். குறித்த இலக்கிற்குக் காற்றிற்கும் கடலலைகளுக்கும் எதிராகத் தாங்க வல்லவர் இத்தகையாரே. 'ஆள் இளக்காரம் கண்டால், தோணி மிதத்து அலைபாயும்' என்ற முதுமொழி நோக்குதற்குரியது.

மாரிவலை : பெ., கரைவலையில் உள்ள இறுதி வலை மாரி வலையாகும். 32 பிணையலும் 1 சாண் நீளமும் கொண்டது. 64 அளியும் 9 அங்குல நீளமும் உடையது எனினுமாம்.

மாலக் கண்ணி : பெ., கரைவலையில் நடுவணிக்குப் பின் உள்ளது மாலக்கண்ணி. 28 பிணையலும் 3/4 முழ நீளமும் கொண்டது. 56 அளியும் 13½ அங்குல நீளமும் உடையது எனினுமாம்.

மான்பாடு : பெ., கடலினடியில் மீன்கள் நிற்கிறபோது கடல் தளத்தின் மேல் ஒரு திரவப்படர்வு காணப்படும். இதனைக் கண்ணுறும் மீனவர், அத்திரவப் படர்வின் கீழே மீன் தொகையாகத் திரண்டிருத்தலை அறிந்து கொள்வர். இத்திரவப் படர்வுக்கு மான்பாடு என்று பெயர்.

> "மான்பாட்டு லைலா நேரமண்ணே
> மறியுங்கடா லைலா
> வலையதினால்"
>
> —நாட்டார் பாடல்.

மீன் இரைதல் : தொ. பெ., கடல்மேல் வெண்ணுரை காணப்படின் மீன்கள் இரைகின்றன என்பர். மீன்கள் இரைவதால் நுரை உண்டாகும் என்பது இதன் பொருள்.

மீன்படுதல் : தொ. பெ., வலையுள் மீன் சிக்குதல்,

**மீன் பிடித்தல் :** தொ. பெ., கலங்கள் மூலமும் கருவிகள் மூலமும் மீன் வேட்டையாடல்.

**முசுறு :** பெ., மீன்வகை

**மேலாப் பாச்சி :** பெ., மண்டாடிக்குள்ள இன்னொரு பெயர்.

**மோவலை :** பெ., 'மேல்வலை' என்பதன் சிதைவு. கடலில் இள(ற)க்கப்பட்ட வலையுள், மேல் மிதப்பது மேல்வலை. (கடலின் அடியில் தாழ்ந்து இருப்பது மடவலை.)

**லாவுதல் :** தொ. பெ., மீனவர் கடலில் தொழில் செய்யும் போது கையசைத்துச் சைகை மூலம் தொலைவில் உள்ளார்க்குச் செய்திகளைத் தெரிவித்தல். பொதுவாக மண்டாடி அல்லது மேலப்பாச்சி சக தொழிலாளர்க்கு லாவுதல் மூலம் அவர்கள் செய்யவேண்டிய காரியங்களைச் சுட்டுவார்.

**லைலா :** அசை அல்லது ஒலிக்குறிப்பு. 'அல்லில்லா' போன்றது. பொருளற்றது. அம்பாப் பாடலில் இடம் பெறுவது. எடுத்துக்காட்டு :

> "போட்டாளே லைலா மாலை யொண்டு
> வாட்டாளம் லைலா பூத்தொடுத்து
> காட்டிலோ லைலா மெத்தையுண்டு
> கால்பிடிக்க லைலா தாதியுண்டு"
>
> —நாட்டார் பாடல்

**வலை இளக்குதல் :** தொ. பெ., வலையைப் பிரித்துக் கடலுள் இறக்குதல்.

**வலைக்கண் :** பெ., அளி.

**வலைக்காரன் :** பெ., வலைத்தொழில் செய்பவன்.

**வலை வளைத்தல் :** தொ. பெ., மீன் தப்பிச் செல்லாவாறு வலையைச் சுழற்றி வளைத்தல்.

**வலை வளைப்பு :** தொ. பெ., போதிய அளவு மீன்பிடிபட வேண்டுமென்பதற்காக ஒருபாடு வளைப்பு, இருபாடு

வளைப்பு, மூன்று பாடு வளைப்பு என வளைப்பதுண்டு. பார்க்க—வலை வளைத்தல்.

**வலை வாங்குதல் :** தொ. பெ., கடலில் இறக்கப்பட்ட வலையைத் திரும்ப இழுத்துச் சுருட்டுதல்.

**வழுவாடி :** பெ., பாலைத் தீவுக்கண்மையில் அதிகமாகப் பிடிபடும் ஒருவகைத் திருக்கைமீன்.

**வாட்டாளம்பூ :** பெ., கடல் தாவரமான வாட்டாளம் என்பதன் பூ.

**வாட்டாளை :** பெ., கடல் தாவரம். வலை இழுபடும்போது இது வலைக் கண்களை அடைத்து விடும்.

"வாட்டாளை லைலா கொண்டல்லோ
வலைகளெல்லாம் லைலா நெகிழுதில்லை''

—நாட்டார் பாடல்

**வாளை :** பெ., மீன்வகை.

"ஓரா மீனடி ஓடியல் புட்டடி
வாளை மீனடி வரகு சோறடி

—நாட்டார் பாடல்

**விளமீன் :** பெ., மீன்வகை. அரிதாகக் கிடைக்கும் மீன்.

**வீச்சுவலை :** பெ., வலைவகை. வீசி எறியும் வகையில் அமைந்த வலை.

**வெண்ணுரை :** பெ., வலை வளைக்கும்போது, கடலினுட் கற்பாறை ஏதுமிருப்பின் அதன்மீது அலை மோதி நுரை உண்டாகும். மீன் இரைதலாலும் நுரை உண்டாகும்—இதனை வெண்ணுரை என்பர்.

**வெங்நீர் :** பெ., தேநீர். சம்பளக் கரைவலைத் தொழிலாளர்க்கு முதலாளியர் தொழிலினிடையில் வெங்நீர் (தேநீர்) தருதல் வழக்கம். எடுத்துக்காட்டு :

'வெங்நீரும் அல்லில்லா தாரானில்ல''

—நாட்டார் பாடல்

வேளாக் கடல் : பெ., தொழில் செய்யக் கடினமான கடல்.

றோசா : அசை அல்லது இராகம் அல்லது ஒலிக்குறிப்பு. 'அல்லில்லா' போன்றது. எடுத்துக்காட்டு-வன்மம் நிறைந்த ஒரு காதற் பாடல் :

"என்னஎன்ன றோசா பாக்கிறது
எட்டுப்பானம் றோசா கேக்கிறது
வேசைபொண்ணே றோசா காசுதாடி
வேணுமெண்டா றோசா பாயைப்போடு"

—நாட்டார் பாடல்

## 4

முன்னர் கூறியபடி, தமிழ்நாட்டின் கரையோர மீனவர்களது மொழிநிலை, கலைச் சொல்லியல் ஆகியன ஆய்வுக்குட்படுத்தப்பட்டுள்ளன. யாழ்ப்பாணக் கரையோரப் பரதவர் தொழிற்கலைச் சொற்களை அறிமுகப்படுத்தும் இக்கட்டுரையும், இக்கட்டுரையாளராலேயே உருவாக்கம் பெற்றுள்ள 'மட்டக்களப்பு மாவட்டக் கடற்கரைப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள்—ஓர் அறிமுகம்' எனும் கட்டுரையும் ஈழநாட்டின் வடக்கு, கிழக்குப் புலங்களின் பரதவர் மொழியியலை ஓரளவுக்குப் புலப்படுத்துகின்றன எனலாம். இனிவரும் ஆய்வாளர் 'தமிழ்நாட்டு ஈழநாட்டுத் தமிழ்ப்பரதவர் வழங்கும் தொழிற்கலைச் சொற்கள்—ஓர் ஒப்பாய்வு' எனும் திசையில் ஆய்வை முன்னடத்திச் செல்லலாம். இவ்வாறாக, இவ்விரு நிலப்பகுதிகளிலும் வசிக்கின்ற பரதவரிடையே உண்டாகி நிலைகொண்டிருக்கும் சடங்கும் மரபுமாகிய பண்பாட்டுப் பரவல்களும், தொழில் நுணுக்கம் முதலானவை தொடர்பான பேச்சுப் பரவல்களும் துலக்கமாக வெளியாகலாம். மானுடவியல், சமூகவியல், வரலாற்றியல் எனும் துறைகளைப் போலவே மொழிற்றுறையும் இவ்விருநில மக்களின் நெடுநாளைய தொடர்பினைத் தகுந்த சான்றுகளின் அடிப்படையில் உலகுக்கு வெளிப்படுத்தும் என நம்பலாம்.

# 5

## நெறித்துணை

1. i உதயகுமார், வெ., புதுச்சேரி மீனவர் பாடல்கள், பிஎச்.டி. பட்டத்திற்கான ஆய்வு, சென்னைப் பல்கலைக் கழகம் (ஆய்வு தொடர்கிறது).

ii நோவா, எஃச்டி; தூத்துக்குடிப் பரதவர் நாட்டுப்புறப் பாடல்களும் கதைகளும் பிஎச்.டி. பட்டத்திற்கான ஆய்வு, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை (ஆய்வு தொடர்கிறது).

iii முருகானந்தம், ச., இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டக் கடற்கரைப் பரதவர் நாட்டுப்பாடல், பிஎச்.டி. பட்டத்திற்கான ஆய்வு, மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை (ஆய்வு தொடர்கிறது).

2. முருகானந்தம் ச., இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டக் கடற்கரைப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள், பிரசுரிக்கப்படாத ஆய்வேடு, குறுகிய கால ஆய்வுத் திட்டம், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1988.

3. i குணசேகரன், மு., தூத்துக்குடிப் பரதவர் சமூகப் பழக்க வழக்கங்கள், பிரசுரிக்கப்படாத எம்.பில். பட்ட ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1981.

ii Grace Elizabeth, Miss, The Lady of Snow, M. A. Dissertation, Madurai Kamaraj University, Madurai.

4. பாலசுந்தரம், இ., ஈழத்து நாட்டார் பாடல்கள், தமிழ்ப் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, நவம்பர், 1979.

5. புட்பராசன். மு. 'அம்பா'—அலை வெளியீடு, யாழ்ப் பாணம், 1976.

6. Chidambaranatha Pillai, V. A., Descriptive Study of a Tamil Dialect (Fisherman Dialect of South Arcot District), Annamalai University, 1969.

7. நுஃமான், எம்.ஏ., முன்னுரை,-அம்பா (மு. புட்ப ராசன்), அலை வெளியீடு, யாழ்ப்பாணம், அக்டோபர், 1976

8. கடையர் என்பவர் பரதவர் சமூகத்தினருள் ஓர் உட்பிரிவினர். இவர்தம் தொழில் சுண்ணாம்புச் சிப்பி சுடுதல், முத்துக் குளித்தல் என்பன - அபிதான சிந்தாமணி, பக். 322

9. James Hornell, The Sacred Chank of India, Article: The Chank Fisheries of India and Ceylon - Part I, Madras Fisheries Bulletin (No. 7) 1914, Pp 3-40.

10. When the Pandyan Kingdom was powerful the Paravas had grants of certain rights from the monarchy, paying the tribute from the produce of the fisheries and receiving protection and immunity from taxation in return. The fishing in these early days appears to have been extremely prosperous-thus in A. D. 1330 Friar Jordanus, who visited India at this time tells us that as many as 8,000 boats were employed in the pearl fisheries of Tinnevelly and Ceylon'

*—Edgar Thurston, Pearl and Chank Fisheries, Madras, 1894, P. 9.*

11. 'The description of the conduct of the fishery under the Portuguese by Juan Ribevro in his 'History of Ceylon' dated 1685, is the only detailed account handed down to us. (From the English translation from the French version of the Abbe Le Grand, Ceylon, 1847).

## கருவி நூல்கள்

### தமிழ்


1. கதிரைவேற்பிள்ளை, நா., தமிழ்மொழி அகராதி, ஆசியன் எசுகேசனல் சர்விசசு, புதுடெல்லி, மறுபதிப்பு, 1981.

2. குணசேகரன் மு., தூத்துக்குடிப் பரதவர் சமூகப் பழக்க வழக்கங்கள், பிரசுரிக்கப் படாத எம்.பில். ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை, 1981.

3. சிங்காரவேலு முதலியார், ஆ., அபிதான சிந்தாமணி, ஆசியன் எசுகேசனல் சர்விசசு, புதுடெல்லி, மறுபதிப்பு, 1982.

4. பாலசுந்தரம், இ., ஈழத்து நாட்டார் பாடல்கள், தமிழ்ப் பதிப்பகம், சென்னை முதற்பதிப்பு, நவம்பர், 1979.

5. புட்பராசன், மு., அம்பா, அலை வெளியீடு, யாழ்ப் பாணம், அக்டோபர் 1976.

6. பெரிய கருப்பன், இராம., மற்றும் பலர் தமிழியல் ஆய்வு, மதுரை காமராசர் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை, மதுரை, முதற்பதிப்பு, 1983.

7. முருகானந்தம், ச., இராமநாதபுரம் திருநெல்வேலி மாவட்டக் கடற்கரைப் பரதவர் தொழிற்கலைச் சொற் கள், பிரசுரிக்கப்படாத குறுகிய கால ஆய்வுத் திட்ட ஆய் வேடு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1983.

8. வானமாமலை, (தொ. ஆ.) தமிழக நாட்டுப் பாடல்கள், நியூ செஞ்சுரி புக். கவுஸ், சென்னை, முதற்பதிப்பு, 1964.

ENGLISH

1. Annie Thomas, Dissertations on Tamilology, International Institute of Tamil Studies, Adaiyar, Madras, First Edition March, 1977.

2. Grace Elizabeth, Miss, The Lady of Snow, Unpublished M.A. Dissertation, Madurai Kamaraj University, Madurai.

3. Hornell, James, The Sacred Chank of India, Madras Fisheries Bullettin No.7, 1914.

4. Thurston, Edgar, Pearl and Chank Fisheries, Madras, 1894.

# 4

# மட்டக்களப்புமாவட்டப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள் —அறிமுகம்

## 1

மட்டக்களப்பு மாவட்டம் ஈழத்தின் கிழக்குக்கரையோரமாக அமைந்துள்ளது. வெருகல்ஆறு, வங்காளவிரிகுடாக்கடல், அம்பாறை மாவட்டம், பொலநறுவை மாவட்டம் ஆகியவை முறையே இதன் வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு எல்லைகளாக அமைகின்றன. 951.6 சதுரமைல் பரப்பளவு கொண்ட இம்மாவட்டம் கிழக்கிலிருந்து மேற்காக நெய்தல், மருதம், முல்லை, குறிஞ்சி ஆகியமுறையில் நானில வள அமைப்புடன் திகழ்கின்றது.[1]

மட்டக்களப்பு மாவட்டம் தன் இயற்கை அமைப்பினால் இங்குள்ளோரை மற்றொருவருடன் கலந்து வாழ இயலாமற் செய்துள்ளது.[2] ஆயினும் இங்கே வந்து குடியேறி விட்ட சிங்களவர், முஸ்லீம் மக்களினால் மட்டக்களப்பு மாவட்ட மொழி குறிப்பிடத்தக்க வகையில் சொற்கலப்பு முதலிய தாக்கங்களுக்கு உட்பட்டுள்ளது.

இம்மாவட்ட மக்கள் கேரள நாட்டு மக்களின் பரம்பரையினரோடு தொடர்புடையவர்கள்.[3] தாய்வழிச் சமூக அமைப்புடையவர்கள். மருமக்கள் தாயமுறை முதலான விடயங்கள் கேரள நாட்டுடன் இவர்கள் கொண்டுள்ள தொடர்பைக் குறித்து நிற்கின்றன. இம்மாவட்டத்தில் வசிக்கும் பெருந் தொகையினரான முக்குவர் மலபாரிலிருந்து வந்து இங்குக் குடியேறியவர்கள் என்பர் வரலாற்றானர்.[4]

1971இல் எடுக்கப்பட்ட குடிசனக் கணக்கு எடுப்பின்படி இம்மாவட்டத்தில் 2,58,104 பேர் வசிக்கின்றனர். இம்மாவட்டத்தில் பெரும்பான்மையோராக வாழும் தமிழ் மக்களையடுத்து முஸ்லீம்கள் இரண்டாம் இடத்தை வகிக்கின்றனர். மூன்றாவதாகச் சிங்களவரின் எண்ணிக்கை அமைந்துள்ளது. அதனையடுத்துப் பரங்கியரும், மலாயரும், ஏனையோரும் இடம் பெறுகின்றனர்.[5]

| இனப்பிரிவுகள் | எண்ணிக்கை | விகிதம் |
|---|---|---|
| இலங்கைத் தமிழர் | 174736 | 67.69% |
| இந்தியத் தமிழர் | 7925 | 3.07% |
| இலங்கை முஸ்லீம் | 61188 | 23.72% |
| இந்திய முஸ்லீம் | 577 | .23% |
| கரைநாட்டுச் சிங்களவர் | 5467 | 2.12% |
| கண்டிச் சிங்களவர் | 5815 | 2.25% |
| பறங்கியர் | 2255 | .88% |
| மலாயர் | 59 | .02% |
| ஏனையோர் | 82 | .03% |
| | 258104 | 100% |

சமயத்தைப் பொறுத்தமட்டில் இந்துக்கள் முதலிடம் வகிக்கின்றனர். இஸ்லாமியர்கள், கிறித்துவர்கள், பௌத்தர்கள் முறையே இரண்டு, மூன்று, நான்காம் இடங்களை வகிக்கின்றனர்.[6]

| சமயப்பிரிவினர் | மொத்தம் | விகிதம் |
|---|---|---|
| பௌத்த சமயத்தார் | 9624 | 3.78% |
| இந்துக்கள் | 167597 | 64.98% |
| இஸ்லாமியர் | 62519 | 24.22% |
| ரோமன் கத்தோலிக்கர் | 14958 | 5.79% |
| ஏனைய கிறித்துவர் | 3558 | 1.31% |
| எஞ்சியோர் | 48 | .02% |
| மொத்தம் | 258104 | 100% |

இம்மாவட்ட மக்களில் 50.7 சதவிகிதத்தினர் விவசாயத் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். ஏனையோர் மந்தைவளர்ப்பு, மீன்பிடித்தல், காட்டுத் தொழில் முதலான தொழில்களைச் செய்து வருகின்றனர். இம்மாவட்டத்தின் கிழக்கெல்லையாகப் பரந்து கிடக்கும் வங்காளவிரிகுடாக்கடல், நாட்டின் உட்பகுதி லுள்ள மட்டக்களப்புவாவி, குளங்கள், ஆறுகள் என்பன மீன் பிடி தொழிலுக்கு வசதியாக உள்ளன. இத்தொழிலும் பெரும் பான்மையோரது பொருளாதார வாழ்க்கைக்கு ஆதாரமாக அமைந்துள்ளது.[7]

ஒருமொழி பேசும் மக்கள் வேற்றுமொழி பேசும் இனமக்க ளுடன் இணைந்து வாழும்போது மொழிக்கலப்பு ஏற்படுதல் தவிர்க்க முடியாததாகின்றது. இப்பிரதேசத்திலும், சிங்களவர், முஸ்லீம்கள், பறங்கியர் ஆகிய மக்கள் வாழ்வதால் தமிழ் மக்களின் மொழி வழக்கிற் பிறமொழிகளின் பாதிப்பு ஏற்படுதல் இயல்பாகிறது. மட்டக்களப்புப் பிரதேசம் கண்டிச் சிங்கள மன்னரின் ஆட்சிக்குட்பட்டிருந்த காலத்தொடக்கமாகத் தமிழ் மக்கள் சிங்களவருடன் சேர்ந்து வாழவேண்டிய பல சந்தர்ப் பங்கள் காணப்பட்டன. சிங்களவர் மீன்பிடி, வர்த்தகம் என்பன வற்றின் பொருட்டு இங்குத் தமிழ்மக்கள் வாழும் கிராமங்களில் வந்து குடியேறலாயினர். அவர்களின் தொடர்பால் அநேகச் சிங்களச் சொற்கள் காலப்போக்கில் மட்டக்களப்புப் பேச்சுத் தமிழில் இடம்பெற்று, அச்சொற்களின் மூலவடிவம் மாறாமலே தமிழில் வழங்குகின்றன. அவ்வாறு வழங்கும் சொற்கள் சில வற்றை மீன்பிடிப் பாடல்களில் இடம் பெற்றுள்ள சிங்களச் சொற்களாலும் அறிந்து கொள்ளலாம். மட்டக்களப்புப் பகுதி யில் சிங்களவர்கள் மீன்பிடிக்க வந்த காலத்தில் அவர்களுடன் சேர்ந்து தொழில் செய்தமையால் அவர்கள் பாடிய பாடல்களை இவர்களும் மனனம் செய்து கொண்டனர். அதே பாடல்களை இப்போது இவர்கள் வேலை செய்யும்போதும் பாடுகின்றனர். ஆனால் இவர்களுக்குப் பொருள் புலப்படுமாறில்லை. அது போன்றே முஸ்லீம் மக்களின் தொடர்பால் அரபுச் சொற்கள் பல இப்பிரதேசத் தமிழ் மக்களின் பேச்சு வழக்கில் கலந்து காணப்படுகின்றமையும் குறிப்பிடத்தக்கது. இவர்களை விடப் போர்த்துக்கேயர், ஒல்லாந்தர் ஆகியோரது தொடர்பினால் அவர்களது மொழிச் சொற்களும் இப்பிரதேச மொழிவழக்கில்

இடம் பெற்றுள்ளமையுஞ் சுட்டிக்காட்டப்பட வேண்டிய தாகும்.[8]

## 2

மட்டக்களப்பு மாவட்டப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள், ஓர் அகராதி வடிவில், இக்கட்டுரையின் பகுதி (3) இல் தரப்பட்டுள்ளன. இக்கலைச் சொற்களும் அவற்றுக்குரிய விளக்கங்களும் கலாநிதி இளைய தம்பி பாலசுந்தரம் அவர்களின் 'ஈழத்து நாட்டார் பாடல்கள் (மட்டக்களப்பு மாவட்டம்)' எனும் நூலிலிருந்து திரட்டித்தரப்பட்டனவாகும். விளக்கம் வேண்டிய கூடுதல் செய்திகள் பிற ஆய்வாளர்களின் ஆய்வேடு, கட்டுரை, நூல்களிலிருந்தும் எடுத்துத் தரப்பட்டுள்ளன. கலாநிதி இ. பாலசுந்தரம் அவர்களே தமது நூலின் பின்னிணைப்பு (1) இல் வழக்குச் சொற்களுக்கு ஒரு சொல்லடைவு உருவாக்கித் தந்துள்ளார். இச்சொல்லடைவு, இம்மாவட்டத்தார் செய்யும் அனைத்துத் தொழில்களிலும் பயனாகும் வழக்குச் சொற்களைக் கொண்டதாகும். அகராதி வடிவில் பரதவர் தொழிற்கலைச் சொற்களை அமைத்து அளிக்கும் இக்கட்டுரையாளர் செய்தபணி யாதெனில், நூல் முழுமையும் படித்துப் பரதவர் தொடர்பான கலைச் சொல், வழக்குச் சொற்களைத் திரட்டியமையும், மேற் காட்டிய சொல்லடைவிலிருந்து பரதவர் தொடர்பான கலை, வழக்குச் சொற்களைத் தனித்துப் பிரித்தெடுத்தமையும், பின் னிணைப்பு (3) இல் தரப்பட்டுள்ள மீன்பிடிப் பாடல்களில் இடம் பெறும் சிங்களச் சொல்லடைவினைப் பிரதி செய்தமை யும்—இறுதியாக இம் மூன்று முறைகளினாலும் திரண்டவற்றை விரவி அகராதி வடிவில் புதுக்கியெழுதித் தந்தமையும் என லாம். அகராதி வடிவில் அமைக்கப்பட்ட இக்கருத்துக் கோவை யின் வடிவம் இக்கட்டுரையாளரால் உண்டாக்கப்பட்டது. இதன் மூலம் கிடைத்த பயன் மட்டக்களப்பு மாவட்டப் பரதவர் பயன் படுத்தும் தொழிற்கலைச் சொற்கள், அகராதி வடிவில், ஒருங்கு திரண்டமையாகும். இங்குக் கவனமாக நினைவில் இருத்திக் கொள்ள வேண்டிய முக்கியமான செய்தி யாதெனில், முன்னே சொன்னபடி, கள ஆய்வு செய்து கலைச்சொற்களைத் திரட்டித் தந்த பெருமை கலாநிதி இ. பாலசுந்தரம் அவர்களுக்கு உரியது என்பதே.

# 3

## தொழிற்கலைச் சொற்கள்

**அங்கால :** சு. பெ., அங்கு+ஆல்; அங்கு என்பது பொருள்.

"கம்பாணை இழுக்கணும் ஏலேலோ
அங்கால வருவது ஏலேலோ"

—நாட்டார் பாடல்

**அச்சாணி :** பெ., பாய்மரம். பாய்த்தோணிக்கு அச்சாணியாக இருப்பது பாய்மரம் ஆகும்.

**அணியத்தண்டு :** பெ., அணியம் என்பது தோணியின் நுனிப் பகுதி. இந்நுனிப் பகுதியிலிருந்து வலிக்கப்படும் தண்டு, அணியத்தண்டு எனப்படும்.

''அணியத்தண்டு ஏலேலோ
போட்டு வலிக்கணும் ஏலேலோ''

—நாட்டார் பாடல்

**அணியம் :** பெ., தோணியின் நுனிப்பகுதி. நுனிப்பகுதியி லிருந்து தண்டு வலிப்போன் இருக்குமிடத்தையும் இது குறிக்கும்.

''அணியம் ஏலே
நடுக்கட்டு ஏலே''

—நாட்டார் பாடல்

**அண்டு :** கா. பெ., அன்று என்பது பொருள்.

"அண்டு ராவைக்கு ஏலேலோ
வயிரவன் பூசையாம் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

**அப்பிட்ட தேவி :** சிங்களச்சொல். இதன்பொருள் 'எங்களுக் குக் கிடைக்கும்' என்பது.

''யனவா பாறே ஏலேலோ
அப்பிட்ட தேவி ஏலேலோ''

—நாட்டார் பாடல்

அம்பா : பெ., பரதவர் தொழிற் பாடல். இதற்குப் பல மறு பெயர்கள் உண்டு. ஏலேலப்பாட்டு, கப்பல் பாட்டு, தோணிப்பாட்டு என்பன சில. "அம்பா" எனும் சொல்லுக்கு 'அழகிய பாட்டு' என்றும் ஒரு பொருள் உண்டு. அம்பிப் பாட்டு (தோணிப்பாட்டு) அம்பாவாயிற்று என்றும் கூறுவர்.[9] அம்பாள் பாட்டு (கடல் அம்மன், கடல் தேவதை) அம்பா பாட்டு என்று வழங்கப் பெறுவது வழக்காயிற்று என்றும் ஆய்வாளர் கூறுகின்றனர்.[10] 'அம்பா பாக்கியம் சம்பா விளைந்தது' என்பது பரதவர் பழமொழி. (சம்பா என்றால் கருவாடு என்பது பொருள்.)

"அம்பாவைச் சொல்லி ஏலேலோ
தண்டு இழுண்டா ஏலேலோ"

—நாட்டார் பாடல்

அம்மாமாரி : பெ. சொ., அம்பாப் பாடல்களின் இறுதியில் ஏலேலோ, ஆவேலோ முதலான ஒலித்தொடர்கள் வருகின்றன. இவற்றிற்குப் பிறகு ஐயா, ஜாலம்மா, அம்மா மாரி, முத்துமாரி எனும் பெயர்ச்சொற்கள் இடம் பெறுகின்றன.

அய்யாக்கபொர : சிங்களச் சொல், 'அண்ணனுடன் சண்டை' என்பது இதன் பொருள்.

"அய்யாக்கபொர ஏலேலோ
தேவி தேவுண்ணா ஏலேலோ"

—நாட்டார் பாடல்

அரண்ட நீர் : பெ., கடலில் ஏற்படும் நீரோட்டத்தின் தொடக்க நிலை சூடாகிய நீர் என்றும் பொருள் உண்டு.

"ஆழிக்கடலாம் ஏலேலோ
அரண்ட நீரில் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

அருவாக்கத்தி : பெ., அரிவாள்+கத்தி. அரிவாள் மணை என்றும் கூறுவர்.

"மடியில கட்டி ஏலேலோ
அருவாக் கத்தி ஏலேலோ

அறுக்குளாவெட்டி ஏலேலோ
நாவலப்பிட்டி ஏலேலோ''

—நாட்டார் பாடல்

**அலைகடல் :** பெ., கடல், அலைகடல் என்றும் வழங்கப்படும். சிலவேளைகளில் ஆழம் குறைந்த கடற்கரையையொட்டிய கடல் நீர்ப் பகுதியையும் குறிக்கும். பொதுவாக அலை, கடற்கரைப் பகுதியில் மிகுதியாக இருப்பதன் காரணமாக அலை கடல் கடலோரப்பகுதியைக் குறிப்பதாகலாம். சில வேளைகளில் கடலுக்கு அடையாக அலை அமைவதுண்டு.

''ஆராய்ந்த முத்தோ—நீ
அலைகடலில் ஆணி முத்தோ''

—நாட்டார் பாடல்

**அல்லங்கொல்லக்க :** சிங்களச் சொல். 'எல்லோருமாகப் பிடியுங்கள்' என்பது பொருள்.

''ஏலே ஏலே ஏலேலோ
ஏலையா ஏலே ஏலேலோ
அல்லாங் கொல்லக்க ஏலேலோ
கொல்லக்கமாதுள ஏலேலோ''

—நாட்டார் பாடல்

**அல்லப்பங்புத்தே :** சிங்களச் சொல். 'பிடியடா மகனே' என்பது இதன் பொருள்.

''ஒன்னரஜு ஏலேலோ
அல்லப்பாங்புத்தே ஏலேலோ''

—நாட்டார் பாடல்

**அல்லங்வரே :** சிங்களச் சொல். 'பிடித்து வாடா' என்பது இதன் பொருள்.

**அல்லாஹ் :** பெ., நடுக்கடலில் செல்கின்றவர்களுக்குக் கடல் பற்றிய பயம் ஏற்படுதல் இயற்கை. ஆதலினால் ஆக்கடல் பற்றிக் குறிப்பிட்டு இடையிடையே தெய்வங்களை நினைந்து கொள்ளும் வகையில் சீதேவி, நாய்ன, அல்லாஹ், முதலிய தெய்வங்களை வேண்டிக் கொள்கின்றனர் அல்லாஹ்—முகமதியரால் வணங்கப்படும் இறைவன்.

"ஆழ்கடலில் ஏலேலோ
அல்லா தருவான் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

அவுறுது தெக்காய் : சிங்களச்சொல். இதன் பொருள், 'இரு வருடங்கள்' என்பதாம்.

"அவுறுது தெக்காய் ஏலேலோ
தெக்கமடமாம் ஏலேலோ

—நாட்டார் பாடல்

அறுக்குனா : சிங்களச்சொல். அறுக்குளா மீன்.

"அறுக்குளாவெட்டி ஏலேலோ
நாவலப்பிட்டி ஏலேலோ"

—நாட்டார் பாடல்

அனுமக்கொடி : பெ., பாய்க்கப்பலில் பல கொடிகள் பறக்க விடப்படும். கொடியில் எழுதப்பட்டுள்ள உருவத்திற்கு ஏற்ப கொடிக்குப் பெயர் அமையும். அனுமன் வடிவம் எழுதப்பட்ட கொடியை அனுமக் கொடி என்பர்.

அன்னக் கொடி : பெ., மேற்படி விளக்கம் காண்க. அன்னத்தின் வடிவம் எழுதப்பட்ட கொடி அன்னக்கொடி எனப் படும்.

அன்னவரே : சிங்களச் சொல். 'அந்த மாதிரி' என்பது இதன் பொருள்.

"வரட்டேயண்ண ஏலேலோ
அன்னவரே ஏலேலோ"

—நாட்டார் பாடல்

ஆடாட : வி.எ., ஆட+ஆட=ஆடாட. வலை இழுக்கும்போது இச்சொற்றொடர் பாடப்படுகின்றது.

"ஆவேலோ ஏலேலோ
ஆடாட ஏலேலோ"

—நாட்டார் பாடல்

ஆணிமுத்து : பெ., 'ஆணி' எனும் சொல்லுக்கு முதன்மை, மேன்மை, என்பன பொருளாகும். (தமிழ்மொழி அகராதி,

1981, ப. 177) ஆணித்தங்கம்—உயர்ந்த பொன் (177); ஆணிப்பொன்—உயர்ந்த பொன் (178); ஆணிவேர்—உச்சி வேர்; முதன்மை வேர் (178); ஆணிமுத்து—வயிர முத்து (178); முத்துக்களில் உயர்ந்த முத்து ஆணிமுத்து என்பர் ஆய்வாளர்.

"ஆராய்ந்த முத்தோ—நீ
அலைகடலில் ஆணிமுத்தோ"

—நாட்டார் பாடல்

ஆய்தியங் : சிங்களச்சொல். இதன் பொருள் 'திரும்பவும் இழு' என்பதாகும்.

"ஆய்தியங் ஏலேலோ
அல்லேலவரே ஏலேலோ"

—நாட்டார் பாடல்

ஆராய்ந்த முத்து : பெ., முத்துக்களிலேயே மிகுந்த சிறப்புடைமை காரணமாக ஆராய்ந்து எடுக்கப்பட்ட முத்து என்பர். (தாய்மார் தம் குழந்தையை இவ் உவமையால் விளித்துத் தாலாட்டு இசைப்பர்)

"ஆராய்ந்த முத்தோ—நீ
அலைகடலில் ஆணிமுத்தோ"

—நாட்டார் பாடல்

ஆருடா : வி.பெ., யார்+அடா=யாரடா.

"ஆக்கள் இல்லாத நேரம் ஏலேலோ
நீங்கல்லாம் போனா ஏலேலோ
இஞ்ச ஆருடா ஏலேலோ
வலையிழுப்பது ஏலேலோ"

—நாட்டார் பாடல்

ஆவேலோ : பொருளற்ற ஒலித்தொடர். இது பரதவரின் அம்பாப் பாடல்களில் இடம்பெறும் தொடராகும்.

ஆழிக்கடல் : பெ., ஆழி எனினும் கடல் எனினும் ஒன்றே. 'ஆழிசூழ் உலகெல்லாம் பரதனே ஆள'—கம்பராமாயணம். ஆயினும் இது பரதவர் வழக்கில் ஆழம்மிகுந்த நடுக்கடலைக் குறிக்கும்.[11] ஆழம் குறைந்த கரையோரக் கடலை 'அலை

கடல்' என்றும் நடுக்கடலை ஆழிக்கடல் என்றும் குறிப்பிடுவர்.

"ஆழிக்கடலாம் ஏலேலோ
அரண்ட நீரில ஏலேலோ

—நாட்டார் பாடல்

இஞ்ச : சு. பெ., இங்கே—இஞ்சே—இஞ்ச; இது போன்று இஞ்சால, இங்கால, இங்கிட்டு என்ற சொல்லாட்சிகளும் வழங்குகின்றன.

"இஞ்ச ஆருடா ஏலேலோ
அலையிழுப்பது ஏலேலோ"

—நாட்டார் பாடல்

இலைச்சி : வி எ; இலைத்து; கடலில் மீன்கூட்டம் நீர் மட்டத்திலே தோன்றும் காட்சியை 'மீன் இலைத்தல்' என்று கூறுவர்.

"மீன் இலைச்சி ஏலேலோ
வலைக்காலுக்கு ஏலேலோ
வருது மக்காள் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

இழுக்கணும் : வி. மு., இழுக்க வேண்டும்—இழுக்கவேணும்—இழுக்கணும். இது தண்டு இழுப்பதைக் குறிக்கும்.

"காய்ஞ்சி இழுக்கணும் ஏலேலோ
சரிஞ்சி இழுக்கணும் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

இழுக்காட்டி : வி. எ., இழுக்காவிட்டால்.

"வலைக்காலுக்கு ஏலேலோ
வருகுது மக்காள் ஏலேலோ
நாம இழுக்காட்டி ஏலேலோ
புறப்பட்டுப் போயிரும் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

ஈரவல : பெ., நனைந்த வலையைத் தோணியில் ஏற்றி இரண்டாம், மூன்றாம் பாடுகள் (முறை) கடலிற் செல்வர்,

ஈரமாயிருப்பதால் இவ்வலை ஈரவலை எனப்படும். 'மீன் பாட்டிற்காகக் கரையிலிருந்து ஆழ்கடலை நோக்கி ஓடிய படகு, மீண்டும் கரையை நாடிப் பலவகைப்பட்ட வலைகளை இளக்கிக் கொண்டே வரும். இத்தகைய வலைகளுள் ஒன்றே ஈரவலையாகும். 15 அளியும் 4½ அடி நீளமும் கொண்டது இது. இதுவே முதலில் இறங்கும் வலையாகும்' என்பர் ஆய்வாளர்.[12] ஈரவலை ஏற்றிச் செல்லும்போது பாரத்தின் காரணமாகத் தண்டு வலிப்பது சிரமமாக இருப்பதை,

"ஈரவலை ஏத்தி ஏலேலோ
நால்வரும் தண்டிழுக்க ஏலேலோ"

—நாட்டார் பாடல் மூலம் அறியலாம்.

**உசக்கப் போகணும் :** வி.மு., ஆழிக்கடல் நோக்கிப் போதலை, இத்தொடர் குறிக்கிறது. கரையிலிருந்து கடலைக் காணும்போது கடல் போகப் போக உயர்ந்து கொண்டே போவது போலத் தெரியும். கடலுள் இறங்கி மேலும் மேலும் ஆழிக்கடல் நோக்கிச் செல்லுதலை இது குறிக்கிறது. இது காரணம் பற்றியே 'உசக்கப் போகணும்' என்கின்றனர்.

"பொழுது கிளம்புது ஏலேலோ
பொழுது விடியுது ஏலேலோ
கெதியாப் போகணும் ஏலேலோ
உசக்கப்போகணும் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

**உயிரவாட்டுதல் :** வி.பெ., கடல் அலைகள் மேலும் மேலும் மேலெழும்பிப் பெருகி வருதலைக் கண்டால் பரதவர் அஞ்சுவர். விழிப்புடன் செயல்படுவர். இவ் அலைகள் தமது உயிரை வாட்ட வருவதாகவே கொள்வர்.

"கடலில் நீரும் ஏலேலோ
உழுந்து வருகுது ஏலேலோ
நம்மட உயிர ஏலேலோ
வாட்டப் போகுது ஏலேலோ"

—நாட்டார் பாடல்

**உரமாய் இழு :** ஏ. வி., 'வேகமாய் இழு' எனும் பொருளது.

"உரமாய் இழுத்தா ஏலேலோ
வலைபிஞ்சிடும் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

**உருளே :** சிங்களச்சொல். இதன் பொருள் 'சூடைமீன்' என்பதாகும்.

"அறுக்குளாமாலு ஏலேலோ
உருளேமாலு ஏலேலோ"

—நாட்டார் பாடல்

**உழுந்து வருகுது :** விமு. அலைகள் மேலும் மேலும் உருண்டு வருதல். பார்க்க : உயிர வாட்டுதல்.

**உறுக்குதல் :** தொ. பெ., எச்சரித்தல். கடிநாயை அடக்குவதற்காகப் பகைவர் மந்திரத்தால் அதனை வாய் பேசாதிருக்கும் வண்ணம் சபிக்கும் மந்திரமும் உறுக்குதல் எனப்படும்.

சத்தமிட்டு வேகமாகத் தோணிதள்ளுவதையும் உறுக்கித் தள்ளுதல் என்பர்.

"உறுக்கிப் புடிரா ஏலேலோ
ஏத்திக்கட்டு ஏலேலோ
முதுகைக் கொடுத்து ஏலேலோ
கிளப்பியடிரா ஏலேலோ"

—நாட்டார் பாடல்

**ஏத்தணும் :** விமு., ஏற்றவேண்டும்—ஏத்த வேணும்—ஏத்தணும்.

"கறுப்புப் பாக்கணும் ஏலேலோ
மடிகரை ஏத்தணும் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

**ஏத்திக்கட்டு :** ஏ.வி., உயர்த்தித்தள்ளு. தோணியைத் தோணினால் அல்லது முதுகினால் உயர்த்தித் தூக்கித் தள்ளுவதை ஏத்திக் கட்டுதல் என்று கூறுவர்.

"உறுக்கிப் புடிரா ஏலேலோ,
ஏத்திக்கட்டு ஏலேலோ"

—நாட்டார் பாடல்

ஏலப்பாட்டு : பெ., 'ஏல, ஏலோ' என்ற ஓசை இசைத்துப் பாடப் படுவதால் இஃது ஏலப்பாட்டென்றும், ஏலேலப் பாட்டென்றும் வழங்கலாயிற்று.

ஏலேலப்பாட்டு : பெ., மேலது காண்க.

ஏலேலோ : இசைக்குறிப்புத்தொடர்; இதுபோன்றே ஏலேலம் ஏலலோ, ஏலே, ஏலஏலம் என்னும் தொடர்களும் இவர் தம் பாடல்களில் காணக்கிடக்கின்றன.

ஐயா : பெ., அம்பாவில் இடம் பெறும் அம்மாமாரி, மூத்து மாரி போன்று ஒரு பெயர்ச்சொல்.

ஐயாடா : பெ., 'ஐயாவுடைய' என்பது பொருள்.

ஐயாடி : ஒலித்தொடர்.

> ''ஆடாட ஏலேலோ
> ஐயாடி ஏலேலோ''
>
> —நாட்டார் பாடல்

ஓக்கம் : சிங்களச்சொல். இதன் பொருள் 'எல்லோருமாக' என்பது.

> ''கள்ளியின் தின்னம்பால் ஏலேலோ
> ஓக்கம தண்டுக்கை ஏலேலோ''
>
> —நாட்டார் பாடல்

ஓயாங்ஆவே : சிங்களச்சொல்; 'அங்கே வருகிறது' எனும் பொருளது.

> ''ஓயாங்காவே ஏலேலோ
> கொந்தவேலாவே ஏலேலோ''
>
> —நாட்டார் பாடல்

ஓன்னரஜ் : சிங்களச்சொல். 'இதோபார்' எனும் பொருள் உடையது; நட்பின் அடிப்படையில் ஒருவரையொருவர் இவ்வாறு அழைப்பது வழக்கம்.

> ''கொந்த வேலாவே ஏலேலோ
> ஓன்ன ரஜு ஏலேலோ''
>
> —நாட்டார் பாடல்

**ஓடப்பாட்டு :** பெ., ஓடம் ஓடப் பாடுவதால் ஓடப்பாட்டா யிற்று.

**ஓடித்தள்ளு :** ஏ.வி., தோணியைக் கடலுக்குள் தள்ளி இறக்கும் போது ஒருவரை மற்றொருவர், 'ஓடித்தள்ளு' என்று ஏவுவர்.

> "ஓடித்தள்ளு ஏலே
> இறுகித் தள்ளு ஏலே"
>
> —நாட்டார் பாடல்

**ஓடி வளைதல் :** தொ. பெ., தண்டு வலிப்போர் கடலில் 'கறுப்புப் பார்த்தவுடன் கலத்தை லாவகமாகச் செலுத்தி இளக்கிய வலையின் உதவிகொண்டு எல்லா மீன்களையும் ஒன்று விடாமல் வளைத்துப் பிடிப்பர்.

> "கறுப்புப் பாக்கணும் ஏலேலோ
> ஓடி வளையணும் ஏலேலோ"
>
> —நாட்டார் பாடல்

**கங்காணி :** பெ., மீன்பிடி கலங்களில் 'மேலாளர்' போலச் செயல்படுபவர்; பொதுவாகத் தோணி முதலான கலங்களில் இருந்து கொண்டு முதலாளியர்க்குச் சாதகமாகும் வகையில் தொழிலாளியரைக் கசக்கிப் பிழிந்து வேலை வாங்குபவர்; இதனாலேயே கடல்துறைத் தொழிலாளிகளின் பகைமைக் கும் பரிகாசத்துக்கும் உரியராவார். சான்றாக, அவர்கள் தமது பாடலில் கங்காணி மனைவி வெங்காயம் விற்பதாகக் கூறுவர்; இது அவளது பரத்தமை ஒழுக்கத்தை மறைமுக மாகச் சுட்டிக்காட்டித் தாக்குகிறது. சான்று :

> "கங்காணி பெண்சாதி ஏலேலோ
> வெங்காயம் விக்காவாம் ஏலேலோ
> காசிக்கு ரெண்டாம் ஏலேலோ
> கடனுக்கு நாலாம் ஏலேலோ"
>
> —நாட்டார் பாடல்

**கச்சான் :** பெ., மேல்திசைக்காற்று; மழைவரு முன்னர் வீசும் காற்று என்பர். 'கச்சான் மழைக்கு மச்சான்' என்பது பழ மொழி.

> "கச்சான் அடிக்க, கயல்மீன் குதிபாய"
>
> —நாட்டார் பாடல்

**கட்க்கரை :** பெ., கடல்+கரை=கடற்கரை;

**கடல்அம்மன் :** பெ., தண்டு வலிப்போர் முதலானோர் இறை சிந்தனை கொள்ளும் தன்மை காணப்படுகின்றது. கடலில் ஏற்படக் கூடிய ஆபத்துக்களைப் போக்கக் கடல் நாச்சி யம்மனை இம்மக்கள் வழிபடுவர்; பரதவரால் வணங்கப்படும் தெய்வங்களுள் கடல் அம்மனும் ஒன்று. கடலுறை தெய்வ மாகிய கடல்நாச்சியை—அம்மனை—இப்பிரதேச மக்களைப் போலவே தமிழகப் பரதவர்களும் வணங்குவர்.

**கடல்நாச்சி :** பெ., மேலது காண்க.

**கண்மணித்தாய் :** பெ., பரதவர் வணங்கும் தெய்வம்; கோவலன் மனைவி கண்ணகியை இவர்கள் 'கண்மணித்தாய்' என் கின்றனர். பெரும்பாலான பரதவர் அம்பாப்பாடல்களில் சிலப்பதிகாரக்கதைக் குறிப்புகள் பல இடம் பெறுகின்றன. பரதவருள் செட்டிகள் எனும் ஓர் உட்பிரிவு இருப்பதும் கோவலன்—கண்ணகி குடும்பங்கள் மிகுந்த செல்வ நிலை யில் துறைமுகநகரில் வாழ்ந்து வந்த செட்டி குடும்பங்கள் என்பதும் ஈண்டு ஒப்புநோக்கி நினையத்தகுந்த செய்தி களாகும்.

"கண்மணித்தாயே ஏலேலோ
களவுகள் பண்ணாதே ஏலேலோ"

—நாட்டார் பாடல்

**கப்பல் :** பெ., கடலில் இயங்கும் கலம். பாரம், பெறுமதி நோக்கிக் கப்பலினை 'விதமான கப்பல்' என்பர்.

**கப்பல் பாட்டு :** பெ., மரக்கலம் (கப்பல்) செலுத்தப்படும் போது இப்பாடல்கள் பாடப்படுவதால் இதனைக் கப்பல் பாடல் என்பர் ஆய்வாளர்.

**கம்பன் :** பெ., காளிக்குரிய ஓர் அடைமொழி.

"கம்பன்காளி ஏலேலோ
விநோதகாளி ஏலேலோ"

—நாட்டார் பாடல்

**கம்பான் :** பெ., கம்பாகம்; மொத்தமான கயிறு. யாழ்ப்பாணப் பகுதிகளில் இக்கயிற்றின் நீளம் சுமார் 100 அடியுள்ளது.

கம்பான் கயிற்றின் இறுதியில் ஈரவலை முடியப்பட்டிருக்கும் என்பர் ஆய்வாளர்.[13]

"கம்பானை இழுக்கணும் ஏலேலோ
அங்கால வருவது ஏலேலோ
தலவலதாண்டா ஏலேலோ"

—நாட்டார் பாடல்

கரவல : பெ., வலைவகை; அதிகாலையிலே தோணியைத் தள்ளிக்கொண்டு போய் மீன்வரும் வரையும் காத்திருப்பர். 'கிளை கிளையாக' மீன் வந்ததும் வளைத்துப் பிடிப்பர். யாழ்ப்பாணப்பகுதிகளில் இவ்வலை 2 கிலோ மீட்டர் நீளமும் 200 மீட்டர் அகலமும் 5 மீட்டர் உயரமும் உடையதாக இருக்கும்; கரைவலைத்தொழில் மிகவும் கடினமானது.[14]

"ஓடி வளையணும் ஏலேலோ
மடிகரை ஏத்தணும் ஏலேலோ
நங்கூரம் போடணும் ஏலேலோ
உசக்க போகணும் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

கருவாடு : பெ., மீன்வற்றல். 'Caravado' என்ற போர்த்துக்கேயச் சொல்லை நோக்குக.

"உள்ளதைக் காகம் ஒளியாமல் சொன்னியெண்டால்
காசி கொடுத்து நான் கருவாடு வாங்கித் தாறன்"

—நாட்டார் பாடல்

கரைக்குப் போகணும் : வி.மு., தண்டு வலிப்போர் விரைவில் கரைக்குத் திரும்ப வேண்டும் எனும் ஆர்வம் கொள்வர்.

"கரைக்கு ஏலே
கெதியா ஏலே
போகணும் ஏலே"

—நாட்டார் பாடல்

கவுத்து வல : பெ., கம்பான் கயிற்றுடன் இணைக்கப்பட்டிருக்கும் வலை; கயிற்றுவலை.

"கவுத்துவல ஏலேலோ
வந்திட்டு தம்பி ஏலேலோ"

—நாட்டார் பாடல்

**கறுப்புப்பார்த்தல் :** தொ. பெ., கடலில் மீன்கூட்டம் ஓடும்போது நீர்மட்டத்தில் சுழிகள் தென்படும். அவை பார்வைக்குக் கறுப்பாகத் தோன்றும். அவற்றின் துணையால் மீன் வருவதைப் பரதவர் கவனிப்பர். இதற்குக் 'கறுப்புப் பார்த்தல்' என்பது பெயராகும்.

"கறுப்புப்பாக்கனும் ஏலேலோ
ஓடி வளையனும் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

**கல்லடிப்பாடு :** பெ., கடலில் காணப்படும் பாறை. பரதவர் கல்லடிப்பாடுகளில் வலை இளக்கும் போது மிகக் கவனமாகத் தொழிற்படுவர். இல்லையெனில் வலை கிழிந்து வீணாகிவிடும்.

"கல்லடிப்பாடாம் ஏலேலோ
காடு வனாந்திரம் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

**காலகிநாட்டுதல் :** தொ. பெ., பாய்த்தோணிக்கு அச்சாணியாக அமைவது பாய்மரமாகும். ஆதவினால் 'அச்சாணியாய்க் காலதுநாட்டி அழகான பாய்விரிக்க வேண்டும்' எனப்பாடுவர். தமிழ் நாட்டுத் திருமணச்சடங்குகளில் 'பந்தக்கால் நடுதல்' என்பதும் ஒன்று. திருமணப்பந்தலைத் தாங்கும் 'கால்நாட்டுதல்' ஒரு சிறப்பு நிகழ்ச்சியாகும். இது இங்கு ஒப்புநோக்கத்தக்கது. தோணியை இயக்கும் மிக முக்கியமான உறுப்பான பாய்மரமே இங்குக் 'கால்' எனப்படுகிறது. காற்றைப் பயன்கொள்ளப் பாயும் பாய்மரமும் அவசியம். இதன் மூலம்தான் பாரம் மிகுந்த தோணி கடல் பரப்பில் இலகுவாக இயங்குகிறது.

"ஏல்ஏலம் ஏலஏலம் அன்னக்கொடி ஏலஏலம்
கெருடக்கொடி ஏலஏலம் அனுமக்கொடி ஏலஏலம்
தான் பறக்க ஏலஏலம் அச்சாணியாய் ஏலஏலம்
காலகி நாட்டி ஏலஏலம் அழகான ஏலஏலம்

பாயை விரித்து ஏலஏலம் காற்றடிக்க ஏலஏலம்
மரம் அசையும் ஏல ஏலம்...''

—நாட்டார் பாடல்

**ஙளப்பியடி :** ஏ. வி., தோணியைக் கடலுள் தள்ளி இறக்கும் போது இச்சொல் பயன்படுகிறது. ஒருவன் முதலில் ''ஓஓஓ...டிரலே'' என நீண்ட உரத்த தொனியில் குரல் எழுப்ப, ஏனையோர் 'ஏலே' எனக்கூறித் தோணியைத் தள்ளத் தொடங்குவர். முத்துக்குமாரி, ராஜகுமாரி எனத் தோணியைப் பெண்ணாக உருவகித்துத் தூக்கித் தள்ளு, ஙளப்பியடி எனப் பாலியல் உணர்வு மீதூரப் பேசுவர்.

''முத்துமாரி ஏலே ராஜக்குமாரி ஏலே
தூக்கித்தள்ளு ஏலே ஙளப்பியடி ஏலே''

—நாட்டார் பாடல்

**ஙளம்புது :** வி. மு., ஙளம்புகின்றது; அதிகாலையில் தோணியைத் தள்ளிக் கொண்டு போய் மீன்வரும் வரையும் காத்திருப்பர் என்பதைப் 'பொழுது ஙளம்புது' எனும் தொடர் விளக்குகிறது.

''பொழுது ஙளம்புது ஏலேலோ
பொழுது விடியுது ஏலேலோ''

—நாட்டார் பாடல்

**ஙளவள்ளா :** சிங்களப் பெயர். கடலில் பிடிக்கப்படும் ஒருவகை மீன்; கடல் படுமீன்.

''டேய் அங்கபாருடா ஏலேலோ
வலக்காலில ஏலேலோ
ஒரு கடி கடிச்சமாதிரி ஙடக்கு ஏலேலோ
சூரையோ பாரையோ ஏலேலோ
ஙளவள்ளாவோ தெரியாது ஏலேலோ
ஓடி இழுக்கணும் ஏலேலோ''

—நாட்டார் பாடல்

**ஙளைஙளையாக வருதல் :** தொ. பெ., கடலில் மீன் கூட்டம் கூட்டமாகவே—ஙளை ஙளையாகவே வரும். தூரத்தே அதனைக் காணும்போது கறுப்பாகவே அது காட்சி தரும்;

அதனைக் கண்டதும் 'மீன் கறுப்புத் தெரிகிறது' என்பர் பரதவர்.

**கிறுகி :** வி. எ., இச்சொல் மட்டக்களப்பில் மட்டும் வழங்கு கிறது. 'திரும்பி' என்னும் இறந்தகால வினையெச்சச் சொல்லின் பொருளிலே கிறுகி என்பதும் வழங்குகின்றது. திரும்புதல் என்னுந் தொழிற் பெயருக்கு ஒப்புடைய தாகவே கிறுகுதல் என்ற வழக்குச்சொல் காணப்படுகிறது. மயக்கம், சுழற்சியைக் குறிக்கக் கிறுகிறுப்பு என்ற சொல் வழங்குகிறது.

"ஓடித் தள்ளு ஏலேலோ
கிறுக்கித்தள்ளு ஏலேலோ"

எனத் தோணியைத் தள்ளும்போது பாடுவது கவனிக்கத் தக்கது.

**கிறுக்கித்தள்ளு :** ஏ. வி., மேலது காண்க

**குளிச்செடுத்தல் :** தொ. பெ., சங்கு, முத்து ஆகியன பரதவ ரால் குளித்தெடுக்கப்படுகின்றன. 'சங்கு குளி—சங்குளி' என்பது சங்கு குளித்தலைக் குறிக்கும். முத்துக் குளித்தல் என்பதும் இவ்வாறே. (பார்க்க: முத்துக்குளித்தல், முத்துக் குளிப்பவர், முத்துக் குளியாள், முத்துச்சலாபம்—இராமநாத புரம் திருநெல்வேலி மாவட்டக் கடற்கரைப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள், ப. 154.)

"கொட்டி வைச்ச முத்தோ—நீ
குளிச்செடுத்த ஆணிமுத்தோ"

—நாட்டார் பாடல்

**கெதரேநெத்தி வெலாவே :** சிங்களச் சொல் தொடர். இதன் பொருள் 'வீட்டில் இல்லாத நேரத்தில்' என்பதாகும்.

**கெதியாப்போகணும் :** வி. மு., விரைவாகச் செல்ல வேண்டும் எனும் பொருள் தரும் தொடர்.

"கெதியாப் போகணும் ஏலேலோ
கெதியாப் போகணும் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

கெருடக்கொடி : பெ., பார்க்க—அனுமக்கொடி, அன்னக் கொடி.

> "ஏல் ஏலம் ஏலஏலம் அன்னக் கொடி ஏலஏலம்
> கெருடக்கொடி ஏலஏலம் அனுமக்கொடி ஏலஏலம்
> தான் பறக்க ஏலஏலம் அச்சாணியாய் ஏலஏலம்"

—(நா. பா.) எனப் பரதவர் தோணி தள்ளும்போது பாடுதல் காண்க.

கொந்த : சிங்களச்சொல். 'நல்ல' எனும் பொருளது.

> "ஓயாங்காவே ஏலேலோ
> கொந்தவேலாவே ஏலேலோ"

—நாட்டார் பாடல்

கொல்லாக்கட்டு : பெ., தோணி ஆழ்ந்து விடாதிருக்கத் தோணிக்குச் சமாந்திரமாகக் கட்டப்பட்டிருக்கும் சிறுமரம்; தோணி புரளாமலிருப்பதற்காகவும் அது தோணியுடன் பொருத்தப்பட்டிருப்பதால் ஆட்களைக் கொல்லாது பாதுகாக்கும் தன்மையது என்பர். அதனால் காரணப் பெயராயிற்று.

> "ஏத்திக்கட்டு ஏலே
> முதுகைக்கொடுத்து ஏலே
> கிளப்பியடிரா ஏலே
> கொல்லாக்கட்டு ஏலே"

என்பது (நா. பா.) தோணித் தொழிலாளர் பாடல்.

கோராதமுத்து : பெ., இதுவரையில் யாராலும் கோக்கப் படாத முத்து; மிகச் சிறந்தது. இதுவரை யாரும் இத் தன்மைத்தான முத்தினைப் பயன் கொண்டதில்லை எனும் அளவுக்குச் சிறப்புடைய முத்து.

> "கோராத முத்தோ—நீ
> குறத்திகையில் தாவடமோ"

—நாட்டார் பாடல்

கோஸலந்த : சிங்களச்சொல். இதன் பொருள் 'சத்தமிட்டு இழுங்கோ' என்பது.

"கோஷாலங்தே ஏலேலோ
முப்புரிக்கயிறும் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

**சங்கு :** பெ., கடல்வாழ் மெல்லுயிரினம் ஒன்றின் புறக்கவசம். வளை செய்யவும் உயர் ரகச் சுண்ணாம்பு, பெயிண்ட் தயாரிக்கவும் சங்கும் சங்குக்கழிவும் முறையே பயன்படு கின்றன. சங்கிலிருந்து முத்து பிறப்பதில்லை எனினும் நாட்டுப்புறப் பாடல்களிலும் பண்டிதப் புலவர்கள் எழுதிய தலபுராணம், பிள்ளைத்தமிழ் நூல்களிலும் சங்கிலிருந்து முத்து பிறப்பதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

"சங்கீன்ற முத்தோ—நீ
சமுத்திரத்தில் ஆணிமுத்தோ"

என்பன ஒரு தாலாட்டுப்பாடலின் அடிகள்.

**சங்கு வளலை :** பெ., சங்குச்சதை. சங்கினுள் இருக்கும் ஊன். பரதவர் இதனைச் சிப்ஸ் ஆக்கிப் பொரித்து உண்பர்.[15] எளியமக்களின் உணவுப் பொருளாகவே இன்னும் இருப்ப தால் தமக்கு வேண்டியவர்களைப் பரிகாசம் செய்ய 'சங்கு வளலை தின்பவனே' எனக் கூறுவர்.

"ஆமை தின்னி தூமை தின்னி அடைகோழி முட்டை
தின்னி
சங்குவளலை தின்னி—இப்போ சருவாதடா
என்னோட"

—நாட்டார் பாடல்

**சங்கு முழங்குதல் :** தொ. பெ., சங்குகள் தானாகவே ஒலி எழுப்பும் என்பர் பரதவர். கடலுள் சங்கு குளிக்கும் தொழிலாளர் சங்கு எழுப்பும் ஒருவித ரீங்கார ஒலியைக் கேட்பதாக நம்பப்படுகிறது. கடற்கரைப் பகுதியில் உள்ள ஊர்களுக்குக் கூட இவ்வொலி கேட்குமாம். அதிகாலைப் பொழுதில் இப்படிக் கேட்பதுண்டு என்பர். சங்கு முழங்கும் கடற்கரை ஊர் சுபிட்சம் அடையும் என்பதும் பரதவர் நம்பிக்கை. பொய்கைகளிலும் சங்கு உருவாகி முழங்குவ துண்டு.

"சங்கு முழங்குதங்கே தாமரையாள்
பொய்கையிலே"

—நாட்டார் பாடல்

**சங்கெடுத்தல் :** தொ. பெ., காண்க: சங்கு குளித்தல்.

"சங்கெடுக்கப் போனவர்கள்
சந்திரரோ, சூரியரோ"

—நாட்டார் பாடல்

**சமுத்திரம் :** பெ., பெருங்கடல்.

"சங்கீன்ற முத்தோ—நீ
சமுத்திரத்தில் ஆணிமுத்தோ"

—நாட்டார் பாடல்

**சரிஞ்சி இழுத்தல் :** தொ. பெ., தண்டு வலிப்போர் சாய்ந்தும் சரிந்தும் தண்டு வலிப்பர்; சரிந்து—சரிஞ்சி.

"சாய்ஞ்சி இழுக்கணும் ஏலேலோ"
சரிஞ்சி இழுக்கணும் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

**சர்க்கரை அமுது :** "சர்க்கரை அமுது" என்பது இங்கு சமூக சமயச் சடங்காக (Socio-religious rites) நடைபெற்று வருகின்றது. பெண்தெய்வ வழிபாட்டின் அடிப்படையில் நிகழும் இச்சடங்கு குல தெய்வங்களைச் சாந்தப் படுத்தி அருள் பெறும் நோக்குடன் நடத்தப் படுகின்றன. இச்சடங்குகளின் மூலம் கொடிய நோய்களும் துன்புறுத்தும் கொடிய தேவதைகளும் தம் இல்லம் அணுக மாட்டா என்ற நம்பிக்கை இவர்களிடம் நிலவுகின்றது. நேர்த்திக் கடன் வைத்து ஆண்டுக்கு ஒருதடவை இல்லந்தோறும் சர்க்கரை அமுது நடத்தும் வழக்கம் உடையர்.

"திங்கள், புதன், வெள்ளி ஆகிய நாள்களில் இச்சடங்கு நடைபெறும். சடங்கிற்கு முதல்நாள் வீட்டுக்காரர் தம் சுற்றத்தவரில் பத்து வயதுக்குட்பட்ட பெண் சிறுமிகள் ஐவரையும் அவர்களுடன் வண்ணான், அம்பட்டன், தட்டான் ஆகிய மூன்று சாதியருள்ளும் மேற்குறிப்பிட்ட

வயது அடிப்படையில் மூன்று பெண் பிள்ளைகளையும் சடங்கிற்கு அழைப்பர். சடங்கு வேளையில் இப்பிள்ளைகள் பெண் தெய்வத்தின் பிரதிநிதிகளாகப் பாவனை செய்யப்படுகின்றனர்; மேற்குறிப்பிட்ட மூன்றுசாதிப் பிள்ளைகளையும் சடங்கிற்கு அழைப்பதன் மூலம் கொடிய தேவதைகள் தம் இல்லம் வர அஞ்சும் என இவர்கள் நம்புகின்றனர்.

இச்சடங்கு நடைபெறும் தினத்தில் சாணத்தால் வீடு மெழுகிச் சுவாமி அறையில் நிறைகுடம்வைத்து வேப்பிலையால் வீடு அலங்கரிக்கப்படும். அதன்பின் வீட்டுத் தலைவி வேப்பிலையுடன் உறவினர் வீடுகளுக்குச் சென்று மாரியம்மன் பெயரால் மடிப்பிச்சையாக அரிசி பெற்று வந்து அதனைத் தம் அரிசியுடன் சேர்த்து சர்க்கரைப் பொங்கல் பொங்குவார். சடங்கிற்கு வரவழைத்த பிள்ளைகளின் கால்களை மஞ்சள் நீரால் கழுவி, நெற்றிக்கு நீறு அணிவித்து, சந்தனப் பொட்டிட்டுக் கண்ணுக்கு அஞ்சனம் தீட்டுவர். பின்பு பிள்ளைகளை வெள்ளைச் சீலையின் மேல் இருத்துவர். பொங்கல், அம்மன் கும்பத்திற்கு நேரே படைக்கப்படும். அப்பிள்ளைகளும் ஏனையோரும் அம்மனைப் பூசிப்பர். பின்பு அப்பிள்ளைகளுக்குத் தனித்தனியே சர்க்கரைப்பொங்கல் பகிர்ந்தளிக்கப்படும். அவர்கள் 'அம்மன் உங்கள் யாவரையும் ஒரு துன்பமும் வராது காப்பாள்' என்று நல்வாக்குக்கூறிப் பொங்கலை உண்பர். அப்பிள்ளைகளை அனுப்பும்போது வீட்டுத் தலைவி அவர்களை அழைத்துச் சென்று கடவலடியில் (வேலியில் போக்கு வரத்துக்காக விடப்பட்டுள்ள இடைவெளி) நிறுத்தி 'சுகம் தந்தீர்களா சுகம் தந்தீர்களா' என்று கேட்டவண்ணம் வேப்பிலையால் மஞ்சள் நீரைப் பிள்ளைகளின்மீது தெளிப்பாள். பிள்ளைகள் 'ஆம் ஆம்' என விடை கூறிச் செல்வர். அவர்கள் சென்றபின் வேப்பிலை கடவலில் சொருகி விடப்படும். இவ்வாறு செய்வது கடவலைக்கடந்து துர்நோய்கள் வளவினுள் வராது என்ற நம்பிக்கையினாலாகும்.

அன்று மாலையில் ஆதினாவரவர், கெங்கை வைரவர் ஆகிய தெய்வங்களுக்கு ரொட்டி சுட்டு வைத்து வழிபாடு செய்வர். இது காவல் தெய்வங்களுக்காகச் செய்யப்படும் சடங்காகும்.

"அக்கரைப்பத்தில ஏலேலோ
சக்கரை அமுதாம் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

சவள் : பெ., துடுப்பு; சுக்கான் பிடிக்கும் போதும், தடுப்பு வலிக்கும்போதும் தடுப்பு வளைந்து கொடுப்பதால் (துவளுதல்=வளைதல், துவளுதல்) அது சவள் என்ற காரணப் பெயர் பெறுவதாயிற்று.

"தோணியைப்பாருடா ஏலேலோ
அடிப்பான் எண்டு ஏலேலோ
சவளைக் காட்டுறான் ஏலேலோ

—நாட்டார் பாடல்

சாயண்டா : ஏ.வி., சாய் + ஏன் + அடா = சாயேனடா—சாயண்டா.

"வலையைப் பார்த்து ஏலேலோ
மெதுவா சாயண்டா ஏலேலோ"

—நாட்டார் பாடல்

சாய்ஞ்சி இழுத்தல் : தொ. பெ., தண்டு வலிப்போர் சாய்ந்தும் சரிந்தும் இழுப்பர். இத்தொடர் இதனைக் குறிக்கிறது.

"சாய்ஞ்சி இழுக்கணும் ஏலேலோ
சரிஞ்சி இழுக்கணும் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

சாளை : பெ., கடல்மீன். ('பண்ணைச் சாளை' —முக்கூடற் பள்ளு பாடல் 50)

சீதேவி : பெ., தண்டுவலிப்போர் இறை சிந்தனை கொள்ளும் தன்மை காணப்படுகின்றது. சீதேவி, வங்காளதேவி, மலையாளதேவி, நாலூறுகாளி, மாரித்தாய், கண்மணித்தாய் (கண்ணகி) ஆகிய தெய்வங்களின் பெயர்களைத் தொழிலின் போது கூறுவர்.

"சீதேவி ரங்கந்து ஏலேலோ
ரங்கந்து பூமாலை ஏலேலோ"

—நாட்டார் பாடல்

சும் : உச்சரிப்பு ஒலி. தோணியைத் தள்ளிக் கடலில் இறக்கும் போது பரதவர் 'சும்' என்ற உச்சரிப்புடன் மந்திர உச்

சாடனம்செய்வர். அதுபோன்றே 'சும்' என்று ஒலி எழுப்பி வேகமாகத் தோணியைத் தள்ளுவர்.

**சூறை :** பெ., கடல்படுமீன்.

''சூறையோ பாறையோ ஏலேலோ
கிளவள்ளாவோ தெரியாது ஏலேலோ''

—நாட்டார் பாடல்

**சூறைக்கிளை :** பெ., சூறை மீன்கூட்டம்.

''சூரக்கிளை வளைய ஏலேலோ
சுணக்கமென்ன தண்டயலே ஏலேலோ''

—நாட்டார் பாடல்

**சோமாரக்கூட்டம் :** பெ., வெள்ளைக்காரன் கூட்டம்.

''போட்டானாம் போட்டானாம் ஏலேலோ
குண்டொண்டு போட்டானாம் ஏலேலோ
தூக்கிப்போட்டானாம் ஏலேலோ
சோமாரக் கூட்டமாம் ஏலேலோ
ஆகாயக்கப்பல் ஏலேலோ
அணிஅணியாய் வந்ததாம் ஏலேலோ''

—நாட்டார் பாடல்

**சோளகம் :** பெ., தென்மேற்குக்காற்று

**சோளநீர் :** பெ., கடலிலே தெற்கிலிருந்து வடக்கு நோக்கி ஓடும் நீரோட்டத்தைச் சோளநீர் என்பர்.

''சோள் நீராம் ஏலேலோ
சோளக வாங்கலாம் ஏலேலோ''

—நாட்டார் பாடல்

**சோளநீர் ஓட்டம் :** பெ., பார்க்க : சோளநீர்.

**சோளநீர்வாங்கல் :** பெ., சோளநீர் ஓட்டத்தின் ஈர்ப்புச்சக்தி. மேற்படி நாட்டார் பாடலைக் காண்க.

**தண்டயல் :** பெ., தோணிக்குச் சுக்கான் பிடிப்பவர். தண்டு= சவள், துடுப்பு; தண்டை எப்போதும் கையிலே வைத்திருப் பவர் ஆதலால் காரணப்பெயராயிற்று.

"சூரக்கிளை வளை ஏலேலோ
சுணக்கமென்ன தண்டயலே ஏலேலோ"

—நாட்டார் பாடல்

தண்டு இழுத்தல் : தொ.பெ., தண்டுவலித்தல்.

"ஈரவலை ஏத்தி ஏலேலோ
நால்வரும் தண்டிழுக்க ஏலேலோ

—நாட்டார் பாடல்

தண்டுக்குத்தண்டு : பெ., தண்டு வலிப்போர் கலத்தின் இருபுறமும் அமர்ந்திருந்து ஒரே சீராக வலிப்பர். போட்டியிட்டுக் கொண்டும் பரிகாசமாகப் பாடிக் கொண்டும் தண்டு வலிப்பது உண்டு. போட்டியிட்டுத் தண்டுக்குத்தண்டு தண்டு வலித்தலை இது குறிக்கிறது.

"தண்டுக்குத் தண்டு ஏலேலோ
மாறுதண்டு ஏலேலோ
அணியத்தண்டு ஏலேலோ
போட்டு வலிக்கணும் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

தண்டுக்கை : பெ., துடுப்பில் பொருத்தப்பட்டிருக்கும் தடி.

"கள்ளியின் தின்னம்பால் ஏலேலோ
ஒக்கம தண்டுக்கை ஏலேலோ"

—நாட்டார் பாடல்

தம்பலவட்டி : சிங்களச் சொல். மரக்கறிக் கூடை எனும் பொருளது.

"தாவறுமடமாம் ஏலேலோ
மடத்தம்மா ஐயா ஏலேலோ
தம்பலவட்டி ஏலேலோ
வாட்டியனக்கே ஏலேலோ"

—நாட்டார் பாடல்

தலையாரி : பெ., தலைவன்—தலையாளி; தலையதிகாரி.

"தலையாரி வாறண்டா ஏலேலோ
அடிச்சிடுப்போடுவான் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

**தலைவல :** பெ., தலை+வலை; வலையின் ஓர் உறுப்பு. வலை இழுக்கும்போது தலைவலை வந்தவுடன் மீன்கள் வலைக் குள் வருகின்றனவா எனப்பார்க்க மடியைத்தேடி மண்டாடி நீந்திப்போவார்; மடிக்கு முந்தியது தலைவலை.[16]

"கம்பானை இழுக்கணும் ஏலேலோ
அங்கால வருவது ஏலேலோ
தலவலதாண்டா ஏலேலோ
அதோ பாருடா ஏலேலோ"

—நாட்டார் பாடல்

**தாண்டமண்டலம் :** பெ.. இத்தொடர் கடலைக் குறிக்கும்.

"தாண்டமண்டலம் ஏலேலோ
தவிட்டுக்குண்டலம் ஏலேலோ
சந்திரமண்டலம் ஏலேலோ
தாக்கட்டாபுலி ஏலேலோ"

—நாட்டார் பாடல்

**தாழம்பத்தை :** பெ., கடற்கரையில் அடர்த்தியாக வளர்ந் திருக்கும் தாழம்புதர் (தாழை); இப்புதர் மறைவில் நடக் கும் பாலியல் வினைகள் பற்றிப் பரதவர் பாட்டுப்பாடி சோர்வை மறந்து கிளர்ச்சியுறுவர்.

"தாழம்பத்தைக்க ஏலேலோ
மேளம் கேட்குது ஏலேலோ"

—நாட்டார் பாடல்

**தூக்கித்தள்ளு :** ஏ. வி., பார்க்க : கிளப்பியடி.

**தெரிவு :** தொ. பெ., கடலில் வீசப்பட்ட வலையின் மிதப்புக் கட்டிய மேற்பாகத்தையும் கல் கட்டப்பட்ட கீழ்ப்பாகத்தை யும் பிரித்து எடுத்தல் 'தெரிவு எடுத்தல்' எனப்படும்.

"தெரிவை எடுத்து வாடா ஏலேலோ
ஒருவன் போடா ஏலேலோ"

—நாட்டார் பாடல்

**தேடா :** பெ., மொத்தமான கயிறு.

"முப்புரிக்கயிறும் ஏலேலோ
முப்பத்திமூணு ஏலேலோ
தேடாவளையம் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

தோணி : பெ., கடல் கலம். சரக்கு ஏற்றிச் செல்லப் பயன் படுவது.

தோணிப்பாட்டு : பெ., மரத்தைத் தோண்டிச் செய்யப்பட்ட தோணி ஓடப் பாடுவதால் இது தோணிப்பாட்டாயிற்று என்பர்.

நங்கூரம் இடல் : தொ. பெ., அளவுக்கு அதிகமாக மீன் அகப் பட்டு விட்டால் யாவருக்கும் கழிபேருவகை ஏற்படும். அதன் அறிகுறியாகத் தோணியைக் கடலில் நிறுத்தி நங்கூரம் போட்டுக் கொடி பறக்கவிடுவர். முத்துக்குளித்தல், சங்குக்குளித்தலின்போதும் சூறாவளி புயல் போன்ற சமயங்களில் கலம் நிலைகொள்ளாமல் தவிக்கும் போதும் நங்கூரம் போடுதல் உண்டு.

நங்கூரம் தூக்குதல் : தொ. பெ., நங்கூரமிட்டிருந்தமையை அகற்றித் 'தூக்குதலைக்' குறிக்கும்.

"நங்கூரத்த ஏலே தூக்கு ஏலே
கெதியா ஏலே இழுடா ஏலே
நங்கூரத்த ஏலே தூக்குடா ஏலே
கெதியா ஏலே ஏலே ஏலே"

—நாட்டார் பாடல்

நங்கூரம் போடுதல் : தொ. பெ., மேலது காண்க.

நங்கூரம் வைத்தல் : தொ. பெ., மேலது காண்க.

"நங்கூரம் போடணும் ஏலேலோ
உசக்க போகணும் ஏலேலோ
நங்கூரம் வைப்பமா ஏலேலோ
நங்கூரம் வைப்பமா ஏலேலோ"

—நாட்டார் பாடல்

நடுக்கட்டு : பெ., தோணியின் நடுப்பகுதி;

"அணியம் ஏலே நடுக்கட்டு ஏலே
ஏலே ஏலே ஓடித்தள்ளு ஏலே"

—நாட்டார் பாடல்

நாயன் : பெ., நடுக்கடலிலே செல்கின்றவர்களுக்குக் கடல் பற்றிய பயம் ஏற்படுதல் இயல்பு. ஆதலினால் ஆழிக்கடல்

பற்றிக் குறிப்பிட்டு இடையிடையே தெய்வங்களை நினைந்து கொள்ளும் வகையில் சிதேவி, நாயன், அல்லா ஓம் முதலான தெய்வங்களை வேண்டிக் கொள்வர்; நாயன் —ஒரு தெய்வம்.

''நாயனே பேயனே ஏலேலோ
பேயனே ரங்கந்து ஏலேலோ''

**நாலூறுகாளி :** பெ., பரதவர் வழிபடும் தெய்வம்.

''நாலூறு காளியாம் ஏலேலோ
அறுக்குளாமாலு ஏலேலோ!'

—(நாட்டார் பாடல்)என்பது தண்டு வலிப்போடல் பாடல்'

**நாறின்பாச :** சிங்களச்சொல். 'வலையைப் போகவிடாது இழு' என்பது இதன் பொருள்.

''நாறின்பாச ஏலே வினோதகாளி ஏலே
கம்பன்காளி ஏலே உறுக்கிப்புடிரா ஏலே''

—நாட்டார் பாடல்

**படுவான் :** பெ., மேற்குத் திசை; ஆகுபெயர்

**படுவான்பொழுது :** பெ., மாலைப் பொழுது.

**பவளம் :** பெ., கடல்படு பொருள், விலை உயர்ந்த கல், பொன் நகை செய்யப் பயன்படுவது.

''முத்தோ பவளமோ, முதல் தரத்து
ஆணி முத்தோ''

—நாட்டார் பாடல்

**பாசக்காறே :** சிங்களச்சொல். 'வலைக்காரன்' எனும் பொருள் உடையது.,

''ஏலே ஏலே ஏலைக்கிலம் ஏ லே
பாசக்காறே ஏலே பாச வினோதே ஏ லே''

—நாட்டார் பாடல்

**பாட்டுக்காரர் :** பெ., பாட்டு பாடுபவர். வலை இழுப்போர் ஏறு வெயில் தொடக்கம் உச்சி வெயில் வரையும் வெயிற் காய வேண்டியிருத்தலாலும், வலை இழுப்பதால் ஏற்படக்

கூடிய களைப்பை மறந்து உற்சாகத்துடன் வலை இழுக்க வேண்டியிருத்தலாலும் புத்துணர்ச்சி ஊட்டக்கூடிய பாலியல் உணர்ச்சிப் பாடல்களை விரும்பிப் பாடுகின்றனர். அத்தகைய பாடல்களைப் பாடக் கூடியவரைத் தமது குழுவில் விரும்பிச் சேர்த்துக் கொள்வதோடு, அவர்களைப் 'பாட்டுக்காரர்' என்றும் அழைப்பர். அவர்கள் பாடும் காம உணர்ச்சிப் பாடல்கள் உச்சி வெயிலில் உடலுருகி மெய் வருந்தி உழைக்கும் தொழிலாளிக்கு உவகை யூட்டுவதோடு மனநெகிழ்வை அளித்து அவர்களுக்கு உற்சாகத்தையும் ஊட்டப் பயன்படுகின்றன.

பாய்விரித்தல் : தொ. பெ., தோணிப் பாய்மரத்தில் கட்டப் பட்டிருக்கும் பாயை விரித்தல்.

''அச்சாணியாய் ஏல ஏலம்
காலகி நாட்டி ஏல ஏலம்
அழகான ஏல ஏலம்
பாயை விரித்து ஏல ஏலம்''

—நாட்டார் பாடல்

பாரை : பெ., கடல்படு மீன்.

''சூரையோ பாரையோ ஏலேலோ
கிளவள்ளாவோ தெரியாது ஏலேலோ''

—நாட்டார் பாடல்

பிஞ்சிடும் : வி. மு., பிய்ந்து விடும். பிய்ஞ்சி + விடும் = பிஞ்சிடும்; வலையை லாவகமாய் இழுக்காமல் உரமாய் வலிந்து இழுத் தால் பிய்ந்து போகும். இச்சொல் இதனைக் குறிக்கிறது.

''வலையைப் பார்த்து ஏலேலோ
மெதுவாய் சாயண்டா ஏலேலோ
உரமாய் இழுத்தா ஏலேலோ
வலை பிஞ்சிடும் ஏலேலோ''

—நாட்டார் பாடல்

புத்தே : சிங்களச்சொல்., 'மகனே' எனும் பொருளது.

''ஒயாங்காவே ஏலேலோ
கொந்தவேலாவே ஏலேலோ

ஒன்னராஜா ஏலேலோ
அல்லப்பாங் புத்தே ஏலேலோ''

—நாட்டார் பாடல்

பெருங்கடல் : பெ., சமுத்திரம்.

''சாதிப்பெருங்கடலில்—நீ
சங்கீன்ற வெண்முத்தோ''

—நாட்டார் பாடல்

பொழுதுகிளம்புது : வி. மு., அதிகாலையிலே தோணியைத் தள்ளிக் கொண்டுபோய், மீன்வரும் வரையும் பரதவர் காத்திருப்பர். பொழுது கிளம்பும் வரை காத்திருந்தவர்கள் பொழுது விடியுமாற்றை இங்ஙனம் சுட்டுகின்றனர்.

''பொழுது கிளம்புது ஏலேலோ
பொழுது விடியுது ஏலேலோ''

—(நாட்டார் பாடல்) என்பது தண்டு வலிப்போர் பாடல்.

மடி : பெ., வலையில் மீன் அகப்படும் இடம் மடி எனப்படும். அது பின்னப்பட்ட வலையால் மடித்துப் பொருத்தப் பட்டிருப்பதால் மடி எனக் காரணப் பெயராயிற்று. இது நூலால் ஆக்கப்பட்டுப் பறியின் அமைப்பில் அமைந்தது என்பர்—ஆய்வாளர்.[17]

மடிகரையேத்துதல் : தொ. பெ., மீன்பாடு நிறைந்த மடியைக் கரைக்குக் கொண்டு வருதல்.

''கறுப்புப் பாக்கணும் ஏலேலோ
ஓடி வளையணும் ஏலேலோ
மடிகரை ஏத்தணும் ஏலேலோ''

—நாட்டார் பாடல்

மரம் : பெ., மரத்தால் ஆகிய தோணி முதலான கலங்களைக் குறிக்கும். திருநெல்வேலி (தமிழ்நாடு) மாவட்டத்தில் இது கட்டு மரத்தைக் குறிக்கும். மட்டக்களப்பு மாவட்டத்தில் 'மரம்' என்பது தோணியையும் குறிக்கிறது. கடலில் காற்றடித்தால் தோணி அசையும். இதனை,

"காற்றடிக்க ஏலஏலம்
மரமசைய ஏலஏலம்"

—(நாட்டார் பாடல்) எனும் பாடலில் காண்க.

மரம் அசைதல் : தொ. பெ., மேலது காண்க.

மலையாள தேவி : பெ., பரதவர் வழிபடு தெய்வம்.

"வங்காளத்தேவி ஏலேலோ
மலையா ளத்தில ஏலேலோ
மலையாளதேவி ஏலேலோ"

—நாட்டார் பாடல்

மாசிக்கடலோட்டம் : பெ., பரதவர்களுக்கு மாசிமகம், மாசிக் கடலோட்டம் ஆகியன முக்கியமானவை. மாசி : மேகம், நீர், நீரோட்டம் எனும் பொருளது.

"மாசிக் கடலோட்டம், மாமாங்கத் தேரோட்டம்,
மாவிலுப்பைத் தோணி வெட்டி
மாமாங்கம் போனாராம்"

—நாட்டார் பாடல்

"சுத்தி சவுக்கு மரம்
சூழ்ந்தசொரு மாசிமூட்டம்
இருட்டடைஞ்ச மன்னனுக்கு
எந்த மலை கொந்தரப்பு"

ஈழத்துப் பாடல். இது பரதவரின் கன்னி வழிபாடு ஆகும்.[18]

மாதுளசிதுள : சிங்களச்சொல். இது 'பெரியவலை சிறியவலை' எனும் பொருள் தரும்.

"மாதுள சீதுள ஏலேலோ
மாதுள சீதேவி ஏலேலோ"

—நாட்டார் பாடல்

மாரித்தாய் : பெ., பரதவர் வழிபடும் தெய்வம்; பார்க்க: கண் மணித்தாய், சீதேவி, நாலூறுகாளி, மலையாள தேவி.

"மாரித்தாயே ஏலேலோ
கண்மணித்தாயே ஏலேலோ"

—நாட்டார் பாடல்

மாலு : சிங்களச்சொல். 'மீன்' எனும் பொருளாகும்.

"நாலூறு காளியாம் ஏலேலோ
அறுகருளாமாலு ஏலேலோ"

—நாட்டார் பாடல்

மாவிலுப்பைத் தோணி : பெ., இலுப்பை மரத்தில் செய்யப்பட்ட பெருந்தோணி. பார்க்க : மாசிக்கடலோட்டம்.

மாறுதண்டு : பெ., தோணியின் வலப்பக்கத்தே வலிக்கப்படும் துடுப்பு; பெரிய தோணியிலே தண்டயல் சுக்கான் பிடிக்க, நால்வர் துடுப்பு வலிப்பர்; மூவர் இடப்பக்கத்திலும், ஒருவர் வலப்பக்கத்திலும் துடுப்பு வலிப்பது வழக்கம், மாறுதண்டை இடக் கை வலுவின் மூலமும் வலிக்க வேண்டியிருப்பதால் இதில் பயிற்சியுடையோரே இதனை வலிப்பர்.

"தண்டுக்குத் தண்டு ஏலேலோ
மாறுதண்டு ஏலேலோ
அணியத்தண்டு ஏலேலோ
போட்டு வலிக்கணும் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

மீன் கறுப்புப் பார்த்தல் : தொ. பெ., கடலில் மீன் கூட்டம் கூட்டமாகவே வரும் (கிளை கிளையாகவே வரும்). தூரத்தே அதனைக் காணும்போது கறுப்பாகவே அது காட்சி தரும். அதனைக் கண்டதும் 'மீன் கறுப்புத் தெரிகிறது' என்று யாவரும் கூறுவர்.

"கறுப்புப் பாக்கணும் ஏலேலோ
ஓடி வளையணும் ஏலேலோ"

—நாட்டார் பாடல்

முதுகடல் : பெ., கடல்; பழமை மிகுந்த கடல் எனும் பொருளாகும்.

"முத்தான முத்தோ—நீ
முதுகடலில் ஆணிமுத்தோ"

என்பது ஒரு தாலாட்டுப் பாடலின் வரிகள்.

முத்து : பெ., கடல்படு பொருள், நவரத்தினங்களுள் ஒன்று. சிப்பிக்குள் இயற்கையாகவும் செயற்கையாகவும் உருவாவது; முத்திலேயே உயர்ந்தது ஆணிமுத்து ஆகும்.

முத்துக்குமாரி : பெ., தோணியைப் பெண்ணாகப் பாவனை செய்து இடப்பெற்ற செல்லப் பெயர்; பரதவர் தம் தோணியை 'முத்துக்குமாரி' என்றும் ராஜக்குமாரி என்றும் அழைப்பர்.

"முத்துக்குமாரி ஏலேலோ
மூலமெத்தனி ஏலேலோ
முத்துக்குமாரி டி ஏலே
ராஜக்குமாரி ஏலே"

—நாட்டார் பாடல்

முத்துமாரி : பெ., ஐயா, ஜாலம்மா, அம்மாமாரி என்பன போன்ற ஒரு பெயர்.

முந்திரிச் சாராயம் : பெ., சாராய வகையின் பெயர்; இது குடிப்பவர் உடலில் வெறி ஏற்றும் தன்மையது; கடுமையான உழைப்பாளிகளான பரதவர், தொழிலின் கடுமையை மறக்க இதனை உட்கொள்வர்.

"உடலிலே ஏலஏலம்
வெறிகொள்ளும் ஏலஏலம்
முந்திரிச் சாராயம் ஏலஏலம்
ஏலஏலம் ஏலஏலம்"

—நாட்டார் பாடல்

மூலமெத்தனி : சிங்களச்சொல். 'தொடக்கம் இதோ' எனும் பொருளாகும்.

"முத்துக்குமாரி ஏலேலோ
மூலமெத்தனி ஏலேலோ"

—நாட்டார் பாடல்

யனவாபாறே : சிங்களச்சொல், 'பாதையில் போகிறது' எனும், பொருளாகும்.

"யனவாபாறே ஏலேலோ
அப்பிட்டதேவி ஏலேலோ"

—நாட்டார் பாடல்

ராஜக்குமாரி : பெ., பார்க்க: முத்துக்குமாரி.

லங்கடிலங்காய் : சிங்களச்சொல், 'கிட்டக் கிட்ட' எனும் பொருளாகும்.

"லங்கடி லங்காய் ஏலேலோ
இண்ண முத்தே ஏலேலோ"

—நாட்டார் பாடல்

வங்காளத் தேவி : பெ., பரதவர் வழிபடு கடவுள். பார்க்க: கண்மணித்தாய், சீதேவி, நாலூறுகாளி, மலையாளதேவி, மாரித்தாய்.

"தேவி தேவண்ணா ஏலேலோ
வங்காளத் தேவி ஏலேலோ
மலையாளத்தில் ஏலேலோ
மலையாள தேவி ஏலேலோ"

—நாட்டார் பாடல்

வயிரவன் பூசை : பெ., பரதவருடன் தொடர்புடைய ஒரு பூசை.

"அண்டு ராவைக்கு ஏலேலோ
வயிரவன் பூசையாம் ஏலேலோ
தாவறு மடமாம் ஏலேலோ
மடத்தம்மா ஐயா ஏலேலோ"

—நாட்டார் பாடல்

வரட்டவரே : சிங்களச்சொல். 'வேகமாக வா' எனும் பொருளது.

"வரட்டேவரே ஏலேலோ
வரட்டேயண்ணே ஏலேலோ"

—நாட்டார் பாடல்

வரட்டேயண்ணே : சிங்களச்சொல். 'வேகமாகப் போ' எனும் பொருள்; மேலது நாட்டார் பாடலைக் காண்க.

வலம்புரிச்சங்கு : பெ., வலப்பக்கம் வாய் அமைந்த சங்கு, அபூர்வமானதாகையினால் விலை கூடுதலானது; சமயத்

துறையில் முக்கியப் பங்கு வகிப்பது; இந்துக்கள் இதனைத் தம் பூசையறையில் வைத்து வணங்குவர். இது தமிழ் நாட்டில் இராமநாதபுரம் கடற்கரைப் பகுதியில் உள்ள தேவி பட்டினம், திருப்பாலக்குடி, மோரிபனை, கரங்காடு ஆகிய ஊர்களுக்குப் பக்கத்தில் மிகுதியாகக் கிடைக்கிறது.[19]

"வாட்டி வலமாக
வலம்புரிச்சங்காக"

—நாட்டார் பாடல்

வலை அகட்டுதல் : தொ. பெ., கடலில் இறக்கப்பட்ட வலையை மீன்படுமாறு அகட்டி வைப்பர். மிதப்பு மிதக்கும் மேல்புறம், கல்கட்டப்பட்ட கீழ்ப்புறம் ஆகியன சரியான முறையில் இருக்கும்படி வலை வீசுவர். வலையைச் சரியான படி இங்ஙனம் பிரிப்பதைத் 'தெரிவு எடுத்தல்' என்பர். (காண்க—தெரிவு) வலையை அகட்டி வைக்காவிட்டால் மீன்பாடு குறைந்து விடும்.

"தோணியில் இருப்பவன் ஏலேலோ
வல்லையை அகட்ட ஏலேலோ
சொல்லுறான் தம்பி ஏலேலோ"

—நாட்டார் பாடல்

வலை இழுத்தல் : தொ. பெ., மீன்பாடு முடிந்ததும் வலை இழுத்தல்; பலர் கூடிச் செய்யும் வேலை இது; வலையைச் சிக்கலில்லாமல் 'வாங்குவதற்கு' மிகுந்த அனுபவமும் தொழில் தேர்ச்சியும் வேண்டும்.

"நீங்கல்லாம் போனா ஏலேலோ
இஞ்ச ஆருடா ஏலேலோ
வலையிழுப்பது ஏலேலோ"

—நாட்டார் பாடல்

வலை இழுப்புப் பாடல் : பெ., மீன் பிடிப்போர் வலை இழுக்கும்போது பாடும் பாடல்கள் 'வலை இழுப்புப் பாடல்கள்' என வழங்கப்படுகின்றன. அப்பாடல்கள் பொதுவாக மீன் பிடித்தொழில் பற்றிக் குறிப்பிடுவனவாகவும் காமச்சுவை செறிந்தனவாகவும், அதே வேளையில் அவர்களது வாழ்க்கைக் கஷ்டங்களைச் சித்திரிப்பனவாகவும் காணப்படுகின்றன.

**வலைக்கால் :** பெ., கடலில் வீசிய கரைவலையினை இழுக்கும் போது ஒவ்வொரு பக்கத்து வலையையும் வலைக்கால் என்பர்.

> "டேய் அங்க பாருடா ஏலேலோ
> வலைக்காலில ஏலேலோ
> ஒரு கடி கடிச்ச மாதிரி கிடக்கு ஏலேலோ
> சூரையோ பாறையோ ஏலேலோ"
>
> —நாட்டார் பாடல்

> "மீன் இலைச்சி ஏலேலோ
> வலைக்காலுக்கு ஏலேலோ
> வருகுது மக்காள் ஏலேலோ
> நாம இழுக்காட்டி ஏலேலோ
> புறப்பட்டுப் போயிரும் ஏலேலோ"
>
> —நாட்டார் பாடல்

**வலை சுத்துதல் :** தொ. பெ., தொழில் முடிந்தவுடன் மீண்டும் வீசி இளக்குவதற்கு லகுவாக இருக்கும்படிச் சிக்கல் இல்லாமல் சுற்றுதல்.

> "வலைசுத்த ஏலேலோ
> ஆக்கள் இல்லாத நேரம் ஏலேலோ"
>
> —நாட்டார் பாடல்

**வலை பிஞ்சிடும் :** வி.மு., பார்க்க—பிஞ்சிடும்.

**வளையணும் :** வி.மு., வளைய வேண்டும்; மீன் கறுப்புப பார்த்து வலைவீசி வளைத்தல்.

> "கறுப்புப் பார்க்கணும் ஏலேலோ
> ஓடி வளையணும் ஏலேலோ"
>
> —நாட்டார் பாடல்

**வாடை நீர் :** பெ., வடக்கிலிருந்து தெற்கு நோக்கி ஓடும் கடல் நீரோட்டத்தை வாடை நீர் என்பர்.

> "வாடை நீராம் ஏலேலோ
> வாடை வாங்கலாம் ஏலேலோ
> சோளநீராம் ஏலேலோ
> சோளக வாங்கலாம் ஏலேலோ"
>
> —நாட்டார் பாடல்

**வாடைநீர்வாங்கல் :** பெ., வாடைநீர் ஓடும்போது ஏற்படும் ஈர்ப்புச் சக்தி; மேலது பாடல் காண்க.

**வாடை வாங்கல் :** பெ., இதுவும் அது.

**வாட்டியனக்கே :** சிங்களச் சொல். 'தொங்கல் அதோ' எனும் பொருளது.

> ''தம்பலவட்டி ஏலேலோ
> வாட்டியனக்கே ஏலேலோ''

—நாட்டார் பாடல்

**வாழைமீன் :** பெ., மீன்வகை.

> ''வாழைப்பச்சடி ஏலேலோ
> வாழைமீன் கிச்சடி ஏலேலோ
> வறுத்துக்கொட்டடி ஏலேலோ
> கோஷாலந்தே ஏலேலோ''

—நாட்டார் பாடல்

**வினோதா :** சிங்களச்சொல்; காளிக்குரிய அடைமொழி. 'பாச வினோத' என்பது திரிபடைந்த சிங்களச் சொல்லாகும்.

**வெண்முத்து :** பெ., வெள்ளை நிறமான முத்து.

> ''சாதிப் பெருங்கடலில் நீ
> சங்கீன்ற வெண்முத்தோ''

என்பன தாலாட்டுப்பாடலின் அடிகள்.

**வைப்பமா :** வினா; வைப்போமா?

> ''நங்கூரம் வைப்பமா ஏலேலோ
> நங்கூரம் வைப்பமா ஏலேலோ''

—நாட்டார் பாடல்

**ஜாலம்மா ஜாலி :** சிங்களச் சொற்றொடர்; இசைத்தொடர். இது ஐயாவா மொழிச்சொல் எனக் கூறப்படுகிறது.

> ''ஜாலம்மா ஜாலி ஏலேலோ
> ஜாலோ ஜாலி ஏலேலோ
> ஜாலியம்புறு ஏலேலோ
> ஓவேலா வலி ஏலேலோ''

—நாட்டார் பாடல்

ஜாலி ஜாலங் : மேலது காண்க. இதுவுமது.

ஜாலோ ஜாலி : மேலது காண்க. இதுவுமது.

## 4

இச்சிறு அகராதியால் உண்டாகும் பயன் ஈண்டு மனங்கொளத் தக்கது. ஏற்கனவே இக்கட்டுரையாளர் தமிழ்நாட்டில் உள்ள இராமநாதபுரம் மாவட்டம், திருநெல்வேலி மாவட்டம் எனும் இருமாவட்டங்களில் வசிக்கலாகும் கடற்கரைப் பரதவர் தொழிற்கலைச் சொற்களைத் திரட்டித் தந்துள்ளார். அவ்வாறே ஈழநாட்டின் வடபகுதியான யாழ்ப்பாணம் மாவட்டப் பரதவர் தொழிற்கலைச் சொற்களை இது போன்ற சிற்றகராதி வடிவில் ஆக்கம் செய்திருக்கிறார். இவ்வாறே உருவான மட்டக்களப்பு மாவட்டப் பரதவர் கலைச்சொல் அகராதியையும் இவற்றுடன் இணைப்பதால் மூன்று உடனடிப் பயன்கள் கிட்டுகின்றன. (1) பல்வேறு வகைகளில் தொடர்புடைய இராமநாதபுரம், திருநெல்வேலி, மட்டக்களப்பு, யாழ்ப்பாணம் மாவட்டங்களில் வாழ்ந்து வரும் பரதவர்களின் தொழிற்கலைச் சொற்களுக்கு ஓர் அகராதி முதன்முதலாக உருவாகிறது; (2) இதன்மூலமாக, இந் நான்கு மாவட்டப் பரதவர்களின் தொழில் நம்பிக்கை, வாழ்வியல் முறை இன்னோரன்னவற்றில் காணக்கிடக்கும் ஒற்றுமை, வேற்றுமைகள் புலப்பட்டு ஒப்பாய்வு செய்ய வழி பிறக்கிறது; ஆய்வு அறிஞர்கள் ஆய்வினை முன்னெடுத்துச் செல்லப் புதுத்தடம் அமைகிறது; (3) மீனவர் பேசுங்கிளை மொழியில் சொல்லியல் ஆய்வு (Lexical study) நடத்த வழியுண்டாகிறது. சொல்லியல் ஆய்வு நடத்துவதன் பயனாக, அப்பழங்குடி மக்களின் நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள், சடங்குகள், மரபுகள், தொழில் நுணுக்கங்கள் போன்ற கூறுகளை ஆராய்ந்து வெளிக்கொண்டு வருவதும் அப்பண்பாட்டுக் கூறுகளோடு தொடர்புடைய மொழியியற் கூறுகளையும் சொற்றொகுதியையும் ஆராய்வதும் இயலும். பண்பாட்டு மானுடவியலார்க்கும் (Cultural Anthropologists) மானுடவியல் மொழியியலார்க்கும் (Anthropological Linguists) ஆய்வுக்குரிய புதுத்தடம் கிடைக்கும்.[20]

இக்கருத்துக்கோவை மட்டக்களப்பு மாவட்டம், அம் மாவட்டப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள் ஆகியவற்றை அறிமுகப் படுத்தி அறியச் செய்கிறதேயன்றி, அத்துணைத் தகவல்களையும் தந்து ஆழ்ந்தகன்ற ஆய்வினைச் செய்யவில்லை. இம்மாவட்டப் பரதவர் தொழிற்கலைச் சொற்களைத் திரட்டி ஆய்தலைத் தம் ஆய்வு நோக்காகக் கொள்ளும்—ஓர் ஆய்வாளர் தம் களப்பணி மூலமாகவே, மேற்சொன்ன ஆழ்ந்தகன்ற ஆய்வினைச் செய்தல் கூடும். இங்குச் செய்யப்பட்டது ஓர் அறிமுகப்படுத்தல்; அவ்வளவே; இவை மேலும் நுணுகி ஆய்தற்குரியன.

## குறிப்புகள்

1. பாலசுந்தரம், கலாநிதி இளையதம்பி, ஈழத்து நாட்டார் பாடல்கள், தமிழ்ப் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு, நவம்பர் 1979, ப. 28
2. மேற்படி, ப. 30
3. (அ) மேற்படி, வானமாமலை முன்னுரை, ப. 111
   (ஆ) பாலசுந்தரம், "பண்டைக் குரவைக்கூத்தும் மட்டக் களப்புக் குலவை போடுதலும்", உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டில் வாசிக்கப்பட்ட கட்டுரை, 1974.
   (இ) இலங்கை வாழ் மக்களில் ஒரு பகுதியினர் தமிழ் நாட்டி லிருந்தும், கேரளாவிலிருந்தும் சென்று குடியேறியவர்கள். ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் இலட்சக்கணக்கான ஒப்பந்தக் கூலிகள் இந்தியாவிலிருந்து இலங்கைக்கு அனுப் பப்பட்டனர். —ஆ. சிவசுப்பிரமணியன், அடிமை முறையும் தமிழகமும், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, முதற் பதிப்பு, ஜூன் 1984, ப. 28, ப. 43.
4. Padmanathan, S., "Feudal Polity in Medieval Ceylon: An examination of the Chieftaincies of the Vanni, "The Journal of Historical and Social Studies, 1972, Vol. II No. 2, pp 119-130.
5. பாலசுந்தரம், கலாநிதி இளையதம்பி, மு. நூ., ப. 37
6. மேற்படி, ப. 42

7. மேற்படி, ப. 44

8. மேற்படி, பக். 38-39

9. முருகானந்தம், சண்முக., யாழ்ப்பாணக் கரையோரப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள்—ஓர் அறிமுகம் தமிழ்க் கலை, தஞ்சாவூர், டிசம்பர் 1983, ப. 88

10. முருகானந்தம், சண்முக., அம்பா, செம்மலர், மதுரை ஏப்பரல் 1984. (மறுபிரசுரம். ஆய்வுக்கோவை, இ. ப.த. ம, 16வது கருத்தரங்கு, அண்ணாமலைப் பல்கலைக் கழகம். மே, 1984.)

11. முருகானந்தம், சண்முக., இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டக் கடற்கரைப் பரதவர் தொழிற்கலைச் சொற் கள், (பிரசுரிக்கப்படாத) குறுங்காலத் துணை ஆய்வேடு, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1983, ப. 4

12. புஷ்பராஜன், மு., அம்பா, அலை வெளியீடு, யாழ்ப்பாணம், 1976, ப. 16

13. முருகானந்தம், சண்முக., யாழ்ப்பாணக் கரையோரப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள்—ஓர் அறிமுகம், ப. 91

14. மேற்படி, பக். 91—93

15. முருகானந்தம், சண்முக., கடல் துறைச் சொற்கள் இடம் பெறும் பழமொழிகளும், அச்சொல்லாட்சிகள் வாயிலாக அறியவரும் செய்திகளும், 1984.

16. முருகானந்தம், சண்முக., யாழ்ப்பாணக் கரையோரப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள், ப. 95.

17. மேற்படி, ப. 100

18. குணசேகரன், மு., தூத்துக்குடிப் பரதவர் சமூகப் பழக்க வழக்கங்கள், (பிரசுரிக்கப்படாத) எம்பில்பட்ட ஆய்வேடு, மதுரைப் பல்கலைக் கழகம், 1981, பக். 195—198.

19. முருகானந்தம், சண்முக., இராமநாதபுரம் திருநெல்வேலி மாவட்டக் கடற்கரைப் பரதவர் தொழிற்கலைச் சொற் கள், ப. 162.

20. முருகானந்தம், சண்முக., யாழ்ப்பாணக் கரையோரப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள்—ஓர் அறிமுகம், ப. 87.

## மேற்கோள் நூல்கள் :

i ஆய்வேடு

1. இராமநாதபுரம் திருநெல்வேலி மாவட்டக் கடற்கரைப் பரதவர் தொழிற் கலைச் சொற்கள் (1988)
2. தூத்துக்குடிப் பரதவர் சமூகப் பழக்கவழக்கங்கள் (1981)

ii கட்டுரை

1. அம்பா (ஏப்ரல் 1984, மே 1984)
2. கடல்துறைச்சொற்கள் இடம்பெறும் பழமொழிகளும் அச்சொற்கள் வாயிலாக அறியவரும் செய்திகளும் (1984)
3. பண்டைக் குரவைக்கூத்தும் மட்டக்களப்புக் குலவை போடுதலும் (1974)
4. யாழ்ப்பாணக் கரையோரப் பரதவர் தொழிற்கலைச் சொற்கள்—ஓர் அறிமுகம் (டிச. 83)
5. Feudal Polity in Medieval Ceylon : An examination of the Chieftaincies of the Vanni (1972).

iii நூல்

1. அடிமைமுறையும் தமிழகமும் (1984)
2. அம்பா (1976)
3. ஈழத்து நாட்டார் பாடல்கள் (1979)

# 5

# தூத்துக்குடி கிருத்துவப் பரதவர் வழக்குச் சொற்கள்

தூத்துக்குடி கடற்கரைச் சாலையில் புனித பனிமயமாதா ஆலயத்திற்குப் பின்புறம் உள்ள கத்தோலிக்கக் கிருத்துவப் பரதவர்க் குடியிருப்புப் பகுதியில் சேகரிக்கப்பட்ட வழக்குச் சொற்கள் இங்கே அகர வரிசையில் தரப்பட்டுள்ளன. இச்சொற்களில் மிகுதியும் சமயத்துறை, மருத்துவத்துறை சொற்களே இடம் பெற்றுள்ளன. ஓரோபார், கச்சம், களம், சம்மாட்டி, செக்கல், சோளக்கொண்டல், மடி, மன்றாடியார், ரோந்தை, லங்கர் ஆகிய தொழில் துறைச் சொற்களும் அச்சாத்தி, அப்பிகிட்டான்-கெபி முதலிய பொதுச் சொற்களும் நீங்கலாக மற்றவை பெரும்பாலும் மகளிர் பயன்படுத்தும் வழக்குச் சொற்களாகும். ஆய்வாளரின் மாணாக்கி த. ஜேம்ஸ் மரிய ஆரோக்கியம் இவ்வாய்வாளரின் வழிகாட்டுதலின் கீழ்க் களப்பணி செய்து 'தூத்துக்குடிப் பரதவகுலக் கிருத்துவ மக்களின் குழந்தைப் பிறப்பும் இறை நம்பிக்கையும்' எனும் தலைப்பில் ஓர் ஆராய்ச்சிக் கட்டுரை எழுதினார். இக்கட்டுரைக்காகத் திரட்டப்பட்ட தகவல்களில் இடம்பெற்ற வழக்குச் சொற்கள் இவ்வகராதியில் பயன்கொள்ளப்பட்டன. இவை சமயம், மருத்துவம் எனும் துறையிற் பாற்பட்டன. இவ்வாய்வாளரின் வேண்டுகோளுக்கிணங்கி செல்வி விர்கோ கொறையரா தம் வீட்டில் புழங்கும் உறவுச் சொற்கள், தட்டுமுட்டுச்சாமான்களின் பெயர்கள், உணவுப் பொருள்களின் பெயர்கள், உடை பற்றிய பெயர்கள் ஆகியனவற்றைச் சேகரித்துத் தந்தார். மகப்பேறு, மகவு வளர்ப்பு, இவை தொடர்பான சமயச் சடங்குகள் பற்றிய சொற்களும் வீட்டில் புழங்கும் சொற்களும் சேர்ந்தமையால் இப்பட்டியலுள் பெரும்பகுதி மகளிர் வழக்கிலுள்ள சொற்களாக

அமைந்தன. இவ்விருவர் சேகரிப்புகளுடன் ஆய்வாளர் தாமே நேரில் சேகரித்த சொற்களையும் சேர்த்து இவ்வகர வரிசை உருவாக்கப்பட்டது. இனி அகராதியைக் காண்போம்.

**அங்காயம் :** பிள்ளையைப் பெற்றெடுத்த தாய்க்கு மூன்றாம் முழுக்கின்போது மருந்து கொடுப்பர். இம்மருந்துக்கு 'அங்காயம்' என்பது பெயர். இதனைப் 'பிள்ளை மருந்து' என்றும் 'காயங்கருப்பட்டி' என்றும் வழங்குவர். நாட்டு மருந்துப் பொருள்கள் பல சேர்த்துப் பொடியாக்கி அதில் வெள்ளைப்பூண்டு, நல்லெண்ணெய் ஆகியன வற்றைச் சேர்த்துக் களிபோல் கிண்டிக் கொடுப்பர். இதுவே அங்காயம் ஆகும். (ஜே. ம. ஆ.)

**அசனம் :** நேர்த்திக்கடன் அல்லது நேர்ச்சைக் கடன். இறைவன் அல்லது இறைவி அல்லது புனிதர்க்குச் செய்யும் வேண்டுதல் (ச. மு.)

**அச்சாத்தி :** அசதி. இதனை 'அச்சலாத்தி' என்றும் வழங்குவர் (ச. மு.)

**அச்சார்/அச்சாறா :** ஊறுகாய் (வி. கொ.)

**அணையாவிளக்கு :** கோயிலில் அல்லது வீட்டில் இறை சுரூபத்தின்முன் எப்போதும் இடைவிடாது எரியும் விளக்கு (ஜே. ம. ஆ.)

**அத்தாச்சி :** அத்தையின் மகள் (ச. மு.)

**அந்தோணியார் பட்டம் :** கர்ப்பமுற்றிருக்கும் பெண்கள் இக்காலத்தில் மஞ்சள் காமாலை, டைபாய்டு ஆகிய நோய்களால் தாக்கப்பட்டால், எவ்வித ஆபத்தும் உண்டாகாமல் குழந்தை பிறந்தால் பிறக்கும் குழந்தைக்குப் புளியம்பட்டி அந்தோணியார் கோயிலில் 'அந்தோணியார் பட்டம்' வைத்து மொட்டையடிப்பதாக வேண்டுதல் செய்வர். காதுகளுக்கு மேலாக வட்டவடிவில் ஒரு சென்டி மீட்டர் அகலத்திற்கு ஒரு கருப்புக் கயிற்றைக் கட்டி விட்டாற் போல மயிரை மழித்துவிடுவர். இதற்கு அந்தோணியார் பட்டம் என்பது பெயர் (ஜே. ம. ஆ.).

**அப்பா அம்மை :** அப்பாவுக்கு அம்மா (ச.மு.)

**அப்பிக்கிட்டான் :** பிடுங்கிக் கொண்டான் அல்லது பாய்ந்து பறித்துக்கொண்டான் (ச. மு.)

**அம்மம் :** அம்மை நோய் (ஜே. ம. ஆ.)

**அயனம் :** அசனம் என்பதை அயனம் என்றும் வழங்குவர். பார்க்க : அசனம். (ச. மு.)

**அரசோந்தை :** மணப்பெண்ணின் தங்கைக்குப் பட்டுத்துணியில் பாதியளவு கொடுத்தல் (ச. மு.)

**ஆணம் :** மீன்குழம்பு. இது பொதுவாகக் குழம்பையும் குறிக்கும். (வி. கொ.)

**ஆத்தா அம்மை :** அம்மாவுக்கு அம்மா (ச. மு.)

**ஆமும் :** ஆமாம். (ச. மு.)

**ஆமைக்காரன் :** பட்டப்பெயர்களில் ஒன்று (ச. மு.)

**இரண்டாம் முழுக்கு :** குழந்தையைப் பெற்றெடுத்த தாய்க்கு ஒன்பதாம்நாள் தலைக்குத் தண்ணீர் ஊற்றுவர். தலைக்கு ஊற்றும் வெந்நீரில் பூவரசம்பட்டை, வேப்பம்பட்டை ஆகியனவற்றில் ஏதேனும் ஒன்றைப் போட்டுக் காய்ச்சுவர். இப்பட்டைகள் மருத்துவக் குணம் உடையன. பூவரசம் பட்டைச்சாறு உடல்வலியைப் போக்கி தசைகளை இறுகச் செய்யும். வேப்பம் பட்டைச் சாறு உடலில் உள்ள நோய்க் கிருமிகளை அழித்து சுத்தப்படுத்தும். ஆகவே மேற்படி பட்டைகளில் ஏதேனும் ஒன்றை வெந்நீரில் போட்டுக் காய்ச்சித் தலைக்கு ஊற்றுவர். குழந்தை பெற்ற தாய்க்கு ஐந்தாம் நாள் அல்லது ஏழாம் நாள் வெந்நீர்க் குளியல் உண்டு. அன்று உடம்புக்கு மட்டுமே குளியல் உண்டு. தலைக்கு ஊற்றிக் குளிக்கக் கூடாது. இதை முதல் குளியல் எனலாம். ஒன்பதாம் நாள் தலைக்கு நீர் விட்டு நீராடுவதை இதனால் இரண்டாம் முழுக்கு என்கின்றனர். இம்முழுக்கின்போதுதான் 'ஓமக்களி' எனும் மருந்து தாய்க்குக் கொடுக்கப்படும் (ஜே. ம. ஆ.).

**இல்லி :** ஓட்டை; இல்லிக்குடம்: ஓட்டை உடைய குடம். (பார்க்க: நன்னூல், மாணாக்கர்களில் கடைத்தரத்தார்க்கு உவமைகள்) (ச. மு.)

ஊறத்தண்ணி : சோறுவடி நீர், அரிசி கழுவிய நீர் ஆகியன (ச.மு.)

என்னப்பு : விளிச்சொல். ஆண், பெண் இருபாலர்க்கும் பயன்படுத்தும் சொல் (ச.மு.)

ஏக்கி : விளிச்சொல். பெண்களை மட்டும் விளிக்கப் பயன் படுத்தும் சொல் (ச.மு.)

ஓரோபார் : தண்ணீருக்கு அடியில் உள்ள பாறை. கடலில் பரதவர் இளக்கும் வலைகள் சில நேரங்களில் இப்பாறை களில் சிக்கிக் கிழிவது உண்டு. (ச.மு.)

ஓதி எடுத்தல் : குழந்தை பிறந்தபின், ஆண் குழந்தையாக இருந்தால் நாற்பதாவது நாள், பெண் குழந்தையாக இருந் தால் இருபத்தொன்று, இருபத்து மூன்று, இருபத்தைந்தாம் நாள்களில் ஏதேனும் ஒருநாள் தாயும் குழந்தையும் வெண்ணிற ஆடை அணிந்து கோயிலுக்குச் செல்வர். அன்று தாயைச் சுத்திகரிக்கும் சடங்கும் குழந்தையைக் காணிக்கையாக்கும் சடங்கும் ஒன்றாக நிறைவேற்றப் படும். இச்சடங்குக்கு 'ஓதி எடுத்தல்' என்று பெயர். குரு திருவுடை அணிந்து மந்திரங்கள் கூறிப் புனித நீர் தெளிப் பார். (ஜே.ம.ஆ.)

ஓமக்களி : குழந்தை பிறந்த பின்னர் ஒன்பதாம் நாள் தலைக் குத் தண்ணீர் ஊற்றுவர். இது இரண்டாம் முழுக்கு ஆகும். இந்தத் தினத்தில் தாய்க்கு 'ஓமக்களி' எனும் மருந்தைக் கொடுப்பர். ஓமம் அரைத்து அதில் கருப்பட்டித்தூள் கலந்து நல்லெண்ணெய், நீர் சேர்த்து அடுப்பில் காய்ச்சிக் களி போல் ஆக்கிக் கொடுக்கும் இம்மருந்தை 'ஓமக் களி' என்பர். (ஜே.ம.ஆ.)

ஓராட்டுதல் : அம்மை நோய் உற்ற குழந்தைக்கு ஓராட்டுச் செய்வர். (ஜே.ம.ஆ.)

கக்கட்டி : கண்ணில் தோன்றும் (இமைகளில் தோன்றும்) கட்டி.

கச்சம் : தென் திசையிலிருந்து வீசும் காற்று. இதனைக் 'கச்சான்' 'கச்சாங்காற்று' என்றும் கூறுவர் (ச.மு.)

**கச்சை போடறது :** கைம்பெண்ணுக்கு (விதவைக்கு) அளிக்கும் புதுத்துணி. இக்கோடித் துணியை அவள்மேல் போடுவர். (ச.மு.)

**கத்திக்காரன் :** பட்டப்பெயர்களுள் ஒன்று. (ச.மு.)

**கப்பக்கார் :** கப்பலில் வேலை செய்பவர்.

**கம்மோடு :** வட்டவடிவில் சாய்மணை வசதியின்றி அமர்வதற்குப் பயனாகும் ஓர் ஆசனம் (வி.கொ.)

**கமுசு :** மேல்சட்டை (வி.கொ.)

**கருங்கிரந்தி :** குழந்தைக்கு உண்டாகும் ஒரு நோய். கழுதைப் பால் ஒரு சங்கு புகட்ட, இந்நோய் நீங்கும் என்பர் (ஜே.ம.ஆ.)

**கல்சம் :** கால் சட்டை (வி.கொ.)

**களம் :** தண்ணீருக்கடியில் இருக்கும் மணல் திட்டு. (ச.மு.)

**காட்டுமாடன் :** பட்டப்பெயர்களுள் ஒன்று (ச.மு.)

**காணிக்கை :** பரதவ மக்கள் கோயிலுக்குக் கொடுக்கும் அரிசி, கோழி, பழம் ஆகியனவும் ரூபாய் நாணயமும் காணிக்கை எனப்படும். பிள்ளைப் பேற்றை யொட்டி நடத்தும் சுத்திகரச் சடங்கின்பின் குழந்தையைக் கடவுளிடம் காணிக்கையாக்கி அதன் பிறகு எட்டணாவிற்கு மேல் காணிக்கை கொடுத்து குழந்தையை எடுத்துக்கொண்டு வீடு திரும்புவர். (ஜே.ம.ஆ.)

**காயங்கருப்பட்டி :** மூன்றாம் முழுக்கன்று குழந்தை பெற்ற தாய்க்குக் கொடுக்கப்படும் மருந்து; இதற்கு 'அங்காயம்', 'பிள்ளை மருந்து' எனும் பிற பெயர்களும் உண்டு. பார்க்க : அங்காயம் (ஜே.ம.ஆ.)

**காரப்பொடி சூப்பு :** பிள்ளை பெற்ற தாய்க்குப் பால் வளம் பெருக காரல் மீன் பொடியைச் சூப்பு போட்டுக் கொடுப்பர். இம்மீனை மஞ்சள், மிளகு, சீரகம், வெங்காயம் ஆகியவற்றோடு சேர்த்துத் தண்ணீரில் அவித்து இறுத்து எடுக்கப்பட்ட சத்துமிகுந்தநீர் காரப்பொடி சூப்பு என வழங்கப் படுகிறது. (ஜே. ம. ஆ.)

கால்மேஸ் : காலுறை; 'சாக்ஸ்' என ஆங்கிலத்தில் வழங்கப்படும் இக்காலுறைக்குக் கால்மேஸ் என்றும் ஒரு பெயர் உண்டு (வி.கொ.)

கித்தேரியம்மாள் பூ : சுகப் பிரசவத்திற்காகக் கித்தேரியம்மாள் பூவைப் பயன்படுத்துகின்றனர். இன்று புனித தஸ்நேவிஸ் மாதா மேல்நிலைப்பள்ளி இருக்கும் இடத்தில் புனித கித்தேரியம்மாள் கோயில் இருந்திருக்கிறது. இக்கோயில் கணக்கப்பிள்ளை இந்தப்பூவை வைத்திருக்கிறார். இந்தப் பூ சாதாரணமாக நாம் பார்க்கும் எவ்வகைப் பூவையும் போல் இல்லை. காய்ந்த முல்லைக் கொடியின் ஒரு சிறிய சுருள் போல் சுருட்டி வைக்கப்பட்டுள்ளது. பிரசவ வேதனைப்படுபவர்களுக்கும் குழந்தை பிறக்கக் காலதாமதம் ஏற்பட்டவர்களுக்கும் நல்ல முறையில் ஆபத்து இல்லாமல் குழந்தை பிறக்க வேண்டும் என்று வீட்டில் உள்ளவர்கள் கணக்கப் பிள்ளையிடம் கேட்டு இந்தப் பூவை வாங்கி வந்து புதிதாக உள்ள மண்சட்டியில் போட்டு நன்றாகத் துலக்கப்பட்ட குடத்தில் அப்போதுதான் கொண்டு வந்த நீரை ஊற்றி அந்தச் சட்டியை ஒரு நாற்காலியின்மேல் வைத்து சாம்பிராணிப் புகையிட்டவண்ணம் வீட்டில் உள்ளவர்கள் சுற்றிலும் மண்டியிட்டு பூவிரிய வேண்டும் என்று மன்றாடி மந்திரங்களைப் படிப்பர். முல்லை மலர்கள் போன்று பல பூக்கள் விரிந்து சட்டி முழுவதும் பரவும் நேரத்தில் குழந்தை சிரமம் தராமல் எளிதில் பிறந்துவிடும். பின்னர் நீரில் இருக்கும் பூவை எடுத்து நீர் போக நன்றாக வெயிலில் உலர்த்தியபின் மீண்டும் சாம்பிராணிப் புகைபோட்டு அந்தப்பூவைக் கித்தேரியம்மாள் கோயிலுக்குக்கொண்டு செல்வர். அங்குக் கித்தேரியம்மாள் திருவுருவச் சிலைக்கு மாலையிட்டு, காணிக்கை செலுத்தி கணக்கப்பிள்ளையிடம் பூவை ஒப்படைத்து விடுவர். இன்றும் இப்பூ இருக்கிறதெனினும் யாரும் பயன்படுத்துவதில்லை என்றும் முன்னர் பயன்படுத்தி வந்தனர் என்றும் அறிய முடிகிறது. பூ விரிவது போல கருப்பையின் வாய் விரிந்து, பிறப்புறுப்பின் வாய் விரிந்து குழந்தை எளிதில் பிறக்கும் எனும் நம்பிக்கை இச்செயலைச் செய்யத் தூண்டுகிறது. (ஜே.ம.ஆ.)

குசினி : சமையல் அறை, அடுப்பங்கரை (வி. கொ.)

குடை சுருட்டிக்கல்யாணம் : உயர்ந்த அந்தஸ்து உடையோர் இல்லத்திருமணம். 'குடை' என்பது அவர்தம் சமுதாய மேம்பாட்டு நிலையைக் காட்டும் (ச. மு.)

கெபி : சிறிய அளவிலான செயற்கைக் கல் குன்றில் குடைவான பகுதியில் லூர்து மாதா திருவுருவச் சிலையை அமைத்து வழிபடுவர். இது கெபி எனப்படும் (ஜே.ம.ஆ.).

கைக்கரண்டி : சோற்றை எடுக்கப் பயன்படுத்தும் கரண்டி. 'அன்னக் கரண்டி' என்றும் கூறுவர். தமிழ்நாட்டு வட மாவட்டங்களில் இதனை 'அன்னக்குத்தி' என்பர். (ச.மு.)

கைம்பெண்சாதி : தாலியிழந்தவள்; விதவை (ச.மு.)

கொடிமெழுகுதிரி : நீண்ட மெல்லிய மெழுகுவர்த்தி (ஜே.ம.ஆ.)

கொமடு : கன்னம் (ச. மு.)

கொலகறி : கூட்டு; காய்கறிப் பதார்த்தம். (வி. கோ.)

கொல்லம் : அழகாக இருத்தல் (ஜே. ம. ஆ.)

கொளுவு : மாட்டுதல்; சுவரில் உள்ள ஆணியில் தெய்வப் படத்தைக் கொளுவுதல்-உதாரணம். (ச.மு.)

கோப்பை : கிண்ணம் (வி.கொ.)

சப்பணியம் : இனிப்புச் சுவையுடைய துக்கடா (ச.மு.)

சப்பாத்து : செருப்பு (ச.மு.)

சம்மண்ணா : திருமணச் சடங்கில் எடுத்துச் செல்லப்படும் மாங்காய் வடிவுடைய ஒரு குடை. (ச.மு.)

சம்மாட்டி : மீன் கூற்றை ஏலம் விடுபவர்; பொருளாதாரத்தில் மீன்பிடி பரதவரைக் காட்டிலும் வசதி கூடியவர். (ச.மு.)

சரப்புளி/சரப்பளி : இரட்டை வடப் பொற்சங்கிலி; பெண்கள் அணியும் கழுத்து அணிகலன். (ச.மு.)

சாய்ப்பாங்கரை : அடுப்பங்கரை; குசினி (வி.கொ)

சிலுவை வரைதல் : ஆசிர்வாதம் செய்தல் (ச.மு.)

**சிறுவக் கூடு :** 'சுரூபக் கூடு' என்பதன் திரிபு. சிறு அளவிலான தெய்வச்சிலையைப் பாதுகாப்பாக வைக்க உதவும் மரப் பெட்டி (ச.மு.)

**சீபணியம் :** பச்சரிசி மாவு, கோதுமை மாவு ஆகியவற்றை நீர் விட்டுப் பிசைந்து கொதிக்கும் எண்ணெயில் போட்டு எடுக்கப்படும் ஒரு பலகாரம்.

**சீரடித்தல் :** குழந்தை நோய்களில் ஒரு வகை. இதனைச் 'செடி பிடித்தல்' என்றும் கூறுவர். பிறந்த சில நாள்களிலேயே குழந்தையை இறக்கக் கொடுத்த தாயோ, குறை பிரசவமான பெண்ணோ ஒரு சிறு குழந்தையைப் பார்த்தால் இந் நோய் வரும் என்பர். தீட்டு உள்ளவர்கள் ஒரு குழந்தையைத் தொட்டாலும் இந்நோய் வரும் எனும் நம்பிக்கையும் உள்ளது. இந்நோயால் பாதிக்கப்பட்ட குழந்தைக்கு வயிற்றுப் போக்கும் வாந்தியும் உண்டாகும். கழுதையின் மூச்சுக்காற்று இங்ஙனம் பாதிக்கப்பட்ட குழந்தையின் மேல் படச் செய்தால் நோய் நீங்கும் என்பர். (ஜே. ம. ஆ.)

**சீராப்பிலை :** ஒரு வகை மருந்து. 'சீரடித்தல்' அல்லது 'செடி பிடித்தல்' எனும் நோயால் பாதிக்கப்பட்ட குழந்தையின் கையில், மணிக்கட்டுப் பகுதியில் இம்மருந்தை ஒரு துணியில் முடிந்து கட்டுவர். இதனை நுகரும் குழந்தையை விட்டு நோய் நீங்கும் என்பர் (ஜே.ம.ஆ.)

**சுக்குக்களி :** குழந்தை பெற்ற தாய்க்கு ஏழாம்நாள் கொடுக்கும் மருந்து. இந்நாளில் 'முதல் முழுக்கு' எனப்படும் 'தோளுக்கு ஊற்றிய' பின் இதனைத் தருவர். சுக்கை அரைத்து கருப்பட்டியுடன் கலந்து அதில் நல்லெண்ணெய், நீர் விட்டு அடுப்பில் நன்றாக வேக வைத்து களிபோல் ஆக்கித் தயாரிக்கும் மருந்து இது. (ஜே. ம. ஆ.)

**சுங்கான் :** சீனக்களிமண்ணால் செய்யப்பட்ட பீங்கான் பாத்திரம் (ச. மு.)

**சூடகம் சுத்தறது :** வீட்டில் உள்ளவர்களுக்குத் திருஷ்டி பட்டால் நீக்குவதற்காக வெற்றிலை அல்லது காகிதத்தில் கற்பூரத்தை (கற்பூரம்—சூடம்/சூடகம்) வைத்துச் செவ்வாய், வெள்ளி, சனி ஆகிய நாள்களில் எரியும்படிச்

செய்து திருஷ்டி கழிக்கப்பட வேண்டியவரைச் சுற்றி வாசலில் வைத்தல். சூடகம் எரிந்து அணைந்த பின் நீர் ஊற்றிக் கழுவித் தள்ளி விடுவர்.

**சூல்பலகாரம் :** ஒரு வகைப் பலகாரம். சமுசா, சோமாசு போன்றது. மசாலா சேர்க்கப்பட்ட காய்கறி, பட்டாணி ஆகியவற்றின் தொக்கை உள்ளீடாகக் கொண்டது. முதன் முதலாகக் கருவுற்றிருக்கும் பெண்ணைத் தாய்வீட்டார் ஏழு அல்லது ஒன்பதாம் மாதம் தம் வீட்டிற்கு அழைத்துச் செல்ல வரும் போது இப்பலகாரத்தை ஐம்பத்தொன்று, நூற்றியொன்று எனும் கணக்கில் கொண்டு வருவர். வாழைத்தார், மிட்டாய் மற்றும் பல பொருள்களுடன் இப்பலகாரமும் இடம்பெறும். (ஜே. ம. ஆ.))

**சூல் வளையல் :** முதற்சூல் அடைந்த பெண்ணுக்கு நடத்தும் சடங்கில் அணிவிக்கப்படும் வளையல் 'சூல் வளையல்' எனப்படும். இந்துக்கள் 'சீமந்தம்' அல்லது 'வளைகாப்பு' எனச் செய்யும் சடங்கு போன்று கத்தோலிக்கப் பரதவரும் செய்கின்றனர். ஏழு அல்லது ஒன்பதாம் மாதத்தில் இச் சடங்கு நிகழ்த்தப்படுகிறது. கடைக்குச் சென்று 'சூல் வளையல்' என்று கேட்டால் பல வண்ணங்களில் 21 வளையல்கள் தருவர். இவற்றை பத்து, பதினொன்று எனும் கணக்கில் இரு கைகளிலும் அணிவிப்பர். இச் சடங்கில் கலந்துகொள்ள வரும் பெண்களும் வளையல் வாங்கி வந்து சூலுற்ற பெண்ணின் மணிக்கட்டு முதல் முழங்கை வரை போடுகின்றனர். மீதமான வளையல் களை வந்திருக்கும் பெண்கள் தங்களுக்குள் ஒருவருக் கொருவர் அணிவிப்பர். (ஜே.ம.ஆ.)

**சேக்கல் :** இரவுப் பொழுதில் மீன்பாட்டுக்குச் செல்லுதல். (ச.மு.)

**செங்கிரந்தி :** குழந்தை நோய்களில் ஒன்று. இதற்குச் 'செவ்வார்ப்பு' எனும் பெயரும் உண்டு. குழந்தையின் உடம்பு முக்கியமாக முகம், கை, கால் விரல்கள் மிகச் சிவப்பாக மாறிவிடும். தீட்டுள்ள பெண்கள், குறைப்பிரசவம் ஆனவர்கள் குழந்தையைத் தொடுவதால் வரும் நோய் என நம்பப்படுகிறது. (ஜே.ம.ஆ.)

செடிபிடித்தல் : குழந்தை நோய்களில் ஒன்று. இதனைச் 'சிரடித்தல்' என்றும் வழங்குவர். பார்க்க : சிரடித்தல். (ஜே.ம.ஆ.)

செத்தை : காய்ந்த ஓலை. வீட்டைச்சுற்றி அமைக்கப்படும் மண்ணாலான சுற்றுச்சுவர் மழையால் கரைந்துவிடாமல் இருக்க சுவர் மீது பனையோலையை வைப்பர். இங்ஙனம் செய்யப்படும் செயல்முறையால் ஓலை வைக்கப்படும் சுற்றுச்சுவர்க்கும் 'செத்தை' எனும் பெயர் வழங்கப்படுகிறது; ஆகு பெயர். (ச.மு.)

செவ்வா(ர்)ப்பு : குழந்தை நோய்களில் ஒன்று. பார்க்க : செங்கிரந்தி (ஜே.ம.ஆ.)

சேனத்தண்ணி : கருப்பட்டி அல்லது சீனி கரைக்கப்பட்ட தண்ணீர். குழந்தை பிறந்தவுடன் பாட்டிமுறை உள்ளவர்கள் ஒரு சங்கு சேனத்தண்ணியைக் குழந்தைக்குப் புகட்டுவர். சிலர் சேனத் தண்ணீருக்குப் பதிலாகக் கிருத்துவப் பங்குக் கோயிலில் உள்ள தீர்த்தத்தைக் (புனித நீர்) கொண்டுவந்து புகட்டுவதுமுண்டு (ஜே.ம.ஆ.)

சொறிச்சல் : அரிப்பு. பொதுவாக தோல் அரிப்பை இச்சொல் குறிக்கும். காம உணர்வு மிக்கு ஒரு பெண்ணை அடைய அவள் பின்னே சுற்றும் வாலிபரைப் பிறர் கேலியாக 'அவன் சொறிச்சல் எடுத்து அலையுதான்' எனக் கூறுவர். (ச.மு.)

சோளக்கொண்டல் : 'சோழக்கொண்டல்' என்பதன் திரிபு. வடகிழக்குத் திசையிலிருந்து வீசும் காற்றுக்குச் 'சோளக் கொண்டல்' என்பது பெயர். தூத்துக்குடிக்கு சோழ நாட்டுக் கடற்கரைப் பகுதி வடகிழக்குத் திசையில் இருப்பதால் அங்கிருந்து வீசும் காற்றுக்கு இப்பெயர் உண்டாயிற்று. (ச.மு.)

ஞானத் தந்தை : குழந்தை பிறந்து எட்டு நாள்கள் முடிந்த பின் 'ஞானஸ்நானச் சடங்கு' நிகழ்த்தப்படும். இச்சடங்கைச் செய்வதால் குழந்தை திருச்சபைக்கு அதாவது கடவுளின் குழந்தையாக மீண்டும் பிறக்கின்றது என்ற நம்பிக்கையின் அடிப்படையில் அமைவது இச்சடங்கு. அன்று குழந்தையின் தாய் வீட்டார் ஒருவரும் தந்தை

வீட்டார் ஒருவரும் குழந்தைக்கு ஞானத்தாயாகவும் ஞானத் தந்தையாகவும் இருப்பர். ஞானஸ்நானச் சடங்கின்போது குழந்தையைப் பெற்ற தாய், தந்தையைக் காட்டிலும் முக்கியமாக ஞானத் தாயும் ஞானத்தந்தையும் கோயிலுக்கு வருதல் வேண்டும். குழந்தையின் பாவத்தை நீக்கும் இச் சடங்கின்போது குழந்தைக்குப் பொறுப்பாக ஞானத் தந்தை இருப்பார். ஞானத் தந்தையை 'தொட்டஅப்பா' என்றும் அழைப்பர். (ஜே.ம.ஆ.)

ஞானத்தாய் : பார்க்க : ஞானத் தந்தை. ஞானஸ்நானச் சடங்கின்போது பங்கெடுக்கும் ஒரு பெண் (குழந்தைக்குத் தாய், தந்தை வழியில் உறவு உள்ளவர்) ஞானத் தாயாக அழைக்கப் படுவார். இதைத் 'தொட்ட அம்மா' என்றும் அழைப்பர். (ஜே.ம.ஆ.)

ஞானஸ்நானம் : குழந்தை பிறந்து எட்டு நாள்கள் கழிந்தபின் குழந்தையின் பாவத்தை நீக்கி திருச்சபையில் உறுப்பின ராக்கும் சடங்கு. ஆதி பெற்றோர்—ஆதாம், ஏவாள்—கடவுளின் கட்டளையை மீறிச் செய்த பாவம் உலகில் பிறக்கும் ஒவ்வொரு மனிதரையும் தொடர்கின்றது என்பது கிருத்துவர்களின் நம்பிக்கை. இதனால் குரு புனித நீராகிய தீர்த்தத்தைப் 'பிதா, சுதன், பரிசுத்த ஆவியின் பெயரால் நான் உன்னைக் கழுவுகிறேன்' என்று மந்திரம் உச்சரித்துத் தெளிப்பார். இதனால் குழந்தைக்கு ஞானஸ்நானம் கிடைப்பதாக நம்பிக்கை. இருபிறப்பாளராகிய பிராமணர் தம் மகனுக்குப் பூணூல் அணிவித்துத் தூயவனாக்குதல் போன்றதொரு சடங்கு இது. (ஜே.ம.ஆ.)

தட்டம் : தாம்பாளம். தமிழ் நாட்டு வட மாவட்ட மக்கள் இதனைத் 'தாம்பாளத்தட்டு' என்பர். (ச.மு.)

தண்ணியடித்தல் : 'சீரடித்தல்' அல்லது 'செடிபிடித்தல்' எனும் நோயால் தாக்குண்ட குழந்தையை முஸ்லீம்களின் பள்ளிவாசலுக்கு எடுத்துச் செல்வர். பள்ளிவாசலில் இறையூழியம் செய்பவராகிய மோதினார் தொழுகைக்கு முன் பயன்படுத்தும் நீரைக் குழந்தையின்மீது மந்திரங்களை உச்சரித்துக்கொண்டே தெளிப்பார். இதற்குத் 'தண்ணி யடித்தல்' என்பது பெயராகும். (ஜே.ம.ஆ)

**தருமக்காரன்** : தருமம் கேட்பவன்; பிச்சைக்காரன்; 'அம்மா தர்மம், அய்யா தர்மம்' என்று கேட்டபடி வரும் இரவலனைத் 'தருமக்காரன்' என்பர். (ச.மு.)

**தலைக்கு தண்ணி ஊற்றுதல்** : குழந்தையைப் பெற்ற தாய்க்கு ஒன்பதாம் நாள் தலைக்குத் தண்ணீர் ஊற்றித் தலை முழுகும்படிச் செய்வர். இதனை 'இரண்டாம் முழுக்கு' என்றும் கூறுவர். பார்க்க : இரண்டாம் முழுக்கு (ஜே.ம.ஆ.)

**தலைமுழுக்கு** : இறப்புச் சடங்குகளில் ஒன்று. துக்கம் கழிக்கும் நாளன்று தலையில் எண்ணெய் இட்டு நீராடுவர். இது 'தலை முழுக்கு' எனப்படும். (ச.மு.)

**தலைவனார்** : மிகவும் உயர்ந்தவரை 'ஆர்' எனும் மரியாதை விகுதியுடன் அழைத்தல் வழக்கம். இதன்படி தலைவன், தலைவனார் ஆயிற்று. பரதவர் தம் சாதித்தலைவரைத் தலைவனார் என்பர். (ச.மு.)

**தாஸ்பத்திரி** : குழந்தை மருந்துகளில் ஒன்று. (ஜே.ம.ஆ.)

**திருக்குடும்பப்படம்** : கன்னிமரியாள், சூசையப்பர் இவர்களுக்கிடையில் யேசுகிருஸ்து இருப்பது போல அமைந்த படம் திருமணத்தன்று மணமக்களுக்கு நிகழ்த்தும் சாந்தி முகூர்த்தச் சடங்கின்போது அவர்தம் படுக்கையில் தலையணைக்குக் கீழே இப்படத்தை வைப்பர். இம்மணமக்களின் வாழ்வு கன்னிமரியாள், சூசையப்பர் வாழ்வு போலப் பரிசுத்தமாக அமையவும் யேசுகிருஸ்து போலத் திவ்வியமான மகன் பிறக்கவும் வேண்டும் எனும் நோக்கில் இத்திருக்குடும்பப்படம் அங்ஙனம் வைக்கப்படுகிறது. பொதுவாகக் கிருத்துவ வீடுகளில் இதுபோன்ற திருக்குடும்பப் படங்கள் வழிபாட்டுக்குரியனவாக இருக்கும். (ஜே.ம.ஆ.)

**தின்னி மாடு** : வசவுச்சொல் 'கோயில் மாடு', 'பெருமாள் மாடு' என வடமாவட்டத் தமிழ் மக்கள் கூறுவர். கோயிலுக்கு நேர்ச்சையாக விடப்பட்ட காளைக்கன்று யாருக்கும் கட்டுப்படாமல், உழைப்பிலும் ஈடுபடாமல் அதன் விருப்பப்படி மேய்ந்து வளரும். பயிரை மேய்ந்தால்கூட அடிக்க மாட்டார்கள். சாமி கோபித்துக் கொள்வார் எனும்

அச்சத்தால் ஓறுக்காது விட்டுவிடுவர். இது கொழுகொழு வென வளர்ந்து திமில் சரிந்து மினுமினுப்பாக உலவி வரும். இம்மாடுகளை ஊரார் புரட்டாசி மாதச் சனிக் கிழமைகளில் 'பூம்பூம்மாட்டுக்காரன்' அல்லது 'பெருமாள் மாட்டுக்காரன்' என்று அழைக்கப்படுபவனிடம் ஒப்படைப் பர். இப்படிப் பெற்ற மாடுகளையே 'பூம்பூம் மாட்டுக் காரன்' (உறுமி போன்ற தோற்கருவியை வைத்துக் கொண்டு 'பூம்பூம்' என இசை யுண்டாக்கியபடி வருபவனா தலால் இப்பெயர் காரணப் பெயராயிற்று) அலங்கரித்து நடத்தியபடி வீடுகள் தோறும் தருமம் கேட்டுவருவான். உழைப்புக் கவலை, உணவுக்கவலை என்ற கவலைகள் ஏது மின்றி உலவும் கோயில் மாடு எப்போதும் இரை மேய்ந்த படி ஊரில் உலவுவதால் இதற்குத் 'தின்னிமாடு' எனும் பெயர் உண்டாயிற்று. மனிதர்களில் எவ்விதப் பொறுப்பும் கடமையும், கவலையும் இல்லாது இருப்பாரைப் பிறர் 'தின்னிமாடு' எனக் குறிப்பர். இது உவமையாகு பெயர் (ச.மு.)

**தீட்டு :** மாதவிலக்கு. கருவுறுதலுக்குத் தயாராகத் தகுந்த ஏற்பாட்டுடன் கருப்பையில் காத்திருக்கும் கருமுட்டை, கருவுறுதல் நிகழாமையால் கருப்பையை விட்டுக் கலைந்து வெளியேறுவதைத் 'தீட்டு' என அழைப்பர். இது மாதந் தோறும் உண்டாகும் இயற்கைச் சுழற்சி. தீட்டுள்ள பெணகள் குழந்தையைத் தொட்டால் நோய் உண்டாகும் என்பர். இதுபோலவே தீட்டுடையோர் வளரும் பயிர் உள்ள நிலங்களில் நடமாடினாலும் விளைச்சல் பாதிக்கும் என்பர். 'ஒத்தது ஒத்ததை உருவாக்கும்' என்பதன் அடிப் படையில் தோன்றிய நம்பிக்கை இது. (ச.மு.)

**தீர்த்தம் :** கிருத்துவக் கோயிலில் உள்ள புனிதநீர். பாஸ்கா (ஈஸ்டர்) இரவு எனப்படும் புனித சனிக்கிழமை நள்ளிரவு சுமார் பதினொன்று மணிக்குச் சடங்குகள் ஆரம்பமாகும் போது கோயிலில் எந்த ஒளியும் இருக்காது. எல்லா மின் விளக்குகளும் அணைக்கப்பட்ட நிலையில் கோயில் இருளில் மூழ்கியிருக்கும். டார்ச் லைட்டின் உதவியுடன் குரு மந்திரங்களைப் படித்து 'பாஸ்காத்திரி' எனப்படும் பெரிய மெழுகுதிரியைப் புதிதாக உருவாக்கி மந்திரித்த நெருப்பிலிருந்து ஒளி பெற்று ஏற்றுவார். மக்கள் தாங்கள்

கொண்டு வந்த சிறிய மெழுகுதிரியை அந்தப் பாஸ்காத் திரியிலிருந்து ஒளியேற்றிக் கொள்வர். திருப்பலியின் ஒரு கட்டத்தில் புனித நீரை மந்திரிக்கும் சடங்கு நிறைவேற்றப்படும். அப்போது புனிதர்கள் அனைவரின் பிரார்த்தனையைப் பாடியபடி குரு தாம் ஏற்றி வைத்த பாஸ்காத் திரியின் அடிப் பகுதியை நீர் நிறைந்த அண்டாவினுள் பாதியளவு மூழ்கியிருக்கும்படி வைத்து மந்திரங்கள் படிப்பார். இவ்வாறு மந்திரிக்கப்பட்ட புனித நீரை மக்கள் வீடுகளுக்கு எடுத்துச்சென்று பத்திரப்படுத்தி வைப்பர். ஆலயங்களில் இந்நீரானது அடுத்த பாஸ்காத் திருவிழா வரை பத்திரப்படுத்தி வைக்கப்படும். நோயால் துன்புறுவோர், பிரசவ வேதனைப்படுவோர் ஆகியோருக்கு இத்தீர்த்தம் வழங்கப்படும். புதிதாகப் பிறந்துள்ள குழந்தைக்கு முதன்முதலில் புகட்டும் 'சேனத்தண்ணி' யாகவும் இத்தீர்த்தம் பயன்படுகிறது. (ஜே.ம.ஆ.)

துக்கம் கலையறது : இறப்பையொட்டிய நிகழ்ச்சி. எண்ணெய் நீராட்டு (ச.மு.)

தும்புக்கட்டை : துடைப்பம் அல்லது விளக்குமாறு. (ச.மு.)

தூண்டாவிளக்கு : தூண்டுதல் இல்லாது எரியும் விளக்கு பார்க்க : அணையா விளக்கு (ஜே.ம.ஆ)

தேசிக்காய் : எலுமிச்சைப் பழம் (வி. கொ.)

தொட்டப்பா : ஞானத்தந்தை. பார்க்க : ஞானத்தந்தை

தொட்டம்மா : ஞானத்தாய். பார்க்க : ஞானத்தாய்.

தொதல் : ஒருவகை இனிப்புப் பலகாரம். கைக்குத்தல் அரிசி, முட்டை, தேங்காய்ப்பால், சர்க்கரை அல்லது சீனி, நெய் ஆகியவற்றைக் கலந்து அடுப்பில் வைத்துக் கிண்டி அல்வா போலச் செய்யப்படும் பலகார வகை.

தோட்டியார் : கப்பலில் கழிப்பறை கழுவுபவர்

தோளுக்கு ஊத்தறது : குழந்தையைப் பெற்றெடுத்த தாயை ஐந்தாம் நாள் அல்லது ஏழாம் நாள் வெந்நீர் வைத்துக் குளிப்பாட்டுவர். இதனைத் 'தோளுக்கு ஊற்றுதல்'

என்பர். குழந்தையை ஈன்ற தாய்க்கு இதுவே முதல் குளியல் ஆதலால் இதனை 'முதல் முழுக்கு' என்றும் அழைப்பர். இந்நாளில் தாய்க்குச் 'சுக்குக்களி' எனும் மருந்தை உண்ணக்கொடுப்பர். (ஜே.ம.ஆ.)

நடைகல்லைத் திருப்பிப் போடுதல் : குழந்தைகள் பிறக்கும் காலத்திற்கும் குடும்பத்துக்கு உண்டாகும் நன்மை, தீமைக் கும் தொடர்பு இருப்பதாக மக்களிடம் நம்பிக்கை உண்டு. சித்திரை மாதத்தில் குழந்தை பிறப்பதும் நான்காவது குழந்தையாகப் பெண் குழந்தை பிறப்பதும் தீமை விளை விக்கும் என்பர். சித்திரை மாதம் ஆண்குழந்தை பிறந் தால் குழந்தை இறந்துவிடும் அல்லது தகப்பனுக்குக் கெடுதல் நேரும் எனவும் பெண்குழந்தை பிறந்தால் அக் குடியே அழிந்து விடும் எனவும் கூறுகின்றனர். இதற்குப் பிராயச்சித்தமாக நடைகல்லை—வாசலில் உள்ள படிக் கல்லைத் திருப்பிப் போடுவர். மேற்பகுதி கீழாகவும் கீழ்ப்பகுதி மேலாகவும் திருப்பிப் போடுவதால் அவ்வீட்டிற் குள் நுழைய வரும் தீயசக்தி நடைகல்லைக் கண்டதும் திருப்பிப் போய்விடும் எனும் நம்பிக்கையால் நடைகல்லைத் திருப்பிப் போடுகின்றனர். இதனை 'நடைகல்லைத் திருப்பிப் போடுதல்' என அழைக்கின்றனர் (ஜே.ம.ஆ).

நுள்ளுறது : ஒருவரையொருவர் கிள்ளி விளையாடுதல்

நேர்மானம் : நேர்ச்சை, நேர்ச்சிக்கடன், அசனம். பார்க்க : அசனம் . (ச.மு.)

நொய்யினிப்பு : ரவைலட்டு (ச.மு.)

பணியம் : அப்பம் அல்லது ஆப்பம். (ச.மு.)

பப்பா அம்மை : அம்மையின் பாட்டி அல்லது பாட்டியின் அம்மை—(ச. மு.) பூட்டியம்மா, பூட்டி யாச்சி என்றும் வழங்குவர் (வி. கொ.)

பராக்பரேக் : சடங்குகளுக்கு இடையில் அவ்வப்போது பாடும் வாழ்த்துப்பாட்டு. (ச.மு.)

பவிசுக்கட்டில் : மரக்கட்டில். தமிழ்நாட்டு வடமாவட்ட மக்கள் இதனைத் 'தோம்தார் கட்டில்' எனவும் அழைப்பர். அழகான வேலைப்பாடுகளுடன் கூடிய கட்டில்.

பொருள் வசதியுடையோர் இத்தகைய கட்டிலை வைத்தி ருப்பதால் இதற்குப் 'பவிசுக் கட்டில்' எனும் பெயர் உண்டாயிற்று. (ச.மு.)

பறவாசித்தல் : திருமணத்திற்கு நிச்சயம் செய்தபின் யார் யாருக்குத் திருமணம் என்று ஞாயிறு வழிபாட்டின் இறுதி யில் மக்கள்முன் வாசிக்கப்படும் திருமண அறிக்கை.

பாணி : கசிதல் அல்லது நீற்றுப்போதல்; உப்பு, கருப்பட்டி முதலியன இங்ஙனம் ஆகும் (ச. மு.)

பிரட்டு : கூறியதை இல்லையென புரட்டிப் பேசுதல்; தகாத சொற்களைப் பெய்து பேசுதல் (ச.மு.)

பிள்ளை மருந்து : இது, 'அங்காயம்' எனவும் 'காயங்கருப் பட்டி' எனவும் வழங்கப்பெறும். பார்க்க : அங்காயம், காயங் கருப்பட்டி (ஜே.ம.ஆ.)

பிஸ்போச்சு : கம்மோடு; சார்ந்து கொள்ளத் தோதுபடாத, அமரமட்டுமே வசதியுடைய வட்டவடிவ இருக்கை (வி.கொ.)

பீத்தை : ரிப்பன் ; மகளிர் தம் தலை மயிரைப் பின்னலிட்டுக் கட்ட உதவும், ஓரங்குல அகலமுடைய நீளத்துணித் துண்டு. (வி.கொ.)

பீர்ஸ் : சிறிய தட்டு (வி.கொ.)

புட்டுவம் : மரத்தாலாகிய இருக்கை, ஸ்டூல் (வி. கொ.)

புனிதநீர் : பார்க்க : தீர்த்தம் (ஜே.ம.ஆ.)

பூசை : கோயில்; ஆகுபெயர். பூசை செய்யப்படும் இடம் கோயிலாதலால் கோயிலுக்கு இப்பெயர் ஆகி வந்தது. சில நேரங்களில் இச்சொல் கோயிலில் பங்குக்குரு செய்யும் பூசையையே குறிப்பிடும்; சான்று : முதல் பூசை, இரண் டாம் பூசை. (ச.மு.)

பொக்கை : பூச்செண்டு; ஆங்கிலச் சொல். (ச.மு.)

பொம்பே மாதா சீட்டு : கி. பி. 1894 இல் பாண்டிச்சேரியி லிருந்து சகோதரி மார்ட்டின், தூத்துக்குடி அடைக்கல

மாதா மடத்திற்கு பொம்பே மாதாவையும் இம்மாதாவுடன் தொடர்புடையதாகக் கூறப்படும் மந்திரங்கள் அச்சிட்ட சீட்டையும் கொண்டு வந்தார். (சகோதரி மார்ட்டின் 1940 இல் மடத்தின் தலைவியாக இருந்தவர்) குழந்தைப் பேறு வாய்க்காதவர்கள் குழந்தைப் பேற்றுக்காகவும், கருவுற்றவர்கள் சுகப் பிரசவத்திற்காகவும் பனிமய மாதா கோயிலுக்கு வடபுறம் உள்ள அடைக்கல மாதா மடத்துக்கு வந்து பொம்பே மாதா படத்தின்முன் மண்டியிட்டு மன்றாடி மந்திரங்கள் அச்சிட்ட சீட்டை நீரில் கரைத்துக் குடிப்பர். இவ்வேண்டுதலுக்குப் பயன்படும் இச்சீட்டை மக்கள் 'பொம்பே மாதா சீட்டு' என்பர் (ஜே.ம.ஆ.).

பொரி கந்தாச்சி : இரும்புச்சட்டி (வி. கோ.)

பொருத்தனை : நேர்ச்சிக்கடன். பார்க்க : அசனம், அயனம், நேர்மானம் (ச. மு.)

பொறுத்துக்கோ : 'போய் வா' எனல்; 'அக்கம்பக்கம் உள்ளவர் வீட்டிற்குப் போ' எனல்; தருமக்காரன் தருமம் கேட்கிற போது அவ்வீட்டார் மேற்கண்ட பொருளில் 'பொறுத்துக்கோ' என்பர் (ச.மு.)

போச்சி : 'ஜக்' என ஆங்கிலத்தில் சுட்டப்படும் பொருள். குடிதண்ணீர் நிரப்பிவைக்கப் பயன்படும் பாத்திரம். (ச. மு.)

போத்தல் : குப்பி; சீசா (கண்ணாடியில் ஆனது) (ச.மு.)

போத்தி : பாட்டன் (ச.மு.)

போலா : தன்னைவிடச் சிறியவரை, எளியவரைப் போகச் சொல்லி ஏவப் பயன்படும் சொல். 'ஏல, போ' எனும் சொற்கள் பின்முன்னாக, முன் பின்னாகச் செறிந்து இவ் வடிவாக மாற்றங் கண்டது (ச.மு.)

மக்ரூணி : முந்திரிப் பருப்பை ஆட்டிச் சீனியுடன் சேர்த்துக் கூம்பு வடிவில் செய்யப்படும் ஒரு தின்பண்டம்.

மடி : வலை வகைகளில் ஒன்று. இதனை 'மடிவலை' என்றும் கூறுவர். (ச.மு)

மண்டபம் : கிருத்துவத் தேவாலயங்களின் முன்பகுதியில் ஆலயத்துடன் இணைத்துக் கட்டப்பட்ட பகுதி. கோவில் களுக்கு நேர்ச்சை செய்தவர்கள் இங்கே தங்கியிருப்பர். (ஜே.ம.ஆ.)

மன்றாடியார் : பேச்சு வழக்கில் 'மண்ணாடி' என்றும் வழங்கு வர். சற்றேறக்குரிய சம்மாட்டியார் போன்றவர் இவர் (ச.மு.)

மஸ்கத் : கோதுமை மாவு, சீனி, நெய், ஏலக்காய் சேர்த்து அடுப்பில் வைத்துக் கிண்டி எடுக்கப்பட்ட ஓர் இனிப்புப் பலகார வகை; அல்வா போன்றது.

மாச்சீனி : குழந்தைக்குரிய மருந்துகளில் ஒன்று. (ஜே.ம.ஆ.)

மாந்தை : பெண்கள் அணியும் ஒருவகை மேலாடை; முஸ்லீம் மதத்தைச் சேர்ந்த லெப்பைப் பிரிவு பெண்டிர் அணியும் கருப்பு வண்ணத்தாலாகிய மேலாடையைப் போன்று, பல வண்ணங்களில் தைக்கப்பட்டு, தேவாலத்திற்கு வரும் போது மட்டும் அணியும் ஆடை (ஜே.ம.ஆ.)

மிதிதும்பை : காலில் உள்ள தூசி தும்புகளைத் துடைப்பதற் காக முதல் கதவு அல்லது தலைவாசலுக்கு முன்னர் போடப்பட்டிருக்கும் தேங்காய் நார் போன்ற பொருள் களால் ஆக்கப்பட்ட கால்துடைப்பான் (ச.மு.)

முக்கூட்டு எண்ணெய் : ஆமணக்கெண்ணெய், தேங்காய் எண்ணெய், நல்லெண்ணெய் ஆகியன ஒன்றாகக் கலக்கப் பட்ட கலவைக்கு 'முக்கூட்டு எண்ணெய்' என்பது பெயர். பிறந்த குழந்தைக்கு அதன் உடல் நிலையைப் பொறுத்து ஐந்தாம் நாள் அல்லது ஏழாம் நாள் முதல் முதல் தண்ணீர் ஊற்றிக் குளிப்பாட்டுவார்கள். ஒன்பதாம் நாள் மேற் குறித்த முக்கூட்டு எண்ணெயைக் காய்ச்சித் தலைக்குத் தேய்த்து குளிப்பாட்டுவர். ஒன்பதாம் நாள் எண்ணெய்க் குளியலுக்கு உதவுவது இம்முக்கூட்டு எண்ணெய் ஆகும். (ஜே.ம.ஆ.)

முப்பது : எண்ணுப் பெயராகிய முப்பது என்பது இறந்த வர்க்குச் செய்யும் கிரியைச் சடங்கைக் (உத்திரகிரியை, கருமாதி) குறிக்கும். முப்பதாம் நாள் இச்சடங்கு நடத்தப்

படுதலால் இவ்வெண்ணுப்பெயர் இச்சடங்குக்கு ஆகி வந்தது. ஆகவே இது ஆகு பெயராகும் (ச.மு.)

மூன்றாம் முழுக்கு : குழந்தையைப் பெற்ற தாய்க்கு ஐந்தாம் நாள் அல்லது ஏழாம் நாள் தோளுக்கு ஊற்றுவர்; இது முதல் முழுக்கு. ஒன்பதாம் நாள் தலைக்கு ஊற்றுவர். இது இரண்டாவது முழுக்கு. இதன்பின் 'அங்காயம்' அல்லது 'பிள்ளை மருந்து' அல்லது 'காயங்கருப்பட்டி' எனும் மருந்தை உண்ணும் தினத்தன்று தாய் மூன்றாவது முழுக்கு ஆட்டப்படுவாள். (ஜே.ம.ஆ.)

மொடுதவம் : மாதா கோயில் கணக்குப்பிள்ளை (ச.மு.)

மொலுங்கு : பருத்த, கனத்த உருவம். ஒரு நபர் அளவுக்கு மீறிப் பெருத்திருந்தால் அவர் 'மொலுங்கு மாதிரி' இருப்பதாகச் சொல்வர் (ச.மு.)

ரோந்தை : வலையின் கீழ்ப்பகுதி அல்லது அடிப்பகுதி (ச.மு.)

லங்கர் : தோணி, வள்ளம் போன்ற கடற்கலங்களின் துணைத் தலைவர் (ச.மு.)

லம்பிட்டான் : கால்தடுக்கிக் கீழே விழுதல் (ச.மு.)

லாச்சு : கால்சட்டை. குறிப்பாக அரைக்கால் சட்டையைக் குறிக்கும் (வி.கொ.)

லாம்பு : 'லேம்ப்' எனும் ஆங்கிலச் சொல்லின் திரிபு. சிறிய அளவிலான சிம்னி விளக்கு (அ.மு.)

லேஞ்சு : கைகுட்டை. 'கர்ச்சிப்' என ஆங்கிலத்தில் வழங்கப் படும் ஒரு துண்டுத்துணி. கை, வாய், முகம் துடைக்கப் பயன் படுவது (ச.மு.)

லோட்டா : விளிம்பு இல்லாத குவளை. நீர் குடிக்கப் பயன் படுத்தப்படுவது. விளிம்பு உள்ளது தம்ளர்; விளிம்பு இல்லாதது லோட்டா. (ச.மு.)

வசி : தட்டு (வி.கொ.)

வடக்கே போறது : திருமணமான புதுமணத் தம்பதிகள் அந்த வாரத்தின் இறுதி நாளாகிய சனி அல்லது ஞாயிற்றுக்

கிழமை தூத்துக்குடி நகரின் வடபகுதியில் உள்ள சிந்தாத்திரை மாதா ஆலயத்துக்குச் சென்று வருதல் (ஜே. ம. ஆ.)

வண்ணமாயிருக்கு : தடிமன் அல்லது பருமனாக இருத்தல்

வருஷம் : இறந்தவரின் நினைவு நாள்

வாங்கு : மரத்தாலாகிய உட்காரப் பயன்படும் பலகை. இதனை 'மணை' என்பர். தரையில் அமர விரும்புவோர் துணி அழுக்காகாமல் இருக்க மணையில் அமர்வர். இம் மணையை 'வாங்கு' என்பர். (வி.கொ.)

வாசல்படிமறிக்கிறது : திருமண நிகழ்ச்சியில் மணமகளுக்குத் தாய் மாமன் அல்லது தாய்மாமன் மகன் மணமகனை வாசலில் நின்று மறித்து மணமகள் மீது தனக்குள்ள உரிமையை நிலை நாட்டுதல்; இது ஒரு பாவனைச் சடங்கு. தாய்வழிச் சமூக அமைப்பில் தாய் மாமன் பெற்றிருக்கும் அளவில்லாத பாத்யதையைக் காட்டக்கூடிய ஒரு பாவனைச் சடங்காகும் இது. (ச.மு.)

வாடாவிளக்கு : பார்க்க : 'அணையா விளக்கு'; 'தூங்கா விளக்கு; (ஜே.ம.ஆ.)

வாடித்திருவிழா : கல்லறைத் திருநாள் (ச.மு.)

வாலா : 'ஏல வா' என்பதன் முன்பின், பின்முன் மாற்றம். இங்கே வா என விளிக்கும் ஒரு விளி, பார்க்க: பேலா. (ச.மு.)

வாழைப்பழ இனிப்பு : வாழைப்பழத்தைச் சர்க்கரையுடன் சேர்த்து, நெய்விட்டு, அடுப்பில் வைத்துச் சூடேற்றிச் கிண்டி எடுக்கப்படும் ஓர் இனிப்புப் பலகாரம். இது அல்வா போன்றது.

வாளி பூருதல் : அந்தோணியாருக்கு நேர்ந்து கொள்ளும் ஒரு நேர்ச்சை. கர்ப்பமுற்றிருக்கும் காலத்தில் ஒரு பெண் மஞ்சள் காமாலை டைபாய்டு ஆகிய நோய்களால் தாக்கப் படும்போது எவ்வித ஆபத்துமில்லாமல குழந்தை பிறந் தால் பிறக்கும் குழந்தைக்கு 'அந்தோணியார் பட்டம்' வைத்து மொட்டை அடிப்பதாகவும் காதில் 'வாளி பூருவ'

தாகவும் (காதில் தங்கக் கம்பியை நுழைத்து வளைய மாக்கி வைப்பது) வேண்டுதல் செய்வர். குழந்தை பிறந்த பின்பும் பிழைக்காது எனக் கருதும் வகையில் ஏதேனும் ஆபத்து ஏற்பட்டாலும் குழந்தை பிழைத்துக்கொண்டால் மேற்குறித்தபடி செய்வதாக வேண்டுதல் செய்வர். இது அந்தோணியாருக்குச் செய்யப்படும் நேர்ச்சை (ஜே.ம.ஆ.)

**விருத்தம்:** புனிதர் வாழ்க்கை வரலாறு குறித்த பாடல் (ச. மு.)

**விருத்தம் பாடுதல்:** கிருத்துவ ஆலயங்களில் திருவிழாவிற்கு முன்னர் கொடியேற்றிய நாளிலிருந்து திருவிழா நாள் வரை உள்ள பத்து நாள்களும் திருவழிபாட்டின் இறுதியில் மந்திரத்தை இராகத்துடன் வாசித்தல் (ஜே.ம.ஆ.)

**வெஞ்சனம்:** உணவு உண்ணத் தோதாக அமையும் துணைக் கறி (ச.மு.)

**வேக்காலம்:** கோபமாக இருத்தல்

**ஜில்லுண்ணு:** வெறுமையாக. ஆள் நடமாட்டம் இல்லாமல் வெறிச்சோடி இருத்தல். வடமாவட்டத் தமிழ் மக்கள் 'விசோ' என்று இருப்பதாகக் கூறுவர். தூத்துக்குடிப் பரதவர் 'தெரு ஜில்லுண்ணு இருக்கு, வீடு ஜில்லுண்ணு இருக்கு' என வழங்குகின்றனர் (ச.மு)

**ஜோட்டி:** சடை, பின்னல். மகளிர் கூந்தலை சடை பின்னிக் கொள்ளல். 'அவள் என்ன செய்யுறா?' எனும் கேள்விக்கு 'அவள் ஜோட்டி பின்னுறா' எனப் பதில் கூறுவர். (ச.மு.)

(வழக்குச் சொற்கள் சேகரிப்பில் உதவிய ஜேம்ஸ் மரிய ஆரோக்கியம் எம். ஏ., விர்கோ கொறையரா பி. எஸ் சி. ஆகிய ஆர்வலர்களுக்கு நன்றி.)

# 6

# கப்பல் சாத்திரம், கப்பல் சிந்து நூற்குறிப்பும் கலைச்சொற்களும்

## அ. கப்பல் சாஸ்திரம்—நூற்குறிப்பு

(Government Oriental Manuscripts Library, Madras, 1950)

எல்லாத்திறத்து மக்களும் கைக்கொள்ளும் கலைகள் நாற்பத் தொன்று எனவும் இவற்றுள் தோணி, தேர் முதலிய செய்தல் அறிவு ஒரு கலையாகும் எனவும் இது முப்பத்து நான்காவது கலை எனவும் கூறுவர். தோணி செய்யும் கலை பற்றிய நூல் 'கப்பல் சாஸ்திரம்' எனப்படும். சென்னை அரசாங்கத்துக் கீழ்க்கலைப் பழஞ்சுவடி நூல் நிலையத் தமிழ்த் தொகுதியில் 'கப்பல் சாஸ்திரம்' எனும் சுவடி உண்டு. இது வருஷம் *1620*இல் தயங்கம்பாடி (சடங்கன்பாடி—தயங்கம்பாடி—தரங்கம் பாடி)யில் இருந்த டென்மார்க் மொழி, தமிழ்மொழித் துபாஷி காலிங்கராயப் பிள்ளை வீட்டிலிருந்த சுவடியிலிருந்து பிரதி செய்யப்பட்டதாகும். இக்கப்பல் சாஸ்திர நூலுக்கு 'நீகாம சிகாமணி' எனும் பெயர் வழங்கிவந்ததாக நூல் அகச்சான்றால் அறியவருகிறோம். வடமொழியில் 'நௌகா சாஸ்திரம்' எனும் நூல் உள்ளதாக அறிகிறோம். சலை கதிரங்கன் சொல்படி இந்நூல் தமிழ்ப்படுத்தப்பட்டதாகத் தெரிகிறது. தாரா நகரத்து அரசன் போசன் என்பான் இயற்றிய 'யுக்தி கல்ப தரு' என்ற பெருநூலில் கப்பலைப் பற்றிய குறிப்புகள் விரிவாக உள்ளன. கப்பல் கட்டும் தொழில் பற்றிய குறிப்பு பரிபாடலில் (10 : 53-55) உண்டு. 'யுக்தி கல்ப தரு' நான்கு வகைக் கப்பல் களைக் கூறும். நான்கு கூம்புகள் உள்ள மரக்கலத்துக்கு வெள்ளை வண்ணமும் மூன்று கூம்புகள் உள்ள மரக்கலத்

துக்குச் செவ்வண்ணமும் இரண்டு கூம்புகள் உள்ள மரக்கலத் துக்கு மஞ்சள் வண்ணமும் தீட்டவேண்டும் எனும் தகவல் அந் நூலில் காணக்கிடக்கிறது. மரக்கலங்களின் முகப்புப் பாகத்தில் அரியேறு, எருமை, பாம்பு, யானை, புலி, அன்னம், மயில், கிளி, தவளை, ஆண்மகன் ஆகியவற்றின் தலை வடிவங்கள் அமைக்கப்படும். இவை மரக்கலத் தச்சு வினைஞன் கைத்திறங் காட்டுவன. பரங்கிப்பேட்டை மரக்கலத் தச்சு வினைஞர் ஒருவர் சில தகவல்களைத் தெரிவிக்கிறார். திருக்கைத்தி மரம், காண பாய்மரம், கோசுபாய்மரம் என்பன பாய்மர வகைகள். ஆஞ்சான் கயிறு; தாம்பாங்கயிறு, வேடாங்கயிறு, பளிங்கைக் கயிறு, மூட்டங்கயிறு, இளங்கயிறு என்பன கயிறு வகைகள். வேம்பு, இருப்பை, புன்னை, நாவல் என்பன கப்பல் கட்டுதற் குரிய மரங்கள். பக்க வங்குக் கால்களுக்குத் தேக்கு, வெண் தேக்கு சிறந்தன. முழக்கோல் என்பது தச்சு முழம் 20 அங்குல மாம். எனினும் $19\frac{3}{4}$ அங்குலமாகக் குறைத்து வைப்பதே வழக் கம். வங்குவரிகள் (Side Planks) என்பன $2\frac{1}{4}$, $3\frac{1}{4}$, $4\frac{1}{4}$, $5\frac{1}{4}$ ஆக இவ்வாறு உயர்ந்து ஏறுதல் வழக்கம் என்று தெரிய வருகிறது. சுக்கானைப் பற்றியும் நங்குரம் பற்றியும் செய்தி கள் பல உள்ளன. சேந்தன் திவாகரம் எனும் பழைய தமிழ் நிகண்டு மரக்கலத்தின் பெயர்களாக,

> "வங்கப் பாதை தோணி யானம்
> தங்கு மதலை திமில்பாறு அம்பி
> பஃறி சதாவே பாரதி நவ்வே
> போதந் தொள்ளை நாவாய் என்றிவை
> மேத்கு நீர்மேல் ஓடும் மரக்கலம்"

எனும் நூற்பாவால் குறிக்கும்

> "பக்டு பஃறி யம்பி யோடம்
> திமிலை தோணி எனச் செப்பினரே"

எனும் நூற்பாவால் தோணியின் பிற பெயர்களை அறிகிறோம்.

> "பகடு பட்டிகை யானம் அம்பி
> படுவை தொள்ளை புணைமிதவை தெப்பம்"

எனும் நூற்பாவால் தெப்பத்தின்பிற பெயர்களை அறிகி றோம்.

இனி 'கப்பல் சாஸ்திரம்' கூறும் செய்திகளைக் காண்போம். மரக்கலம் செய்யக் கிரகம், நட்சத்திரம், ராசி, திதி, வாரம் ஆகியன தேர்ந்து முதலாளி நாளுடன் பொருந்தும் படியிருக்கும் நாளில் செய்ய வேண்டும். கலத்தின் அடி மரமாகிய ஏரா, அமைப்பதில் துல்லியமான கணக்குகள் உண்டு. முழு மரக் கலத்தின் நீளம், அகலம், உயரம் ஆகியன அடிப்படையில் பொது வகை (சாமானியம்) மரக்கலங்கள் (ஆறு, வாய்க்கால்களில் செல்பவை) பத்து வகைப்படும் எனவும் சிறப்பு (விசேஷம்) மரக் கலங்கள் (கடல் வழிச் செலவுடையவை) பத்து வகைப்படும் எனவும் கூறப்படுகிறது. நீளத்தால் சிறந்த மரக்கலங்கள் தீர்கா எனவும் உயரத்தால் சிறந்த மரக்கலங்கள் உன்னதா எனவும் அழைக்கப்படுகின்றன. உன்னதா மரக்கலங்கள் ஐந்து வகைப் படும். முழக்கோல் அளவு, லெக்கினம், வங்கனாள், ஓரையும் இறகமும், புறுவ பக்கம், பாய்மரம் எடுக்க லெக்னம், வங்க நாள் நிற்குமிடம், மேழுதலங் குறிக்க, அகமெடுக்க, கப்பல் வைக்க வரையறை, கிருக திருஷ்டி எனப்பல செய்திகள் உள்ளன. இச்சுவடியில் விருத்தப்பா, வெண்பாக்கள், வசனங்கள் நிறைந் துள்ளன. சான்றாகச் சில பகுதிகளைக் காட்டலாம்.

> "வடிவான வங்கம் அதை நீளளந்து வருபாகம் அஞ்சு மஞ்சும்
> இடுமா றினொன்றும் மூன்றோடிரண்டு ஏழோடு ஒன்ப தொருபான்
> இடகேழினீடுருக்கண்கள் காணிலெழிலாகும் என்பர் பெரியோர்
> நடமாறு அஞ்சுமிரு நாலு முளதாகில் நன்மையலவே"

இது ஏராவின் (ஏரா—கப்பலின் அடிமரம்—keel) அளவு பற்றியது. ஏராவின் நீளத்தை அளந்து பார்த்தும் பத்துப் பங்கிட்டு முதல் பதம், இரண்டாம் பதம், மூன்றாம் பதம், ஆறாம் பதம், ஏழாம்பதம், ஒன்பதாம் பதம், பத்தாம் பதம் பத்திலும் கண்ணிடை, கருவிடை, இலக்கிடை, சுழிக்கடை இது வந்தால் தேவை. இல்லாது அஞ்சாம் பதத்திலும் நாலாம் பதத் திலும் இந்தக் கணு வந்தால் ஆகாதென்றறியவும் என்பது பொருள்.

**வசனத்துக்குச் சான்றாக சில பகுதிகள் ;**

"யாதொரு கப்பலுக்கு பாய்மரம் அளவு. ஒரு கப்பலுக்கு ஏரா நீளம் முழம் 45. அகலம் முழம் 15. அந்தக் கப்பலுக்கு

வலிய பாய்மரம் ஒடுதை $2\frac{1}{4}$ கொள்ளவும். ஒடுதை உறைக்கு முழம் 37. வலிய காவிய நீளம் ஒடுதைகளுக்கு முழம் $22\frac{3}{4}$, ஆக வலிய பருமல் ஒடுதை 2க்கு முழம் 30. வலிய காவி பருமல் ஒடுதை $\frac{1}{8}$க்கு முழம் 17. இனித் திருக்கத்திப் பாய் பரம் ஒடுதை $2\frac{1}{4}$க்கு முழம் $33\frac{3}{4}$ திருக்கத்தி காவிய பருமல் ஒடுதை 7/8க்கு முழம் 15. ஈசானம் பாய்மரம் ஒடுதை $1\frac{1}{8}$க்கு முழம் $22\frac{3}{4}$. கோணப் பருமல் சபதாவியா ஒடுதை $1\frac{3}{4}$க்கு மீசானுக் காவிய நீளம் ஒடுதை $\frac{3}{4}$க்கு முழம் $11\frac{1}{4}$. வட்டப் பருமல் நீளம் 1க்கு முழம் 15. மீசுரனாக காவியப் பருமல் நீளம் ஒடுதை 7/8க்கு சவுதிலிப் பாய் மரம் ஒடுதை $2\frac{1}{4}$. சவுதிரிப் பருமல் ஒடுதை $1\frac{1}{8}$. இந்தப்படி ஒடுதை கண்டறியவும். யாதொரு கப்பலுக்கு நங்கூரம் வைக்கும் வகை எரா நீளமதைச் சரியடியாக்கி அடி 1க்கு ராத்தல் 26 பெரிய நங்கூரம். இரண்டாவது : நங்கூரம் தச்சு அடி 1க்கு ராத்தல்...மூன்றாவது தச்சு அடி 1க்கு ராத்தல் 12. நாலாவது நங்கூரம் தச்சு அடி 1க்கு ராத்தல் 8. இந்தப்படி பார்த்துச் செய்யவும். எரா நீளம் அடி $66\frac{1}{4}$. அணியத்து ரோதை நீளம் அடி 35. இதுக்கு விழுக்காடு அடி 13. அமரத்து ரோதை நீளம் அடி 24. இதுக்கு விழுக்காடு அடி 2. இதுக்கு தலுக்கு காசு உசத்தி அடி $11\frac{1}{8}$. அடி அகலம் அடி 23. அடி உசத்தி அடி $11\frac{1}{8}$. மையப் படத்தின் வார நீக்கம் அடி 27. தட்டுச்சிந்தை மேல் வாய் மட்டம் எராக் கணக்கு மேலே உசத்தி அடி $13\frac{1}{8}$. இதுக்கு கீழே அலுக்காசு ஒரு அடி போகக் கீழ் சிந்தை அலுக்காசு.''

மேற்கண்ட கப்பல்பாய் மரம், நங்கூரம் வகை பற்றிய அளவுகளில் பல தொழிற்கலைச் சொற்கள் இருப்பதைக் காணலாம்.

## கப்பல் சாத்திரம்—கலைச்சொற்கள்

அட்டிச் சிந்தை
அட்டித் தலுக்காசு
அட்டியிடம்
அணித்துக் குச்சை மட்டம்
அணியத்து ரோதை
அணியத்து விழுக்காடு
அமரத்து ரோதை
அமரத்து விழுக்காடு
அலுக்காசு
இசுக்காள இடம்
இலகுறாள் வாரிநீக்கம்
ஈசானப் பாய்மரம்

